



# சைவ வைணவத் தெய்வத் திருவுருவங்கள்

தி. இராசமாணிக்கம்

# சைவ வைணவத்
# தெய்வத் திருவுருவங்கள்




ஆசிரியர் :

தமிழகக் கோயிற் கலைச்செல்வர்

தி. இராசமாணிக்கம், பி.ஏ., பி.காம்., விசாரத்

[கூட்டுறவுச் சங்கங்களின் இணைப்பதிவாளர் (ஓய்வு)]





விற்பனை உரிமை :

திருநெல்வேலி தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

154, டி. டி. கே. சாலை, ஆள்வார்பேட்டை,

சென்னை-18.

[illegible] 1989 [illegible]

# அணிந்துரை

பொன் ஒன்று; அணிகலன் பல; மண் ஒன்று பாண்டங்கள் பல; அதுபோல் இறைவன் ஒருவன்; அடியார்கள் பொருட்டு இறைவன் திருவருளால் எடுத்துக் கொண்ட திருவுருவங்கள் பல.

"என்றாய பலவாய் உயிர்க்குயிராய
ஆடும்கருணைப் பரஞ்சோதி"

என்கின்றார் தாயுமானார்.

"அநாதியாய் பலவாய் ஒன்றாய்"

என்கின்றார் கச்சியப்பர்

அடியவர்களை ஆட்கொள்ளும் பொருட்டுப் பல்வேறு திருமேனிகளை எடுத்துக்கொள்கின்றான். இத்தகு இறைவனுடைய திருவுருவப் பாங்குகளைப் பலகாலம் ஆய்ந்து அன்பர்களின் அறிவுக்கு விருந்தாக அன்பர் தமிழகக் கோயில் கலைச் செல்வர் உயர்திரு தி. இராசமாணிக்கம் அவர்கள் அருமையாக அன்பர் கட்கு உதவியுள்ளார்.

இதனைப் படித்தாய பழமையான நுண் பொருள்களை அறியலாம். இது ஒரு பெரிய அரிய ஆராய்ச்சி நூல். ஏனோரும் படித்து மகிழ்வார்கள்.

நேரிசை வெண்பா

தெய்வத் திருவுருவம் என்னுந் திருநூலை
உய்வு பெறவேண்டி உவந்தளித்தான்—மெய்யவைத்த
மன்னு புகழ்ராச மாணிக்கம் ஓதிவோர்
இந்நிலத்தில் உய்வார் இனிது.

அன்பன்
கிருபானந்தவாரி

# முன்னுரை

இறைவன் ஓர் உருவம் ஒரு நாமம் இல்லாதவன்; இன்ன உருவினன், இன்ன இயல்பினன், இன்ன நிறத்தவன் என்று அறியப்படாதவன்.

"இன்ன உரு என்று அறி ஒண்ணாதான்" என்பது அப்பர் பெருமான் திருவாக்கு. இத்தன்மையனான இறைவன் தன் அடியார்கள் பொருட்டுப் பலவடிவங்களில் பல பெயர்களில் அருள்புரிகின்றான்.

இறைவனது பல்வேறு திருவுருவங்கள் ஒவ்வொன்றிற்கும் புராண வரலாறுகள் உண்டு. அவற்றிற்குத் தத்துவ ரீதியாகப் பொருள்கள் உண்டு. இந்த வடிவங்களை அமைக்க ஆகமங்களில் விதிகள் கூறப்பட்டுள்ளன. ஆகம விதிகளினின்றும் வேறுபட்ட வடிவங்கள் ஆங்காங்கு உள்ள திருக்கோயில்களில் காணப்படுகின்றன. ஒரு சில திருவுருவங்கள் காலம் செல்லச் செல்ல பல மாற்றங்களை அடைந்துள்ளன. இந்த அடிப்படையில் இறைவனது 12 திருவுருவங்களைப் பற்றிய கட்டுரைகள் இந்த நூலில் இடம் பெற்றுள்ளன. என்னுடைய திருத்தலங்களின் பயணத்தின் போது ஆங்காங்கு உள்ள இறைவனின் பல வடிவங்களை நேரில் கண்டு அவற்றைப் பற்றிய குறிப்புகளை இந்தக் கட்டுரைகளில் கொடுத்துள்ளேன்.

எனது வேண்டுகோளுக்கு இணங்கி, ஆன்மீகச் சொற்பொழிவு ஆற்றுவதில் ஈடு இணையற்றவரும், திருக்கோயில்களின் திருப்பணிகள், திருக்குடமுழக்குகள் பல நடத்தியவரும், முருகப் பெருமானது இன்றைய தலையாய அன்பருமான டாக்டர் திருமுருக கிருபானந்த வாரியர் சுவாமிகள் இந்த நூலுக்கு அணிந்துரை

அளித்துள்ளார்கள். அன்னாருக்கு நான் என்றும் கடமைப்பட்டுள்ளேன். இத்தகு பெருந்தகை, கோவை செல்லும் வழியில், என்னையும் ஒரு பொருளாகக் கருதி, தம் சிரமத்தையும் பாராது, என் இல்லம் வரை வந்து தம் அணிந்துரையைத் தம் அருளாசியுடன் நேரில் அளித்தார்கள் என்றால், நான் என்ன பேறு பெற்றேன்! இது என் வாழ்க்கையில் என்றும் மறக்க இயலாத ஒன்றாம்.

இந்த நூலை வெளியிட நிதி உதவி அளித்துள்ள திருமலை திருப்பதி திருக்கோயிலுக்கும், இதனைச் சிறப்பாக வெளியிட்டு, தமது பேராதரவினைத் தொடர்ந்து அளித்து வரும் கழக ஆட்சியாளர் திருமிகு இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ., பி. லிப்., அவர்களுக்கும் எனது உளங்கனிந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கின்றேன்.

''என்கடன் பணி செய்து கிடப்பதே''

தி. இராசமாணிக்கம்

## உள்ளுறை

பக்கம்

# சைவ வைணவத் தெய்வத் திருவுருவங்கள்



## 1. அணங்கு கொப்பளித்த மேனியர் [அப்பர்]

### [அர்த்தநாரீசுவர மூர்த்தி]

சிவபெருமானின் 25 திருவுருவங்களில் அர்த்த நாரீசுவர வடிவம் ஒன்று; அர்த்த+நாரி+ஈசுவரன் = அர்த்தநாரீசுவரன் என்பதாகிறது. அர்த்த என்றால் பாதி; நாரி என்றால் பெண்; ஈசுவரன் என்றால் சிவன்; எனவே அர்த்தநாரீசுவரன் என்றால் ஒரு பாதி பெண்; மற்றொரு பாதி சிவன் என்பது பொருளாகிறது. இதைத் தமிழில் "பெண்ணோடு ஆணாகிய பெம்மான்" என்பர்.

பிருங்கி என்ற முனிவர் நாடோறும் சிவபெருமானை வழிபட்டு வந்தார். ஒருநாள் அண்ணலும் அன்னையும் ஒருங்கு இருக்க, அன்னையை வழிபடாது, அவர் இறைவனை மட்டும் வணங்கிச் சென்றுவிட்டார். இதனால் துன்பமுற்ற இறைவி இறைவனை நோக்கி, "சக்தி வேறு சிவன் வேறு அல்ல; ஒன்று என்பதை அறியாத இந்த அன்பன் இவ்வாறு தங்களை மட்டும் வழிபட்டுச் சென்றுவிட்டான்; நாம் ஒருருவமாக இருந்தால், இவ்வாறு செய்யான், எனவே தங்களது உடம்பில் ஒரு பாதியை எனக்குத் தர வேண்டும்" என்று வேண்டினாள். அதற்கு இணங்கிச் சிவபெருமான் தனது இடப் பாதியை இறைவிக்கு அளித்தான்.

மறுநாள் இறைவனைத் தொழவந்த முனிவர் இறைவனும் இறைவியும் ஓருருவமாக இருப்பதைக் கண்டு வண்டு உருவம் எடுத்து இறைவனது உடலின் நடுவில் துளைத்து இறைவனை மட்டும் வணங்கிச் சென்றார். இதனால் கோபமுற்ற அன்னையின் சாபத்தால் பிருங்கி முனிவர் தம் சதைப் பற்றுக்களை இழந்து வெறும் எலும்புக்கூடானார். அந் நிலையிலும் அவர் நிலை குலையாது தன்னை வழிபடுவதைக் கண்ட இறைவன் மகிழ்ந்து அவர் நிலைத்து நிற்க மூன்றாவது காலையும் வேண்டிய வரங்களையும் வேண்டியாங்கு அளித்தான்.

இந்தத் திருவுருவினைப் போற்றாத திருவருட் செல்வர்கள் இல்லை என்று சொல்லலாம். "பெண் காட்டும் உருவானும்" என்றும், "பெண்ணமர்மேனி" என்றும் ஞான சம்பந்தப் பெருமான் போற்றிசைப்ப, "நங்கை பாகம் வைத்த நறுஞ் சோதியை" என்றும், "பெண்ணுருவோடு ஆணுருவாய் நின்றாய்" என்றும் அப்பர் அடிகள் பரவுகிறார். "ஆணோடு பெண்ணும் உருவாகி நின்றாய்" என்றும், "பந்தாடும் விரலாள் ஒரு பாகம் அமர்ந்தவனே" என்றும் சுந்தரர் துதிக்கிறார். மணிவாசகப் பெருந்தகையார்,

"தோலும் துகிலும் குழையும் சுருள்தோடும்
பால்வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியும்
சூலமும் தொக்கவளையும் உடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ"
[திருக்கோத்தும்பீ : 18]

என்று இந்த வடிவினை அழகு ஓவியமாகத் தீட்டியுள்ளார். வலப்பாகமாகிய ஆண் பாதியில் புலித்தோல், குழை, திருநீறு, சூலம் ஆகியவை இருக்க, இடப்பாகமாகிய பெண் பாதியில் மெல்லிய ஆடை, தோடு, சாந்து, பச்சைக் கிளி, வளையல்கள் ஆகியவை காணப்

படுகின்றன. மேலும் இந்தத் திருவுருவம் பழமையான வடிவம் என்றும் குறிப்பிட்டுள்ளார்.

பராசக்தி அருட்சக்தி அதாவது அருளே திருமேனியாக உடையவள். அத்தகு அருளையே தன் வடிவமாகக் கொண்ட அன்னையைத் தன் ஒரு கூறாக உடையவன் இறைவன் என்பது அவனது அருட்திறத்தைக் குறிக்கிறது. இதைத்தான் சேக்கிழார் பெருமான் தம் திருத்தொண்டர் புராணத்தில்,

"கொத்தலர் மலர்க்குழலாள் ஒரு கூறாய்
அடியவர்பால்
மெய்த்தாயினும் இனியானை" (220)

என இறைவன் அடியார்பால் அன்புடைமைக்கு அன்னையைத் தன் ஒரு கூறாக உள்ளதுதான் காரணம் என்கிறார். மேலும் "பெண்பாதி அடியார்களைப் பேணும் இயல்பினையும், ஆண்பாதி அடியார்களை ஆட்கொள்ளும் திறத்தையும் சுட்டிக் காட்டுகின்றன. இதற்குக் காரணம் அன்னை அன்பின் திருவுருவமாகவும், அத்தன் ஆற்றலின் திருவுருவமாகவும் உள்ளதுதான். தன் குழந்தையிடம் தாய் கொண்ட கைமாறு கருதாத அன்பிற்கு ஒப்பதும் மிக்கதும் இல்லை. அன்னையை ஒருபாதியாக உடைய இறைவன் மணிவாசகப் பெருமான் அருளியபடி "பால் நினைந்து ஊட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து" இருப்பதில் வியப்பு ஏதும் இல்லை அல்லவா? அண்ணல் அன்னையை ஒரு கூறாகக் கொண்டது, தான் இன்பம் அனுபவிக்க அல்ல; உயிர்கள் இன்பம் அடைதற் பொருட்டாம். உயிர்கள் இன்பம் அடைய இந்த வடிவினை இறைவன் கொண்டாலும், அவன் ஒரு யோகியே. இதைத்தான் தாண்டக வேந்தர் "அறுத்தார் புலனைந்தும் ஆயிழை பாகம்" என வலியுறுத்தியுள்ளார். மேலும் இந்தத் திருவுரு இறைவன் உயிர்கள் யாவிற்கும் தானே தந்தையும் தாயுமாகி

அருள் புரியும் இயல்பைக் குறிக்கிறது. இறைவன் தன் ஒரு பாதியை அன்னைக்கு அளித்ததன் மூலம் உலக வாழ்க்கையின் ஆணும் பெண்ணும் சமநிலையில் கூடி, அன்பினால் ஒன்றாக இணைந்து, இருவருக்கொருவர் உறுதுணையாக வாழவேண்டியதின் அவசியத்தை வலியுறுத்துகிறார்; இதைத்தான் மகாகவி பாரதியார்,

> "ஆண்களோடு பெண்களும்
> சரிநிகர் சமானமாக
> வாழ்வம் இந்த நாட்டிலே"

என்று கூறினார்.

இந்த உருவத்தின் தத்துவமும் கூறப்படுகிறது. சைவத்தில் சிவபெருமானே முழுமுதற் பொருள் என்று வணங்கப்பட்டார். சாக்தத்தில் சக்தியே தனிப்பெரும் பொருளாகத் தொழப்படுகிறாள். சிவபெருமானா முழு முதற்பொருளா அன்றிச் சக்தியா என்ற கேள்விக்கு இடமின்றி, "மதுரவாய் மொழி மங்கையோர் பங்கினர்" வடிவம் சைவம் மற்றும் சாக்தம் என்ற இரு பிரிவுகளுக்கும் ஏற்பட்ட சமரச நிலை என ஆராய்ச்சியாளர் கருத்துத் தெரிவித்துள்ளனர். "சிவன் இன்றேல் சக்தி இல்லை; சக்தி இன்றேல் சிவன் இல்லை" என்றும்,

> "சிவஞ் சக்தி தன்னை யீன்றும்
> சக்திதான் சிவத்தை யீன்றும்"

என்றும் சொல்லக்கூடிய அளவிற்கு ஏற்பட்ட சமரச மனப்பான்மையின் விளைவுதான் இந்தத் திருவுரு. சிவமும் சக்தியும் ஒன்றே என்பதனைத் திருநாவுக்கரசு பெருமான் "உமையலாது உருவமில்லை" என்றும் "இரண்டுமாய் அவர்க்குள்ளன கோலங்கள்" என்றும் வலியுறுத்தி யுள்ளார்.

...ஐம்பெருங் காப்பியங்களில் ஒன்றான சிலப்பதிகாரத்தில் கட்டுரை காதையில் மதுரையம்பதியின் காவல் தெய்வமான மதுராபதியின் திருவுருவை,

"சடையும் பிறையும் தாழ்ந்த சென்னிக்
குவளை உண்கண் தவளவாள் முகத்தி
கடையெயிறு அரும்பிய பவளச் செவ்வாய்த்தி
இடைநிலா விரிந்த நித்தில நகைத்தி
இடமருங்கு இருண்ட நீல மாயினும்
வலமருங்கு பொன்னிறம் புரையு மேனியள்
இடக்கை பொலம்பூந் தாமரை ஏந்தினும்
வலக்கை அம்சுடர் கொடுவாள் பிடித்தோள்
வலக்கால் புனைகழல் கட்டினும் இடக்கால்
தனிச்சிலம்பு அரற்றுந் தகைமையள்"

—(வரி 1-10)

...இளங்கோவடிகள் விரித்துரைக்கிறார். மதுராபுரித் தெய்வத்தின் தலையில் பிறையுடன் கூடிய சடை உள்ளது. குவளை மலரைப் போன்ற மையுண்ட கண்களை உடைய அவள் பவளம் போன்ற சிவந்த வாயையும், கடை வாயினின்றும் வெளிப்பட்டுத் தோன்றும் ...யும் உடையவள்: அவளது இடப் பாதி நீலமணியின் நிறத்தையும், வலப் பாதி பொன்னின் நிறத்தையும் ... அவள் இடக்கையில் தாமரை மலரும், வலக்கையில் ...வும் ஏந்தியுள்ளாள், மேலும் அவள் இடக்காலில் சிலம்பும் வலக்காலில் வீரக்கழலும் அணிந்து... ஆணொடு பெண்ணாகிய அம்மானின் வடிவம் என்பதைத் தெளியலாம். மேலும் இமய மலையில் குயிலாலுவம் என்ற இடத்தில் "உமையொரு பாகத்து ஒருவன்" கோயில் உள்ளதாகக் குறிப்பிட்டுள்ளார்.

ஆகமங்களின்படி, ஆண் பாதியில் தலையில் பிறையுடன் கூடிய சடாமகுடமும், வலக் காதில் ...

குண்டலம் அல்லது சர்ப்பக் குண்டலம் அல்லது சாதாரண குண்டலம் காணப்பட வேண்டும். நெற்றியில் பாதிக்கண் இருக்க வேண்டும். புலித்தோல் வல முழங்கால் வரையில் காணப்பட, வலது மார்பில் பாம்பு முப்புரி நூலாகவும், இடுப்பில் வலப்பாதியில் பாம்பாலான அணிகலன் இருக்க வேண்டும். வலக்கால் வளைந்தோ அல்லது நேராகவோ தாமரை இருக்கை மீது காட்டப்பட வேண்டும். திருநீறு அணியப்பட்டு, அச்சத்தை அளிக்கும் வகையில் உருவாக்கப்பட வேண்டும்.

பெண் பாதியில் தலையில் கரந்த மகுடம் அல்லது கொண்டை அமைக்கப்பட வேண்டும். நெற்றியில் பாதிக் கண்ணையொட்டி பாதிப் பொட்டு இருக்க வேண்டும். இடக் கண் மையூட்டப் பெற்று, இடக் காதில் தோடு அணியப்பட்டிருக்க வேண்டும். இடக் மார்பகத்தில் கொங்கையும், மாலையும் உருவாக்கப்பட வேண்டும். பட்டாலான ஆடை இடது கணுக்கால் வரையில் காட்டப் பட வேண்டும். இடுப்பில் இடப் பாதியில் மேகலாபரணமும், இடக்காலில் சிலம்பும் அமைக்கப்பட வேண்டும். இடக்கால் தாமரை இருக்கை மீது நேராகவோ அல்லது சாய்ந்தோ இருக்க வேண்டும். ஆண் பாதி முகத்தில் காணப்படும் அச்சம் அளிக்கும் நிலைக்கு மாறாக, பெண் பாதி முகத்தில் அமைதி தவழ வேண்டும்.

இந்த வடிவிற்கு 2, 3 அல்லது 4 கைகளை அமைக்கலாம். இரு கைகள் கொண்ட திருவுருவின் வலக்கை அபய முத்திரையில் இருக்கலாம் அல்லது சிவபெருமானுக்குரிய மண்டையோட்டை ஏந்தியிருக்கலாம். இடக்கை லம்பித முத்திரையில் இருக்கலாம் அல்லது கண்ணாடி, கிளி அல்லது மலரை வைத்துக்கொண்டிருக்கலாம். அல்லது பின்னால் நிற்கும் காளை மீது வைக்கப்பட்டிருக்கலாம். 3 கைகளை அமைப்பதாக இருந்தால் வலப் பாதியில் இரு கைகளும், இடப் பாதியில் ஒரு

கையும் உருவாக்கப்பட வேண்டும். வலப் பக்கத்தில் உள்ள இரு கைகளைக் கீழே குறிப்பிடுமாறு அமைக்கலாம் :-

அ) அபய முத்திரை மற்றும் மழு;

ஆ) வரத முத்திரை மற்றும் சூலம்;

இ) ஒருகை அபய முத்திரையிலும், மற்றொரு கை பின்னால் நிற்கும் காளை மீதும் இருக்கலாம்;

ஈ) சூலம் மற்றும் அக்கமாலை;

4 கைகள் கொண்ட திருவுருவில் இடப் பக்கத்தில் உள்ள இரண்டு கைகளில் ஒன்று கத்யவலம்பித முத்திரை அல்லது நீலோற்பல மலரை ஏந்திய படி கடக முத்திரையிலும், மற்றொரு கை பின்னால் நிற்கும் காளை மீதும் இருக்க வேண்டும்.

சிவபெருமானைத் தனியாக அமைக்கும்போது பொதுவாக 4 கைகளுடன் உருவாக்கப்படுவான்; அவனது முன்வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை வரத முத்திரையிலும் இருக்கும். பின் வலக் கையில் மழுவும், பின் இடக்கையில் மானும் அமைக்கப் பட்டிருக்கும். இறைவனின் வலப்பாதி ஆண் என்பதால் பின் வலக் கையில் போர்ப் படைக்கலமான மழுவும், இடப்பாதி பெண் என்ற காரணத்தால் பின் இடக் கையில் மானும் உருவாக்கப்படுகின்றன என்று கொள்ளலாம்.

தமிழகத்தில் இந்தத் திருவுரு காலஞ் செல்லச் செல்ல மாற்றங்கள் அடைந்துள்ளதாக, திரு. சி. சிவராமமூர்த்தி கருத்துத் தெரிவித்துள்ளார். முற்காலத்தில் இந்த வடிவிற்கு 3 கைகள் அதாவது ஆண் பாதியில் இரு கைகளும், பெண் பாதியில் ஒரு கையும் உருவாக்கப்

பட்டன. பிற்காலச் சோழர் காலத்திலிருந்து இதற்கு 4 கைகள் அமைக்கப் பெறலாயின. ஆண் பாதியில் உள்ள காதில் குழையும், பெண் பாதியில் உள்ள காதில் தோடும் அமைக்கும் மரபு தென்னகத்தில்தான் உள்ளது என்றும், வடநாட்டில் இத்தகைய அமைப்பு அரிதாகக் காணப்படுகிறது என்றும் அவர் மேலும் குறிப்பிட்டுள்ளார். ''தோடுடைய செவியன்'' என்ற திருஞான சம்பந்தப் பெருமானின் திருவாக்கு இங்கு நினைவு கூரற்பாலது.

இயற்கைக் கோள்கள் போன்றவற்றால் எக்காலத்தும் அழியாத திருக்கோயில்களை இறைவனுக்கு அமைக்கும் முயற்சியில் முதற்கட்டமாகக் கருதப்படுவது குடைவரைக் கோயில்களாம். பல்லவப் பேரரசர்களால் உருவாக்கப்பெற்று, தமிழகத்திற்கு தனிச் சிறப்பு அளித்து வரும் மாமல்லபுரத்தில் உள்ள குடைவரைக் கோயில்கள் மற்றும் மலைதளிகளில் தர்மராஜஇரதம் ஒன்று. இந்த இரதத்தில் உருவாக்கப் பெற்றுள்ள ஆணொடு பெண்ணாகிய பெம்மான் வடிவம் தான் காலத்தால் தொன்மையானதாகக் கருதப்படுகிறது. சமபங்க நிலையில் நிற்கும் இந்த வடிவின் 4 கைகளில் முன்வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை கத்யவலம்பித முத்திரையிலும் காணப் படுகின்றன, பின்வலக்கையில் மழுவும், பின் இடக் கையில் மானும் உள்ளன. இந்த வடிவின் இடக்காதில் தோடும், மார்பின் இடப் பாகத்தில் கொங்கையும், இடப்புறம் நுண்ணிய இடையும், இடக் கைகளில் வளையல்களும் அமைக்கப்பட்டுள்ளன. வலக் காதில் குழையும், இடுப்பில் வலப்புறம் பாம்பு அணிகலனாகவும், வலது முழங்கால் வரை ஆடையும், வலக்கைகளில் கடகமும் உருவாக்கப்பட்டுள்ளன. பெண் பாதியில் உருவாக்கப்பெற்றுள்ள நுண்ணிய இடையும், கொங்கையும் ஆண் பாதியில் காணப்பெறும் கட்டமைந்த தோளும் அகன்ற மார்பும் இயற்கையாக

அமைந்துள்ளது. உடலுறுப்புக்களைப் பற்றிய சிற்யின் நுண்ணறிவைப் புலப்படுத்துவதாகத் திரு. சி. சிவராம மூர்த்தி குறிப்பிட்டுள்ளார்.

மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்தின் தென் பகுதியில் உமையாண்டார் கோயில் என்ற குடைவரைக் கோயில் உருவாக்கப்பட்டுள்ளது. இங்கு ஆணோடு பெண்ணாகிய பெம்மானின் வடிவம் கருவறையில் புடை சிற்பமாகக் காணப்படுகிறது. 4 கைகளுடனும் தன் ஊர்தியான காளையுடனும் இந்த வடிவம் திரிபங்க நிலையில் உள்ளது. கைகள் எல்லாம் உடைந்துள்ளமையால், அவற்றில் என்ன இருந்தது என்பதை அறிய இயலவில்லை. குடைவரைக் கோயிலைத் தமிழகத்தில் தோற்றுவித்த பல்லவப் பேரரசன் மகேந்திரவர்மன் மற்றும் அவன் மகன் மாமல்லன் காலத்தில் உருவாக்கப் பெற்ற குடைவரைக் கோயில்களின் கருவறையில் இறைவனின் எந்தத் திருவுருவும் இல்லை. இவர்கள் வழிவந்த பரமேசுவரவர்மன் மற்றும் இராசசிம்மன் காலத்தில் கருவறையின் பின்சுவரில் சிவனுமை முருகுவின் (சோமாஸ் கந்தர்) வடிவம் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டது. ஆனால் இங்குள்ளதைப் போன்று ஆணோடு பெண்ணாகிய பெம்மானின் வடிவம் கருவறையின் பின் சுவரில் புடை சிற்பமாக வேறு எந்தக் குடைவரைக் கோயிலிலும் இருப்பதாகத் தெரியவில்லை.

கருவறையின் பின்சுவரில் உள்ள புரையில் இத்தகு வடிவங்களை அமைக்கும் மரபு கி.பி. 871 முதல் 907 வரை சோழ அரியணையை அலங்கரித்த முதலாம் ஆதித்த சோழன் காலம் வரை பின்பற்றப்பட்டு வந்தது. தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருப்பூந்துருத்தி, திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த உய்யக்கொண்டான் மலை ஆகிய தலங்களில் உள்ளவற்றைச் சான்றுகளாகக் கூறலாம். இந்த மரபு ஆதித்த சோழன்

மகன் முதல் பராந்தக சோழன் கால முதல் மாற்றப் பட்டதாகத் தெரிகிறது.

ஆணோடு பெண்ணாகிய பெம்மானை மூலவராகக் கொண்ட திருக்கோயில்கள் தமிழகத்தில் இரண்டுதான் உள்ளனவாகத்தெரிகிறது. அவற்றில்ஒன்றுதிருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த வாசுதேவ நல்லூரில் உள்ள சிந்தாமணி நாதர் திருக்கோயில். தென்காசியினின்றும் மதுரை செல்லும் பெரு வழியில் இந்த ஊர் உள்ளது. ஆணோடு பெண்ணாகிய வடிவில் இறைவன் புளிய மரத்தடியில் (சிந்தம்: புளி) காட்சி அளித்த காரணத் தால், சிந்தாமணிநாதர் என்று அழைக்கப்பெறுகிறான். கருவறையில் இறைவன் 4 கைகளுடன் நுண்ணேர் இடையாள் ஒரு கூறுடையவனாகக் காட்சி அளிக்கிறான். இத்தகு வடிவங்களுடன் உருவாக்கப்பட வேண்டிய காளை இங்கு இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. இவனது வலப் பாதியில் முன்கையில் கபாலமும், பின் கையில் சூலமும் சிவபெருமான் என்பதற்கேற்ப அமைக்கப்பட்டுள்ளன. ஆகமங்களின்படி, ஒரு கை சூலத்தை ஏந்தியுள்ளது. ஆனால் மற்றொரு கையில் வரத முத்திரை அல்லது அக்க மாலையை அமைக்கப்பட வேண்டும் என்பதற்குப் பதில் கபாலம் உருவாக்கப் பட்டுள்ளது. இடப்பாதி அன்னை என்பதற்கு இணங்க, முன்கையில் நீலோற்பல மலரும், பின்கையில் பாசமும் காணப்படுகின்றன. ஒரு கையில் ஆகம விதியின்படி நீலோற்பல மலர் இருப்பினும், மற்றொரு கை பாசத் துடன் உள்ளது. இவ்வாறு ஆகமத்தில் கூறப்படாத பாசம் இருக்கக் காரணம் இந்த வடிவிற்குப் பின்னால் காளையை உருவாக்காததுதான் என்று கொள்ளலாம். திரிபங்க நிலையில் நிற்கும் இந்த வடிவின் பெண் பாதி யின் கால் சற்று மடிந்து அழகாக உள்ளது. வலக் காதில் குழையும், இடக் காதில் தோடும் காணப்படு கின்றன. மேலும் பெண் என்பதற்கு ஏற்ப மார்பின் இடப் பாகத்தில் கொங்கை அமைக்கப்பட்டுள்ளது.

ஆகம விதிகளின்படி, தலையின் வலப் பாதியில் சடா மகுடமும், இடப் பாதியில் கரந்த மகுடம் அல்லது கொண்டை இருக்க வேண்டும்; ஆனால் இங்குத் தலையில் கிரீடம் அமைக்கப்பட்டுள்ளது.

"வாருலா முலை மங்கையோர் பங்கினன்" வடிவில் மூலவராக உள்ள புகழ்மிக்க திருக்கோயில் சேலம் மாவட்டத்தைச் சார்ந்த திருச்செங்கோடாம்; இளங்கோவடிகளின் சிலப்பதிகாரத்தில் 'குன்றக்குரவை' என்ற பகுதியில் இந்தத் தலம் பேசப்பட்டுள்ளது. திருக் கொடி மாடச் செங்குன்றூர் என்று அக்காலத்தில் பரவப்பெற்ற இந்தத் தலத்தின் மீது ஞானசம்பந்தப் பெருமான் திருப்பதிகம் பாடியுள்ளார். அதில் "பந்தணவும் விரலாள் ஒருபாகம் அமர்ந்தருளி," என்றும், "மலைமகள் கூறுடையாள்" என்றும், "ஏல மலர்க்குழலாள் ஒரு பாகம் அமர்ந்தருளி" என்றும், "வாருறு கொங்கை நல்ல மடவாள் திகழ் மார்பில்" என்றும் இந்தத் தலத்தில் உள்ள திருவுருவைப் போற்றி யுள்ளார்.

கருவறை மேற்கு நோக்கி அமைந்துள்ளது. அதன் எதிரில் வாயில் கிடையாது; ஓர் அழகான பலகணி தான் உண்டு. சுமார் 6 அடி உயரமுள்ள மூலவர் அழகு மிளிரக் காட்சி அளிக்கிறார். சிலர் வடிவங்கள் பொது வாகக் கருமையாக இருப்பது போன்று இல்லாது, இந்த வடிவம் வெண்மை நிறத்தில் காணப்படுவது ஒரு தனிச் சிறப்பாம். இரு கைகள் கொண்ட இந்த வடிவத் தின் வலக் கையில் தடியும், இடக் கை கடி முத்திரை யிலும் உள்ளன. வலப் பாதியில் சிவபெருமான் என்பதற்கு ஏற்ப சடா மகுடமும், இடப்பாதி அன்னை என்பதற்கு இணங்க தலைக்குப் பின்னால் பின்னலும் காணப்படுகின்றன. வலக் காதில் சர்ப்ப குண்டலமும், இடக் காதில் மகர குண்டலமும் உள்ளன. இரு கால் களுக்கு இடையில் இறைவனது ஆடையின் ஒரு பகுதியும்,

இடக் காதுக்கு வெளிப்புறமாக அன்னையின் ஆடை யின் ஒரு பகுதியும் தொங்கிய நிலையில் உள்ளன. திரிபங்க நிலையில் நின்ற திருக்கோலத்தில் உள்ள இந்த வடிவின் மார்பின் இடப் பாதியில் பெண் என் பதற்கு இணங்க கொங்கை காணப்படுகிறது. இது தானாகத் தோன்றிய வடிவம் எனப் போற்றி வணங்கப் படுகிறது. வலக் கையில் தடியும், இடக் கை கடி முத்திரையிலும் உள்ளது. ஆகம விதிகளினின்றும் வேறு பட்டுள்ளது. இந்தத் திருவுருவின் பின்னால் இறை வனின் வார்தியான காளை இல்லை என்பது குறிப்பிடத் தக்கது. ஆண்பாதி கோலை ஏந்தி உள்ளது மிடுக்காகக் காணப்படுகிறது. இத்தகைய அமைப்பு வேறு எங்கும் இல்லை. உலகைக் காப்பவன் என்ற முறையில் அரசன் கையில் செங்கோல் இருப்பது போன்று எல்லா உலகங் களையும் படைத்து, அளித்து, அழிக்கும் வல்லமை பெற்றவன் என்பதைக் குறிக்க மூலவரின் கையில் கோல் உள்ளதாகக் கூறும் கருத்து பொருத்தமாகவே உள்ளது. மூலவரின் காலடியில் நீர் ஊறிக் கொண்டு இருக்கிறது; இது தேவதீர்த்தம் என்று அழைக்கப்பெறுகிறது; மூலவரைப் போன்று திருவீதி உலா நாயகனும் (உற்சவர்) அமைக்கப்பட்டுள்ளான்.

ஆகமவிதிகளின்படி, இந்த வடிவம் நின்ற நிலையில் உருவாக்க வேண்டும்; திருக்கோயில்களில் இந்த வடிவம் பொதுவாக நின்ற நிலையில்தான் காணப்படு கிறது. இதினின்றும் வேறுபட்ட வடிவம் தஞ்சாவூரி லின்றும் திருவையாறு செல்லும் வழியில் உள்ள அட்ட வீரட்ட தலங்களில் ஒன்றான திருக்கண்டியூரில் உள்ளது. சம்பந்தர் மற்றும் அப்பர் பெருமக்களின் தேவாரப் பாடல் பெற்ற இந்தத் திருக் கோயிலின் இரண்டாவது திருச்சுற்றில் கிழ்ப்புறம் ஆணொடு பெண்ணாகிய பெம்மானின் வடிவம் உள்ளது; உட்கார்ந்த நிலையில் உள்ள இந்த வடிவிற்குப் பின்னால் அவனது வார்தியான

காளை படுத்த நிலையில் காணப்படுகிறது. 4 கைகள் உடைய இந்த வடிவின் முன்வலக் கை பின்னால் படுத்து இருக்கும் காளை மீதும், பின்வலக் கையில் சிவபெருமானின் மழுவும் உள்ளன. ஆகமங்களில் ஒரு கையில் மழு அல்லது காளை மீது வைக்கப்பட்டுள்ளதாக அமைத்தால், மற்றொரு கை அபய முத்திரையில் இருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது. ஆனால் இங்கு அபய முத்திரையில் கை இல்லை என்பது குறிப் பிடத்தக்கது. பெண் பாதியான இடப் பக்கத்தில் முன்கையில் ஆகமங்களின்படி மலர் காணப்படுகிறது. பின்கை பின்னால் உள்ள காளைமீது இருக்க வேண்டும் என ஆகமங்கள் விதித்திருக்க, இங்கு அவ்வாறு உருவாக்கப்படவில்லை. அந்தக் கையில் ஏதோ பொருள் உள்ளது; அது சரியாகத் தெரியவில்லை. வலக் காதில் குழையும், இடக் காதில் தோடும் காணப்பட, மார்பின் இடப் புறத்தில் கொங்கை உள்ளது. இடக் கால் குத்திட்டும், வலக் கால் தொங்கிய நிலையிலும் அதாவது உத்குடி இருக்கையில் இந்த வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது. இத்தகு வடிவம் காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயிலில் உள்ளதாகத் தெரிகிறது. உட்கார்ந்த நிலையில் உள்ள ஆணொடு பெண்ணாகிய பெம்மானின் திருவுரு அரிய கலைப் படைப்பாகும்.

இறைவனின் இடப் பாதியில்தான் உமையன்னை உறைவதாகத் திருவருட் செல்வர்கள் அருளியுள்ளனர். திருக் கோயில்களில் உள்ள இத்தகு வடிவங்களில் இடப் பாதியில்தான் பெண்ணிற்கான அமைப்புகள் காணப் படுகின்றன. இதினின்றும் வேறுபட்ட திருவுரு மூவரது பாடல்களைப் பெற்ற திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திருமழபாடி திருக்கோயிலில் உள்ளது. இங்குள்ள மண்டபத்தில் உள்ள இந்த வடிவில் இடப் பாதக்குப் பதிலாக வலப் பாதியில் பெண் என்பதற்கான கொங்கை, நுண்இடை ஆகியவை உருவாக்கப்

பட்டுள்ளன. இடப் பாதி ஆண் அமைப்பைக் கொண்டுள்ளது. இவ்வாறு இந்த வடிவில் மாறி அமைத்தற்கு ''வால்மீகி இராமாயணத்தில்'' ஆதாரம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. இது எங்கும் இல்லாத ஒரு கலைச் செல்வமாம்.

## 2. ''மரகதக் கொடியுடன் விளங்கும் வள்ளலார்''

## [சேக்கிழார் பெருமான்]

### [உமாசகித மூர்த்தி]

ஆதியும் அந்தமும் அற்ற அண்ணலாம் இறைவன் அன்னையுடன் திருக்கயிலாய மலையில் வீற்றிருப்பதாகப் போற்றப்படுகிறான். இந்தத் திருக் கோலத்தைக் கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தமது 'கந்த புராணத்தில்,'

''சோதி சேரும்அத் தாணிமண் டபத்து
ஆதி யான அரியணை உம்பரிற்
காத லாகும் கவுரி யோர் பாங்குற
வேத நாயகன் வீற்றிருந் தான்அரோ'' [1-1-18]

என விவரித்துள்ளார். திருக்கயிலாயத்துள்ள அழகிய மண்டபத்தில் சிங்காசனத்தின்மேல் இறைவன் தன் அருட் சக்தியான உமையுடன் வீற்றிருந்தான் என்பதாம்.

திருக்கயிலாயக் காட்சியைத் திருவையாற்றில் கண்டு களித்த நாவின் மன்னர் ''யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்'' என்ற வாக்குப்படி அதை உலகோர் அறிந்து உய்யும் பொருட்டு ''மாதர் பிறைக் கண்ணியானை'' என்று தொடங்கும் திருப்பதிகத்தில் அந்தக் காட்சியை எடுத்து உரைக்கிறார். இந்தத் திருப்பதிகத்தின் ஒவ்வொரு திருப் பாடலிலும் அவர் இறைவனை இறைவியுடன் சேர்த்தே பாடியுள்ளார். ''மாதர் பிறைக்கண்ணியினானை மலையான் மகளொடும் பாடி'', ''போழிளங் கண்ணியினானைப் பூந்து கிலா

னொடும்பாடி'' ''பிறை யிளங்கண்ணியினானை பெய் வளையா ளொடும்பாடி'', ''ஏடுமதிக் கண்ணியினானை ஏந்திழையா ளொடும்பாடி'', ''தண் மதிக் கண்ணி யினானைத் தையல் நல்லா ளொடும்பாடி'', ''கடிமதிக் கண்ணியினானைக் காரிகை யாளொடும் பாடி'', ''விரும்புமதிக் கண்ணியினானை மெல்லியலா ளொடும் பாடி'', ''முற்பிறைக் கண்ணியினானை மொய்குயிலா ளொடும் பாடி'', ''திங்கள் மதிக் கண்ணியினானைத் தேமொழியா ளொடும் பாடி,'' ''வளர் மதிக்கண்ணி யினானை வார்குழலா ளொடும் பாடி'' என்பன அவர்தம் திருவாக்குகளாம். இறைவன் இறைவியுடன் ஒருங்கு இருப்பதால், யானை, குயில், மயில், பன்றி, மான், நாரை, கிளி போன்ற உயிர்த் தொகைகள் எல்லாம் தத்தம் காதற்றுணையோடு இருப்பக் கண்டார். இது இறைவன் இறைவியுடன் இருப்பது ஆருயிர்கள் போகம் துய்ப்பதற்காக என்பதை உணர்த்துகிறது.

''சாழல்'' என்னும் ஒருவகை தமிழக மகளிர் விளையாட்டு எனப்படும் வினா விடை மூலம் மணிவாசகப் பெருமானார் இறைவனும் இறைவியும் ஒருங்கு இருப்பதன் ஐயத்தையும் அதற்கான விடையை யும் அளித்துள்ளார். இறைவன் ஒரு பெண்ணை விரும்பி மணந்தான் ; எனவே அவன் ஒரு பெரும் பித்தன் அல்லவா என ஒரு பெண் கேட்க, அதற்கு மற்றவள் அண்ணல் அன்னையை விரும்பாவிடில் ஆருயிர்கள் ஆண் பெண் சேர்க்கையின்றி யோக நிலை எய்தும் என்றும், அவை பேறின்றி மண்ணில் மாண்டு விண் போய் அடையும் என்றும் பதில் அளிக்கிறாள்.

''தென்பால் உகந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பால் உகந்தான் பெரும்பித்தன் காணேடி
பெண்பால் உகந்திலனேல் பேதாய் இருநிலத்தோர்
விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ'' (9)

என்பது அவர் திருவாக்கு. மேலும் அவர்

''மலையரையன் பொற்பாவை வாணுதல்
பெண்திருவை
உலகறியத் தீ வேட்டான் என்னுமதி என்னேடீ
உலகறியத் தீ வேளாது ஒழிந்தனனேல்
உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்கள் எல்லாம் கலங்கிடுங்
காண் சாழலோ''

என்றும் அருளியுள்ளார். இறைவன் மலையரையன் பாவையை மணந்து கொண்டது அவனுக்குப் பழியாகாதோ என்று ஒருத்தி கேட்கிறாள். அதற்கு மற்றொருத்தி ''அவ்வாறு அவன் மணம் புரியாவிடில், உலகில் தடுமாற்றமும் பெருங்குழப்பமும் ஏற்படும் எனப்பதில் அளிக்கிறாள். இவையும் ஆருயிர்கள் பொருட்டே இறைவன் இறைவியுடன் உள்ளான் என்ற கருத்தினைத்தான் சுட்டிக் காட்டுகின்றன. பரஞ்சோதி முனிவர் தமது திருவிளையாடற்புராணத்தில் இறைவன் பாண்டியன் மகளாக உதித்த தடாதகைப் பிராட்டியாரை மணம் புரிந்ததை'' வையம் புணர்வுறு போகம் மூழ்கப் புருடனும் பெண்ணுமாகி மணவினை முடித்தான்'' என்று இதே கருத்தை வலியுறுத்துகிறார்.

மேலும் அன்னை இறைவனை விட்டுப்பிரிந்து இமய மலையரையன் மகளாக வளர்ந்து வருங்காலத்து, இறைவன் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமரார் ஆகிய நான்கு முனிவர்களுக்காக யோக நிலையில் அமர்ந்தான். இவ்வாறு இறைவன் யோக நிலையில் அமர்ந்து இருந்த காலத்தில் ஆண் பெண் முயக்கம் இன்றி உயிர்த்தொகை பெருகவில்லை.

''அன்னைதன்னை அகன்று அரன்யோகிபோல்
என்னதுஞ் செயலின்றி இருத்தலான்

முன்னை ஆண் பெண் முயக்கமது இன்மையாய்
மன்னுயிர்த்தொகை மல்கல் இன்று ஆயதே
[1-3-67]

என்பது கந்தபுராணம். அன்னையை இறைவன் மணந்த பின் உயிர்கள் துன்பம் நீங்கி இன்பம் உற்றன என்று கந்த புராணம் மேலும் கூறுகிறது.

"ஆதியம்பரமன்மாது
தன்புடையாகச் சீயத்தவிசின் வீற்றிருத்தலோடும்
துன்பகன்று இருபாலகித்துவன்றிய உயிர்கள்
எல்லாம்
இன்பொடு போகம் ஆற்றி இனிது அமர் உற்றன
அன்றே [1-10-96].

இந்தப்புராண வரலாறும் இறைவன் அன்னையுடன் ஒருங்கு இருப்பது உயிர்கள் இன்பம் துய்த்துப் பல்கி பெருகத்தான் என்பதைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது.

'சில்பரத்தினம்' என்ற நூலின்படி, 4 கைகள் கொண்டது சிவபெருமானின் சுகாசன வடிவம். பின் வலக்கையில் மழுவும், பின் இடக்கையில் மானும் காணப்பட, முன்வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கை வரத முத்திரையிலும் இருக்கவேண்டும். இருக்கையில் அமர்ந்துள்ள இந்த வடிவின் இடக்கால் மடங்கி இருக்கைமீது இருக்க வலக்கால் தொங்கிய நிலையில் காணப்படும். 'பூர்வ கர்ணாமகத்தின்படி, வலக்கால் மடங்கி இருக்கைமீது இருக்க, இடக்கால் தொங்கிய நிலையில் உருவாக்கப்படவேண்டும். இந்த வடிவுடன் அன்னையை அமைத்தால், அது உமா சகிதமூர்த்தி [அன்னையுடன் கூடிய அண்ணல்] என்று அழைக்கப்பெறும். 2 கைகள் கொண்ட அன்னை அண்ணலுக்கு இடப்பாகத்தில் உட்கார்ந்து, அண்ணலை

நோக்கியவாறு இருக்க வேண்டும். வலக்கையில் தாமரை மலரும், இடக்கை இருக்கை மீது நேராக வைத்திருக்கவேண்டும், தலையில் கரந்த மகுடம் இலங்க, இடக்கால் தொங்கிய நிலையிலும், வலக்கால் மடங்கி இருக்கை மீது வைக்கப்பட்டிருக்க வேண்டும். 'சில்பரத்தினம்' என்ற நூலின் படி, வலக்கையில் உத்பால மலரும், இடக்கை வரத முத்திரையில் அல்லது இருக்கை மீது இருக்கவேண்டும். 'பூர்வகர்ணாமகத்தின் படி, அன்னை உட்கார்ந்து இருப்பது அண்ணலின் தோள்களுக்கு மேல் இருக்கக் கூடாது. இருவரும் ஒரே இருக்கை மீது உட்கார்ந்து இருக்க, இருவரைச் சுற்றிலும் திருவாசி ஒன்று அமைக்கப்பட வேண்டும்.

''விஷ்ணு தர்மோத்திரம்' என்ற நூலின்படி, இறைவனும் இறைவியும் ஒரே இருக்கை மீது அமர்ந்து, ஒருவரை ஒருவர் அணைத்துக் கொண்டிருக்கும் நிலை ''உமா மகேசுவரத்திருவுரு'' எனப்படும். இருகைகள் கொண்ட அன்னையின் வலக்கையில் நீலோற்பல மலரும், இடக்கை இறைவனை அணைத்தவாறு இடத்தோள்மீது அமைக்கப் பட்டிருக்க வேண்டும் அல்லது இடக்கையில் கண்ணாடியும், வலக்கை இறைவனை அணைத்தபடி வலத்தோள் மீது இருக்க வேண்டும். மேலும் அன்னையை எழில் மிக்க கொங்கை மற்றும் இடையுடன் உருவாக்க வேண்டும்.

திருக்கைலாயத்தில் இறைவன் அன்னையுடன் வீற்றிருப்பதாகப் போற்றப்படுவதால், திருக்கோயில் களில் கருவறைக்குமேல் உள்ள விமானத்தில் கிழக்கு நோக்கி பொதுவாக இந்த வடிவை அமைக்கும் மரபு பின்பற்றப்பட்டது. தமிழகத்தின் தன்னிகரற்ற தஞ்சைப் பெரிய கோயிலை இதற்குச் சான்றாகக் கூறலாம்.

தமிழகத்தில் திருக்கோயில்களை என்றும் நிலைத்து இருக்கும்படி கட்டும் முயற்சியில் குடைவரைக்

கோயில்கள் முதற்கட்டமாகக் கருதப்படுகிறது. அத்தகைய கோயில்களிலும் இறைவனின் இந்த அமைப்பு காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக திருநெல்வேலி மாவட்டம் கழுகுமலையில் உள்ள பாண்டியர்களின் அதியுன்னதப்படைப்பும், "தென்னக எல்லோரா" எனப்புகழ்ப் பெற்றதுமான வெட்டுவான் கோயிலின் முகப்பில் கிழக்கு நோக்கி இந்தத்திருவுரு காணப்படுகிறது. அண்ணலுக்கு 4 கைகளும், அன்னைக்கு 2 கைகளும் உருவாக்கப்பட்டுள்ளன. ஆகமத்தில் விதிக்கப்பட்ட சுகாசனத்திற்குப்பதில் அன்னை உத்குடி இருக்கையில் அமைக்கப்பட்டு, அண்ணலை நேராகப் பார்த்த நிலையில் காணப்படுகிறாள்.

கருவறையில் இலிங்கத்திருவுருவிற்குப் பின்னால் உள்ள சுவரில் சிவனுமை முருகு என்ற திருவுருவை அமைக்கும் மரபு பல்லவப் பேரரசர்கள் பரமேசுவர வர்மன் மற்றும் இராசசிம்மன் காலத்தில் ஏற்பட்டது. ஆனால் பாண்டிய நாட்டு குடைவரைக் கோயில்களில் [திருப்பரங்குன்றம் நீங்கலாக] அன்னையுடன் கூடிய அண்ணல் வடிவை கருவறைக்குப் பின் சுவரில் அமைக்கும் வழக்கம் காணப்படுகிறது. எடுத்துக் காட்டாக முத்துராமலிங்க மாவட்டத்தைச் சார்ந்த பிரான்மலை குடைவரைக் கோயில் கருவறையின் பின் சுவரில் அண்ணலும் அன்னையும் சுதைவடிவில் இருகைகளுடன் அமைக்கப்பட்டுள்ளனர். இறைவனின் இடக்கை தொடைமீது இருக்க வலக்கையில் மழுவை ஏந்தியுள்ளான். கடகம், கேயூரம் ஆகிய அணிகலன்களை அணிந்துள்ள அவன் சுகாசனத்தில் அமர்ந்துள்ளான். இளம் பிறையுடன் அவன் தலையில் சடாமகுடம் காணப்படுகிறது. அன்னை இடக்கையில் செங்கழுநீர்ப்பூ ஏந்தியும், வலக்கை தொடைமீதும் வைத்துள்ள நிலையில் அமைக்கப்பட்டுள்ளாள். வெட்டுவான் கோயிலில் உருவாக்கப்பட்டுள்ளது போன்று இங்கும் அன்னை உத்குடி இருக்கையில் காணப்படுகிறாள். தலையில் கரந்தமகுடம்

அணிந்துள்ள அவளது முகம், வயிறு, இடுப்பு போன்றவை அழகுற அமைக்கப்பட்டுள்ளன. அதே மாவட்டத்தைச் சார்ந்த சிவகங்கையை அடுத்துள்ள திருமலை குடைவரைக் கோயிலில் சகு வறையின் பின் சுவரில் அன்னையுடன் கூடிய அண்ணல் வடிவம் புடை சிற்பமாகக் காணப்படுகிறது. ஆகம விதிகளினின்றும் வேறுபட்டு, அன்னையும் அண்ணலும் உத்குடி இருக்கையில் அமைக்கப் பட்டுள்ளனர். இத்தகைய அமைப்பு வேறு எங்கும் இல்லாத ஒன்றாம். இறைவன் தன் இடக்கையால் இறைவியின் வலக்கையைப் பற்றியும், வலக்கையை தொடைமீதும் வைத்துள்ளான். அன்னையின் மற்றொருகை இருக்கை மீது காணப்படுகிறது. எழில் மிக்க இந்தத்திருவுருவங்களும், பிரான்மலை குடை வரைக்கோயிலிலுள்ள அன்னையும் அண்ணலும் இரண்டு கைகள்தாம் கொண்டவை என்பது குறிப்பிடத்தக்கது.

புதுக்கோட்டை மாவட்டம் குன்னாண்டார் குடை வரைக் கோயிலில் உள்ள அர்த்த மண்டபத்தில் இத்தகு வடிவம் புடைசிற்பமாகக் காணப்படுகிறது. இருவரும் உத்குடி இருக்கையில் உட்கார்ந்த நிலையில் அமைக்கப் பட்டுள்ளனர். சிவபெருமானின் தலையை சடாமகுடம் அணிசெய்ய, அவன் அதிக அணிகலன்களால் அழகு செய்யப்படவில்லை. இது அக்கால மரபிற்கு ஏற்றதாக உள்ளது. இவனது 4 கைகளில் முன் வலக்கை முப்புரி நூலைப்பிடித்த நிலையிலும், முன் இடக்கை தொடை மீதும், பின் இடக்கையில் மழுவும், பின் வலக்கை சடையைப் பிடித்த நிலையிலும் காணப்படுகின்றன. அன்னையின் இருகைகளில் வலக்கையில் மலரும், இடக்கை தொடைமீதும் உள்ளது. இவர்கள் இருவரும் உட்கார்ந்துள்ள நிலை பிரான் மலை மற்றும் திருமலைக் குடைவரைக் கோயில்களில் உட்கார்ந்துள்ள நிலையினின்றும் வேறுபட்டுள்ளது. பிரான் மலைக் குடைவரைக் கோயிலில் அண்ணல் சுகாசனத்திலும், அன்னை உத்குடி இருக்கையிலும் (ஒருகால் தொங்கிய

நிலை) உருவாக்கப்பட்டுள்ளனர். திருமலைக் குடை வரைக்கோயிலில் இருவரது ஒருகால் குத்திட்டும், மற்றொரு கால் தொங்கிய நிலையிலும் அமைக்கப்பட்டு உள்ளன. ஆனால் இங்கு இருவரது ஒரு கால் குத்திட்டும், மற்றொரு கால் இருக்கை மீது படுக்கை யாகக் காணப்படுகிறது. மேலும் இவர்கள் இருவருடன் சேடி ஒருத்தி அன்னைக்கு அருகில் அமைக்கப்பட்டுள்ளது வேறு எந்தக் குடைவரைக் கோயிலிலும் இல்லாத ஒன்றாம்.

பல்லவப் பேரரசனான இராசசிம்மனால் கட்டப் பெற்ற காஞ்சிபுரம் கைலாய நாதர் கோயிலில் மதிலாக அமைந்துள்ள பல சிற்றாலயங்களில் அன்னையுடன் கூடிய அண்ணல் வடிவங்கள் காணப்படுகின்றன. அவற்றில் சில அக்கால வர்ணப் பூச்சுடன் உள்ளன.

கருவறையின் பின் சுவரில் இத்தகைய திருவுரு சில திருக்கோயில்களில் காணப்படுகிறது. எடுத்துக் காட்டாக எட்டுவீரட்டத்தலங்களில் ஒன்றும், நாவுக்கரசு பெருமானை ஆட்கொண்டதுமான தலம் திருவதிகை என்பது தென்னாற்காடு மாவட்டத்தில் பண்ருட்டியை அடுத்துள்ளது. அங்குக் கருவறையில் இராசசிம்மப் பல்லவன் பாணியில் இலிங்கம் 16 பட்டை தீட்டப்பெற்று காணப்படுகிறது. இங்குள்ள பின் சுவரில் அன்னையும் அத்தனும் அமைக்கப்பட்டுள்ளனர். இது இறைவன் தன்னைத்தானே பூசிப்பதாக இங்குச்சொல்லப்படுகிறது. தஞ்சை மாவட்டத்தைச் சார்ந்த திருமறைக்காடு என்ற வேதாரண்யத்தில் இலிங்கத்திருவுருவிற்குப் பின்னால் இறைவனும் இறைவியும் உள்ளனர். இது திருமணக்

கோலம் என்று சொல்லப்படுகிறது. புதுப்பெண்ணான இறைவி நாணிக் கோணி உட்கார்ந்து இருப்பதாகத் தெரிகிறது. இந்தத்திருவுருவிற்கு ஆண்டுதோறும் சித்திரை மாதம் பூர்வபக்கத்துச் சப்தமிதியன்று சந்தனக் காப்பு சாத்தப்பெறுகிறது.

ஆங்காங்குள்ள திருக்கோயில்களில் அன்னையுடன் கூடிய அண்ணலின் திருவுரு செப்புப் படிமங்களாக உள்ளன.

## 3. ஆறணிந்த சடாமகுடத்து அழகர் [அப்பர்]

[கங்கா தரமூர்த்தி]

சிவபெருமானது பல்வேறு திருவுருவங்கள் ஆகமங்களில் பேசப்படுகின்றன; திருக்கோயில்களில் புடை சிற்பங்களாக உருவாக்கப்பட்டுள்ளன; சிலாவடிவங்களாகவும், செப்புப் படிமங்களாகவும் அமைக்கப்பட்டு உள்ளன; ஓவியங்களாகத் தீட்டப் பெற்றுள்ளன. அவற்றில் ஒன்று அலை புனற்கங்கையை அண்ணல் தன் கற்றைவார் சடையில் ஏற்றது.

வானோர்களுக்குக் கனவிலும் அரியனான அம்மையப்பன் தன்னைப்புகல் அடைந்த அடியார்களுக்கு நனவிலும் எளியன் என்பது ஆன்றோர் திருவாக்கு. தன் முன்னோர்கள் நற்பேறு பெற பகீரதன் பிரமனை நோக்கித் தவம் புரிந்தான். [பகீரதனின் முன்னோர்கள் நற்பேறு பெற] வெஞ்சின முகங்களாகி விண்ணின்று விசையொடு பாய்ந்த கங்கையைப் பகீரதனுக்காக மங்கைபங்கன் தன் தாழ்சடையில் ஏற்றுச் சிறிதளவு கீழே விட்டான். இங்ஙனம் இறைவன் அருளியதை,

''பண்டுபகீரதன் வேண்ட
ஆர்த்து வந்திழியும் புனற் கங்கைநங்கையாளை
நின் சடைமிசைக்கரந்த
தீர்த்தனே (7)

எனச் சுந்தர மூர்த்திசுவாமிகள் தமது திருப்புன்கூர் திருப்பதிகத்தில் போற்றி இசைக்கிறார். கங்கை என்னும் தையல் ''ஆயிர முகமதாகி வையகம் நெளியப் பாயவான் வந்திழிந்தாள். எனவே உலகை அழிவினின்றும் காப்பாற்ற கந்தம்கமழ் கொன்றைச்

சடையான் கங்கைநங்கையாளை தன் மின்னொளிர் சடையில் தங்கினான். இதனை மணிவாசகப்பெருமான்,

"சலமுகத்தால் அவன் சடையிற் பாய்ந்திலனேல் தரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம்"
[திருச்சாழல்-7]

என்று அருளியுள்ளார்.

மனித வாழ்வின் வளத்திற்கு மழை வேண்டற்பாலது. வள்ளுவப் பெருந்தகையார் தமது திருக்குறளில் கடவுளை வாழ்த்தியபின், "மழை பொய்ப்பின் உலகில் பசும் புல்லும் காண இயலாது; வானோர்க்கும் பூசனை நடைபெறாது; தவமும் கொடையும் இல்லை; மழை தான் மனித வாழ்விற்கு அமிழ்தம்" எனப்பலவாறாக வான் சிறப்பை விதந்து போற்றுகிறார். இதன் பெருமையினைச் சங்க இலக்கியங்களான புறநானூறு, பதிற்றுப்பத்து போன்றவற்றில் நல்லிசைப்புலவர் பெருமக்கள் வலியுறுத்தியுள்ளதைப் பரக்கக்காணலாம். எடுத்துக்காட்டாக,

"பாரி பாரியென்று பல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரியொரு வனுமல்லன்
மாரியு முண்டீண்டுலகு புரப்பதுவே" [புறம் 107]

என வேள்பாரியைப் பற்றிக் கபிலரும்,

"மாரியன்ன வண்மையிற் சொரிந்து [புறம் 387]

எனச் சோழன் குளமுற்றத்துத்துஞ்சிய கிள்ளிவளவனை எருக்காட்டூர்த் தாயங்கண்ணரும் பாடியுள்ளவற்றைக் குறிப்பிடலாம். வாழ்வின் வளத்திற்கு மட்டுமன்றி உயிர்வாழவும் இன்றியமையா நீரை உடைமையால், ஆற்றினை அன்னையாக நம்முன்னோர் போற்றி வழி

பட்டனர், காவேரியை அன்னைகாவேரி என அன்புடன் அழைத்து இன்றும் பூசைபல புரியப்பட்டு வருகின்றதைச் சான்றாகக் கூறலாம். ஆறுகளில் கங்கை புனிதம் மிக்கது எனக்கருதப்படுகிறது. அது பற்றியே நீரைப் பொதுவாக அதன் தூய்மையை, மாண்பினை, புனிதத் தன்மையினை உணர்த்த, கங்கை என்பது மரபு. மனித வாழ்விற்கு வேண்டப்பட்ட நீரை அதிலும் கங்கையைத் தன் குழற்சடையில் சிவபெருமான் அணிந்துள்ள தினின்றும் அவன் ஆருயிர்கள் மாட்டு ''பால் நினைந் தூட்டுந்தாயினும் சாலப்பரிவு'' உடையோன் என்பது தெளிவாகிறது. ''ஆறு செஞ்சடைமேல் வைத்த வங்கணர்'' என சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில் அண்ணல் ஆறு அணிந்தது அவனது தண்ணளியை, அருட்திறத்தைக் காட்டுகிறது என்ற குறிப்புப் பெற வெகு அழகாகக் கூறியுள்ளார். இறைவனது திருமுடி வானமாகவும், செம்பொன் நேர் சடைவானில் பரந்து இலங்கும் முகில்தொகுதியாகவும், கற்றைச் சடையில் உள்ள கங்கை முகிற்படலத்தில் தோன்றும் நீராவியாகவும் பொருள் கூறுவர். இதுவும் உலகினை இறைவன் புரக்கும் அருட்பண்பைத்தான் வலியுறுத்துகிறது.

மந்திரத்தை ஆசான் மூலமாக அன்றி நூல் வாயிலாக உணர வைக்க நேரின், கூட்டியும் குறைத்தும் வைக்கும் மரபினைப் பின்பற்றி, வகரத்தை வகர ஆகாரமாகக் கூட்டியும், ''யா'' என்பதனை யகரமாகக் குறைத்தும், ''சிவாயநம'' என்னும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்து வழங்கி வருகிறது. இது சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு மற்றும் மறைப்பு என்னும் ஐம்பொருளைக் குறிக்கும் என்பர். இதில் நடுவில் உள்ள 'யாப்பு' ஆவியின் அடையாளம் எனப்படுகிறது. யகரத்தின் இருமருங்கிலும் உள்ள வகரம் வனப் பாற்றலையும், நகரம் நடப்பாற்றலையும் குறிக்கின்றன. வனப்பாற்றல் என்றாலும் திருவருள் என்றாலும்

ஒன்றே. அதுதன் நிலையினின்றும் திரியாகக் காரணத்தால் மலைமகள் எனப்படும். அதுவே பராசக்தி என்றும் அழைக்கப்பெறும். நடப்பாற்றல் என்பது திரோதனசக்தி, அது மாறும் இயல்பினைக் கொண்டது. இது ஆதிசக்தி என்றும் அழைக்கப்பெறும். வனப்பாற்றலை மலைமகள் என்றால், நடப்பாற்றலை சலமகள் என்பர். சலம் என்றால் வஞ்சனை, மறைப்பு என்று பொருள். இது, நல்வினை தீவினை என இருவினை துய்ப்பவரை, சிவமாம் மெய்ப்பொருள் காட்டாது, உலகினைக்காட்டி, உழலச் செய்யும். அது உயிரின் செவ்வியறிந்து, ஆணவ இருளினை அகற்றி, உலக இயல்பின் உண்மை நிலையினை உணர்த்தி, சிவத்தைத் தெளிவுறக்காட்டி, திருவடியின்பத்தை நுகர்விக்கச் செய்கிறது. இவ்வாறு நடப்பாற்றல் உயிர் பரிபக்குவ நிலையை அடையுங்காறும் அதை வஞ்சித்து உலகுடன் இயங்கச் செய்து, உரிய காலத்து மெய்ப்பொருளாம் சிவத்தைத் தெளிவாகக் காட்டுதலால், சலமகள் எனப்படுகிறது. அண்ணலின் ஒரு கூறாகிய உமையன்னை பராசக்தி; அவனது தலையில் அணியப்பெற்றகங்கை திரோதன சக்தி அதாவது சலமகளாம்.

''சலமளைச் செஞ்சடைமேல் வைத்தார்'' (2)

என அப்பர் பெருமான் தமது திருவாலங்காடு திருத்தாண்டகத்திலும்,

''சலமகள் உலவிய சடையினர்''

—[திருவிடை மருதூர்-7]

''சலமகளோடெருக்கும் முடிமேலணிந்து''

—[கோளறு திருப்பதிகம்-9]

என்சம்பந்தப் பெருமானும் அருளியுள்ளவை இங்குக் குறிப்பிடத்தக்கனவாம். இங்ஙனம் ''ஆறலைத்த

சடையான்'' என்பதற்குத் தத்துவரீதியாகப் பொருள் கொள்ளப்படுகிறது.

இவ்வாறாக இறைவன் ஆருயிர்களை இம்மையில் காப்பதோடு அமையாது, அவற்றின் செவ்வியறிந்து நன்னெறியில் உய்த்துத் தன் திருவடியின்பத்தை நல்கு கிறான் என்பதை இத்திருவுரு உணர்த்துகிறது என்பதைத் தெளிவில் அறியலாம்.

இறைவன் தன் சடையில் கங்கையைத் தாங்கி உள்ளதைச் சங்ககால இலக்கியங்கள் மற்றும் சிலப்பதிகாரத்தில் பரவலாகப் பேசப்படுகிறது. எடுத்துக் காட்டாக 'பரிபாடல்' 6ஆம் பாடலில்,

''விரிசடைப் பொறை ஊழ்த்து விழுநிகர்மலர் ஏய்ப்பத்
தணிவுறத்தாங்கிய தனிநிலைச் சலதாரி [வரி 5-6]

என்று கூறப்பட்டுள்ளது. மலர்ந்து கீழே விழுகின்ற மலரைத் தாங்குவது போன்று அத்துணை எளிதாகக் கங்கையை அதன் வேகம் தணியுமாறு தனது சடையில் தாங்கினான் என்பதாம். ''தேறுநீர் சடைக் கரந்து'' எனக் 'கலித்தொகை'யில் கங்கையைச்சடையில் அடக்கப் பட்டது குறிப்பிடப் பட்டுள்ளது. ''கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன்'' ''தெண்ணீர் கரந்த செஞ்சடை கடவுள்'' என்பன சிலப்பதிகாரம்.

பண்டைக் காலந்தொட்டுத் தமிழகத்தில் கோயில்கள் இருந்தமைக்கு இலக்கிய, கல்வெட்டுச் சான்றுகள் பல உள்ளன. இருப்பினும் இன்றையக் கோயில்களின் வளர்ச்சி குடைவரைக்கோயில்களினின்றுதான் காண இயலுகிறது. தமிழகத்தில் குடைவரைக்கோயில்களைத் தோற்றுவித்தவன் கி. பி. 600 முதல் 630 வரை செங்கோலோச்சிய பல்லவப் பேரரசன் முதல் மகேந்திர வர்மன் தொண்டை நாட்டிலும் சோழ நாட்டிலும்

உள்ள அவனது குடைவரைக் கோயில்கள் பலவற்றில் திருச்சியில் உச்சிப்பிள்ளையார் கோயில் போகும் வழியில் உருவாக்கப்பட்டுள்ள ''லலிதாங்குரப் பல்லவக்கிருகம்'' என்ற குடைவரையில் மட்டும் புடைசிற்பம் உள்ளது. அது ஆறு கொப்பளித்த சென்னியனது. நதி சூடிய நம்பனின் நான்கு கைகளில் பின்வலக்கை சடைமுடி ஒன்றினைப் பிடித்தநிலையில் உள்ளது. அதை அடுத்துக் கங்கை மார்பில் கூப்பிய கைகளுடன் அமைக்கப்பட்டு உள்ளாள். அவனது வலக்கால் அசுரன் ஒருவனது தலை மீது வைக்கப்பட்டுள்ளது. பகீரதனும், முனிவரும், வானவர்களும் இருமருங்கும் காணப்படுகின்றனர்; இங்கு அன்னை பார்வதி இல்லை. ஆடல்வல்லான் காலடியில் இருப்பது போன்று அசுரன் ஒருவன் இங்குள்ள வடிவில் காலடியில் உருவாக்கப்பட்டுள்ளான். ''நடராசரும் கலையும் கலாசாரமும்'' என்ற தமது நூலில் திரு. சி. சிவராமமூர்த்தி ''ஆலம்பூர் என்ற இடத்தில் உள்ள கோயில் ஒன்றில் பெருக்காறு சடைக் கணிந்த பெம்மானின் வலக்காலடியில் அசுரன் ஒருவன் அமைக்கப் பட்டுள்ளான்'' என்று குறிப்பிட்டுள்ளார். மேலும் இறைவன் கங்கையைத் தன் சடையில் ஏற்றமையால் அவளது செருக்கை அடக்கியமைக்காக ஆடுவதாகக் கருத்துத் தெரிவித்துள்ளார். கங்கையின் செருக்கை அடக்கியது, திருக்கூத்து புரிதல் ஆகிய இரண்டும் இதில் கலந்துள்ளன. இந்த இரு இயல்புகளையும் திருச்சியில் உள்ள வடிவமும் குறிப்பதாகக் கொள்ளலாம்'' ஆலம்பூரில் உள்ளது சாளுக்கியர் பாணியில் அமைந்த தாகவும், அது எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது எனவும் அவர்தமது நூலில் குறிப்பிட்டுள்ளார். திருச்சியில் உள்ள வடிவம் ஏழாம் நூற்றாண்டைச்

சார்ந்ததால், இதைப் பின்பற்றி ஆலம்பூரில் உள்ள வடிவம் அமைக்கப்பட்டதா என்பது ஆராயவேண்டிய ஒன்றாம்.

புதுக்கோட்டை நகரத்தின் ஒரு பகுதியான திருக்கோகர்ணத்தில் உள்ள குடைவரைக் கோயிலில் ஆறு சேர் சடைக்குடையப்பனின் வடிவம் புடை சிற்பமாகக் காணப்படுகிறது. இந்த வடிவத்தின் சடையில் கங்கை உருவாக்கப்பட்டுள்ளாள். திருச்சியைப் போன்று இங்கும் அன்னை அமைக்கப்படவில்லை. ஆனால் அங்குள்ளதைப் போன்று இறைவன் காலடியில் அசுரனும், இருமருங்கும் பகீரதனும் ஆகியோரும் உருவாக்கப்படவில்லை. அன்னையின்றி செதுக்கப் பெற்ற இவ்விருபுடை சிற்பங்கள் இத்தகுவடிவங்களில் தொன்மையானவையாகக் கொள்ளப்படுகின்றன.

காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயிலில் தென்புறமாக அமைந்துள்ள ஒரு சிற்றாலயத்தில் உள்ள இத்தகு வடிவில் இறைவனுக்கு 8 கைகள் அமைக்கப்பட்டுள்ளன. இருகைகளைக் கூப்பிய கங்கையை இறைவன் தன்கையில் ஏந்தியுள்ளான். அண்ணலுக்கு அருகில் அன்னை காணப் படுகிறாள். ஆனால் அவளது முகத்தில் பிற்காலத்திய சிற்பங்களில் காணப்பெறும் பதட்டம் இல்லை. இந்த வடிவம் அழகு மிக்கதாய் அமைந்துள்ளது. இந்தக் கோயிலின் கருவறையின் மேல் புறத்தில் ஆறலைத்த சடையன் வடிவம் இன்றொன்று காணப்படுகிறது. 4 கைகள் கொண்ட இறைவனுக்கு அருகில் அன்னை அமைந்துள்ளாள். மேலே கை கூப்பிய நிலையில் கங்கை காணப்படுகிறாள். இங்கும் அன்னையின் திருமுகத்தில் பதட்டம் காணப்பெறவில்லை.

ஆகமவிதிகளின்படி ஆறணிந்த சடாமகுடத்து அழகன் சடையில் கங்கையை உருவாக்கவேண்டும். கங்கையைப் பெண்வடிவில் அமைக்கலாம் அல்லது நீர் விழுவது போன்று உருவாக்கலாம். தனக்குப்போட்டி

ஏற்பட்டு விட்டது என அன்னை ஊட, அவளது ஊடலைத் தீர்க்க அண்ணல் அவளைத் தன்முன் இடக்கையால் அணைத்து, முன்வலக்கையால் அவளது தாடையைத் தொடுவது போன்று காட்டவேண்டும். அன்னை தன் மனக்கிளர்ச்சியினை அடக்க இயலாது பதட்ட நிலையில் இருக்கவேண்டும். பிற்காலக்கோயில் களில் இந்த விதிகள் பொதுவாகப் பின்பற்றப்பட்டு உள்ளன. எடுத்துக் காட்டாக புதுக்கோட்டை மாவட்டத்தைச் சார்ந்த கொடும்பாளூர், திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருவாலீசுவரம் கோயில்கள் போன்றவற்றைக் கூறலாம். மேலும் சிவபெருமானது கோயில்களின் வெளிப்புறச் சுவர்களில் உள்ள புரைகளில் நான்முகன், திருமால், மற்றும் சிவபெருமானது பல வடிவங்கள் குறிப்பாக இலிங்கோற்பவர், ஆலமர் செல்வன் போன்ற வடிவங்கள் அமைக்கப்பட்டன. ஆறுதாங்கிய சடையானின் வடிவம் ஒருசில கோயில்களில் தான் உள்ளது.

பிற்கால வடிவங்களை குடைவரைக் கோயில்களில் உள்ள வடிவங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்குமிடத்து, இந்த வடிவம் அடைந்துள்ள பல மாறுதல்கள் தெரிய வரும். 7 மற்றும் 8 ஆம் நூற்றாண்டுகளில் உருவாக்கப் பெற்ற திருச்சி மற்றும் திருக்கோகர்ண குடைவரைக் கோயில்களில் உள்ள புடைசிற்பங்களில் அன்னை உருவாக்கப்படவில்லை. இடைக் காலத்தில் கட்டப் பெற்ற காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயிலில் ஆறு கொப்பளித்த சடையன் வடிவில் அன்னை உருவாக்கப் பட்டுள்ளாள். ஆனால் பிற்கால சிற்பங்களில் உள்ள பதட்டம் காணப்பெறவில்லை. பிற்காலத்தைச் சார்ந்த திருவாலீசுவரம் போன்ற கற்றளிகளில் இந்தவடிவின் முழுவளர்ச்சி காணப்பெறுகிறது. இத்தகைய வளர்ச்சி அடையக் காரணம் என்னை ?

"கொடியிடை முனிவுற நனிவருங் குலவுகங்கை" (4)

எனச்சம்பந்தப் பெருமான் தமது திரு அம்பர் மாகாளத் திருப்பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார். மேலும் தமது திரு ஆமாத்தூர் திருப்பதிகத்தில்,

"மங்கை வாணுதல் மான்மனத்திடை வாடியூட
மணங்கமழ் சடைக்
கங்கையாளிருந்த கருத்தாவ தென்னை கொலாம்"
(7)

என்று வினவுகிறார். கங்கையைப் பின்னுவார் சடையில் பின்னுகன் ஏற்றமையால் அன்னை கலக்கமும் கோபமும் அடைகிறாள். அதன் காரணமாகத்தன் கணவனுடன் ஊடுகிறாள் எனப்பெறப்படுகிறது. கங்கையைக் காளகண்டன் தன் சடையில் ஏற்றதுதான் அன்னையின் ஊடலுக்குக் காரணமா அல்லது வேறு ஏதாவது உண்டா எனில், அதற்கு அப்பர் அடிகள் தக்கபதில் தமது திருப்பூந்துருத்தி திருப்பதிகத்தில் அளிக்கிறார்.

"காதலாற் கரந்தான் சடைக்கங்கையை" (3)

ஏற்கனவே தன் உடம்பில் ஒரு கூற்றை ஒருத்திக்கு அளித்து, மற்றொருத்தியைத் தன் சடையில் வைத்தால், அவ்வாறு சடையில் வைத்தமைக்குக் காதல் காரணமாகவும் அமைந்து விட்டால், ஏற்கனவே ஒரு கூறாக உள்ள ஒருத்தி தன் கணவனுடன் ஊடுவது இயற்கையே. அண்ணல் தன்னுடன் ஊடினாளின் ஊடலைத் தீர்க்க முயன்றான் எனத்தாண்டக வேந்தர் தமது திருவதிகை வீரட்டானத் திருப்பதிகத்தில் நகைச்சுவைமிளிர அருளுகிறார்.

"சூடினார் கங்கையாளைச் சூடியதுழனி கேட்டங்கு
ஊடினாள் நங்கையாளும் ஊடலை யொழிக்க
வேண்டி
பாடினார் சாமவேதம் பாடிய பாணியாலே
ஆடினார் கெடில வேலி அதிகை வீரட்டனாரே" (2)

சம்பந்தப்பெருமானும் அப்பர் பெருமானும் மகேந்திர வர்மன் காலத்தவர்கள். அவன் காலத்திய புடைச் சிற்பத்தில் இவ்வளர்ச்சி இல்லை. பிற்காலத்திய வடிவங்களில் இந்த வளர்ச்சி காணப்படுகிறது. எனவே திருவருட் செல்வர்களின் திருவாக்குகள் இந்தத் திருவுருவை அமைப்பதில் ஏற்பட்ட வளர்ச்சிக்குக் காரணம் எனக்கொள்ளலாம்.

கங்கையைக் கறை மிடற்று அண்ணல் தன்சடையில் ஏற்றதைத் திருவருட் செல்வர்கள் நகைச்சுவை மிளிர தம் திருப்பாடல்களில் குறிப்பிட்டுள்ளனர். எடுத்துக் காட்டாக நாவுக்கரசு பெருமான் திருநாகைக் காரோணம் பற்றிய தமது திருப்பதிகத்தில்,

''வங்கமலி கடல் நாகைக்காரோணத்து
எம்மானவனே
எங்கள் பெருமான் ஓர் விண்ணப்பம் உண்டது
கேட்டருளீர்
கங்கை சடையுட்கரந்தாய் அக்கள்ளத்தை
மெள்ளவுமை
நங்கை அறியிற் பொல்லாது கண்டாய்
எங்கள் நாயகனே'' (9)

என அருளியுள்ளார். கங்கையை அண்ணல் சடையில் கரந்ததை அன்னை அறிந்தால், அதனால் பொல்லாங்கு விளையும் என இறைவனிடம் விண்ணப்பிக்கிறார்.

காரைக்கால் அம்மையார் தமது அற்புதத்திருவந்தாதியில் பாம்பையும் திங்களையும் இழுத்துச் செல்லும் கங்கை பெருக்கெடுத்துச் சடையையும் இழுத்துச் சென்றால் என் செய்வீர் என இறைவனைக் கேட்கிறார். மேலும் உமையன்னை மற்றும் கங்கை நல்லாள் இருவரில் யார் அன்பு மிக்கவர் என்றும் கேட்கிறார்.

''கூறு எமக்கு ஈது எந்தாய் குளிர் சடையை மீதழித்
திட்டு
ஏற மிகப் பெருகின் என் செய்தி—சீறி
விழித்தாரும் வாளரவும் வெண்மதியும் ஈர்த்துத்
தெழித்தோடுங் கங்கைத்திரை'' (90)

''அங்கோர் குலமங்கை பாகத்து அகலாள்
இவளோர் சலமகளும் ஈதே—தவளநீறு
என்பணிவீர் என்றும் பிரிந்தறியீர் ஈங்கிவருள்
அன்பணியார் சொல்லுமினிங்கார்'' (95)

என்பன அவர் திருவாக்குகளாம்.

திருவருட்செல்வர்களும் செந்நாப் புலவர்களும் தொன்றுதொட்டு சிவபெருமான் கங்கையைத் தன் தலையில் அணிந்துள்ளதாகக் கூறியுள்ளனர். ஆனால் இதற்கு முற்றிலும் மாறுபட்ட திருவுரு சேலம் மாவட்டத்தில் தாரமங்கலம் கைலாயநாதர் கோயிலில் உள்ளது. அங்கு இறைவன் கங்கையைத்தன் தலையில் அணியாது தன் பின் வலக்கையில் கத்திரி முத்திரையில் ஏந்தியுள்ளான். இது ஒரு அரிய படைப்பாகும். இந்தத் திருவுருவிற்குக் காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயிலில் உள்ள வடிவம் முன்னோடியாக இருந்ததாகக் கொள்ளலாம்.

இறைவனின் திருவுருவங்கள் காலம் செல்லச்செல்ல பல்வேறு வளர்ச்சியைப் பெற்றமைக்கு இந்த வடிவம் ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

# 4. "ஆலாலம் உண்டிருண்ட கண்டத்தன்"
## [காரைக்காலம்மையார்]

(விஷபாஹரணமூர்த்தி)

ஆடல்வல்லான், ஆலமர் செல்வன் முதலிய ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ள பால் வெண்ணீற்றானின் எந்தத் திருவுருவமாயினும் சரி அவனது கழுத்தில் நீலமணி போன்று கருமை காணப்படும். இருப்பினும் "யாவர்க்குந் தாங்கொணா நஞ்சமுண்டு பொறுத்த" அவனது திருவுரு "விஷபாஹரணமூர்த்தி" என்று அழைக்கப்பெறுகிறது. கங்கை நல்லாள் தங்கும் சடையானின் பல்வேறு அருள்பாலிக்கும் வடிவங்களில் இது ஒன்றாம்.

வானவர்களும் தானவர்களும் இறவாமல் நெடுங் காலம் வாழ வழிகாண பிரமாவை அணுகினர். திருமால் உதவியால் பாற்கடலைக் கடைந்தால், அதனின்றும் இறவாமையை நல்கும் அமுது கிடைக்கும் என பிரமா கூற, அவர்கள் அரவணைத்துயின்றோனை அடைந்தனர். அவனது அருளாசியுடன் மந்தரமலையை மத்தாகவும், சந்திரனைக் கடைத்தறியாகவும், வாசுகி என்ற பாம்பை கயிறாகவும் கொண்டு, அந்தக் கயிற்றின் ஒரு நுனியை அமரர்களும், மற்றொரு நுனியை அவுணர்களும் பற்றிக் கொண்டு திருபாற்கடலைக் கடைந்தனர். அவ்வாறு திருபாற் கடலைக் கடையும்போது மந்தரமலையாகிய மத்து நிலைத்து நிற்க, திருமகள் கேள்வன் அமை

வடிவில் அதைத் தன்முதுகில் தாங்கிக்கொண்டிருந்தான்; இதை மங்கை மன்னன்,

''செருமிகு வாள் எயிற்றுஅரவு ஒன்று சுற்றித் திசை
மண்ணும் விண்ணும் உடனே
வெருவர வெள்ளை வெள்ள முழுதுங் குழம்ப
இமையோர்கள் நின்று கடைய
பருவரை யொன்று நின்று முதுகிற்பரந்து சுழலக்
கிடந்து துயிலும்
அருவரை யன்னதன்மை அடல் ஆமையான
திருமால் [11-4-2]

என அழகுறக் கூறியுள்ளார். வலிமை கொண்ட ஒளி பொருந்திய பற்களை உடைய வாசுகி என்ற பாம்பைக் கயிறாக மண்ணுலகம், விண்ணுலகம் ஆகிய இடங்களில் உள்ள யாவரும் அஞ்சி நடுங்க வானவர்கள் திருப்பாற் கடலைக் கடைந்தனர். அவ்வாறு கடைவதற்கு உறுதுணையாக, மத்தாகிய மந்தரமலை தன் முதுகில் சுழலும்படியாக அந்த மலையின்கீழ்த் திருமால் வலிமை மிக்க ஆமை வடிவில் பெரிய மலையைப் போன்று கிடந்தான் என்பதாம்.

இங்ஙனம் நெடுங்காலம் கடைய, கயிறாகிய வாசுகி வலி பொறுக்க இயலாது, தன் ஆயிர வாய்களினின்றும் ஆலாலம் என்ற கொடிய நஞ்சினைக் கக்கியது. திருப்பாற் கடலும் நஞ்சினை வெளிப்படுத்தியது. ''கண்டாரைக் கொல்லும் நஞ்சுண்டாய்'' என்பர் அப்பர் பெருமான். பார்த்த அளவில் கொல்லும் தன்மை உடைய நஞ்சு என்பதினின்றும் அதன் கொடுந்தன்மையை உணரலாம். இதன் கொடுமை காரணமாக அவர் மேலும் ''மாவிடம்'' என்பர். நஞ்சின் கொடுமைக்கு ஆற்றாத இமையோர்களும் அசுரர்களும் சிவபெருமானை அடைக்கலம் அடைந்தனர். அவர்கள் மீது கருணை கொண்ட இறைவன் தன் தொண்டருள் சுந்தரரை அனுப்ப, அவர்

நஞ்சினை ஒரு துளியாகத் திரட்டி, இறைவனிடம் அளித்தார். அதை அவன் உட்கொள்ள, அமரர்கள் வேண்டுகோளின் பேரில் அதைத் தன் கழுத்தில் நீலமாமணிபோல் திகழும்படி நிறுத்திக் கொண்டான். இவ்வாறாக நஞ்சுண்டது இறைவனது பேரருளுடைமை மற்றும் அளப்பற்ற ஆற்றலுடைமை ஆகியவற்றிற்கு அடையாளமாக அவனது கழுத்தில் பொலிந்து விளங்குகிறது.

தேவாரம் பாடிய மூவர்களும் ஏனைய திருவருட் செல்வர்களும் இறைவனின் இந்த சிறப்புச் மிக்க பெருங் கருணைத் திறத்தைத் தமது அருள் வாக்குகளால் பெரிதும் வியந்து போற்றிப் பரவிப் பாடியுள்ளனர். எடுத்துக்காட்டாக, சம்பந்தப் பெருமான்

''கருமையின் ஒளிர் கடல் நஞ்சம் உண்ட
உரிமையின் உலகுயிர் அளித்த நின்றன்
பெருமையை நிலத்தவர் பேசினல்லால்
அருமையில் அளப்பரிதாயவனே''

[திருப்பிரம்புரம்-5]

என்பர். கடலில் எழுந்த நஞ்சினை உண்டதன் மூலம் ஆருயிர்களை வாழச் செய்த இறைவனது மாண்பினை உலகோர் பலவாறாகப் புகழ்கின்றனர். இருப்பினும் இது அளவிட்டு சொல்லுதற்கரிய அருமை உடைத்து என்பதாம். பாம்பைக் கயிறாகப் பற்றி வானவர்களும் அவுணர்களும் கடைந்ததனால் எழுந்த உயிரை மாய்க்கும் நஞ்சினை உயிரைத் தளிர்க்கச் செய்யும் அமுதமாக இறைவன் உண்டான என்பது அப்பர் பெருமானின் அருள்வாக்காம்.

''அடல் அரவம் பற்றிக் கடைந்த நஞ்சை அமுதாக
உண்டானை [திருநள்ளாறு-3]

கொடிய நஞ்சினை அருந்திய பின்னும் இறைவன் இறக்கவில்லை என்பதை,

"சங்கை ஒன்றின்றியே தேவர் வேண்டச்
சமுத்திரத்தின் நஞ்சுண்டு சாவா மூவாச்
சிங்கமே" [திருப்புகலூர்-2]

என்று நாவின் மன்னர் மேலும் சிறப்பிக்கிறார். விடம் உண்டதால் ஏற்பட்ட கருப்பு ஏனையோருக்கு அருவருக்கத்தக்க தோற்றத்தை அளிக்கும். ஆனால் அது அழகிய மணிகண்டமாக இறைவனை அழகு படுத்தியது. இதை அப்பர் பெருமான் தமது "ஆருயிர்த் திருவிருத்தத்தில் "கருப்பு அழகா உடையான்" எனக் கு ப்பிட்டுள்ளார். அமரர்களுக்கு அருள் புரிய வேண்டி இறைவன் நஞ்சினை உண்டமை யால், அவனைப் பித்தன் என்றும் பேதைப்பெருமான் என்றும் சுந்தரர் இகழ்வது போல் புகழ்கிறார்:

"கோல மால்வரை மத்தென நாட்டிக்
கோளராவு சுற்றிக் கடைந்து எழுந்த
ஆல நஞ்சு கண்டவர் மிக இரிய அமரர்
கட்கு அருள் புரிவது கருதி
நீலம் ஆர்கடல் விடந்தனை உண்டு கண்டத்தே
வைத்த பித்த" [திருப்புன்கூர்-5]

ஓதக்கடல் நஞ்சினை உண்டிட்ட
பேதைப் பெருமான் [திருச்சோற்றுத்துறை-6]

என்பன அவர்தம் வாக்குகளாம்.

"தம்நலன் ஒன்றேயே கருத்தில் கொண்டு இறைவனை மறந்து இமையோரும் ஏனையோரும் கடலைக்கடைய அமுதுக்குப்பதில் நஞ்சு எழுந்தது. அவ்வமயம் இறைவனிடம் முறையிட அவன் அவர்தம் குற்றம் கருதாது கருணை மேலீட்டால், நஞ்சை

அருந்தினான். இது போற்றத்தக்க செயலா'' என ஒருத்தி ''சாழல்'' என்ற விளையாட்டில் மற்றொருத்தியைக் கேட்கிறாள். அதற்கு அவள் ''உணவு உண்ண வேண்டும் என்ற விருப்பத்தால், இறைவன் நஞ்சை உண்ணவில்லை. தன்னை அடைக்கலம் அடைந்தோரின் துன்பத்தை நீக்க தண்ணளி காரணமாக அவன் நஞ்சை உண்டான். அவ்வாறு அவன் நஞ்சை உண்டிருக்காவிடில், அயன்மால் உள்ளிட்ட அனைவரும் மாய்ந்து இருப்பர். எனவே அவர்களைக் காத்தருளியது போற்றத்தக்கதே'' எனப் பதில் அளிக்கிறாள். இக் கருத்தினைக் கொண்ட மணிவாசகப் பெருந்தகையின் திருப்பாடல் பின்வருமாறு:-

''கோலமாகிக் குரைகடல் வாய் அன்று எழுந்த
ஆலாலம் உண்டான் அவன் சதுர்தான் என்னேடி
ஆலாலம் உண்டிலனேல் அன்று அயன் மால் உள்ளிட்ட
மேலாய தேவரெல்லாம் வீடுவர் காண் சாழலோ''
(8)

இறைவனது இந்த மாண்பு மிக்க பெருஞ்செயல் சங்க காலத்திலிருந்து செந்நாப் புலவர்களாலும் பெரிதும் வியந்து பாராட்டப்பெற்றுள்ளது. எடுத்துக் காட்டாக, மலைபடுகடாம் என்ற நூலில்,

''நீரகம் பனிக்கும் அஞ்சு வருகடுந்திறல்
பேரிசை நவிர மே எய் உறையும்
காரி உண்டிக் கடவுளது'' [வரி 81-83]

என்று புகழப்பெற்றுள்ளது. கடலால் சூழப்பெற்ற உலகம் அஞ்சும்படி எழுந்த நஞ்சை உண்ட இறைவன் புகழ்மிக்க நவிரம் என்னும் மலையில் எழுந்தருளி யுள்ளான் என்பதாம். 'புறநானூற்றில் கடவுள் வாழ்த்தில்,

'கறைமிடறு அணியலும் அணிந்தன்று அக்கறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே'' [வரி5-6]

என்று குறிப்பிடப்பட்டுள்ளது. இறைவனது கழுத்தில் உள்ள கருப்பு மறுவாகத் தோன்றினும், அது அவன் ஆருயிர்கள் மாட்டு கொண்ட அளப்பற்ற அன்பை உணர்த்துகிறது. எனவே மறையில் தேர்ச்சிபெற்ற அந்தணர்கள் அதைப்போற்றுகின்றனர் என்பதாம். நீண்ட வாழ்வை அளிக்கும் அருநெல்லிக் கனியை தமிழ் மீதுகொண்ட பேரன்பு காரணமாகத்தான் உண்ணாது தமிழ் மூதாட்டியான ஔவையாருக்கு அதியமான் நெடுமான் அஞ்சி அளித்தான். சிறப்புமிக்க இச்செயலைப் புரிந்த மன்னனை ஔவையார்

''நீலமணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே'' [புறம் 91]

என்று வாழ்த்துகிறார். இறைவனது கழுத்தை ''கறைமிடறு,'' 'மணிமிடறு,'' ''மறுமிடறு'' என்றெல்லாம் புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், அகநானூறு, கலித்தொகை ஆகிய சங்க கால இலக்கியங்களில் பேசப் பட்டுள்ளது.

சேக்கிழார் பெருமான் அருளிய ''திருத்தொண்டர் புராணத்தில்'' 63 நாயன்மார் கதைகளில் முதலில் கூறப்படுவது திருநீலகண்ட நாயனார் புராணமாம், ''கடலில் எழுந்த நஞ்சை இறைவனது கழுத்தில் நிற்கும் படி செய்தது அன்பர்கள் செய்த தவப்பேறாகும். அது கழுத்தில் நின்றுள்ளது இறைவனது அளப்பருங் கருணையை ஆருயிர்கள் உணர்ந்து உய்யும் பொருட்டாகும்.'' இவ்வாறு கருதிய காரணத்தால், அவர் எப்போதும் ''திருநீலகண்டம்'' எனப்போற்றிவந்தமையால், ''திருநீலகண்டர்'' என்று அழைக்கப்பெற்றார். இதைச்சேக்கிழார் பெருமான்'

"புவனங்கள் உய்ய ஐயர் பொங்கு நஞ்சுண்ண
யாஞ் செய்
தவநின்று தடுத்தது என்னத் தகைந்துதான்
தரித்தது என்று
சிவன் எந்தை கண்டந் தன்னைத் திரு நீலகண்டம்
என்பர்" (363)

என்று அருளியுள்ளார். திருஞான சம்பந்தப் பெருமான் தன் அடியார்களுடன் கொடி மாடச் செங்குன்றூர் என்ற திருச்செங்கோட்டில் பல நாட்கள் தங்க அவரது அடியார்கள் சுரநோயால் அவதிப்பட்டனர். அவ்வமயம் அவர் "அவ்வினைக்கு இவ்வினை" என்று தொடங்கும் திருப்பதிகம் பாடியருளினார். "செய்வினை வந்து எமைத் தீண்டப் பெறாதிரு நீலகண்டம்" என்ற மகுடத்தினைக் கொண்ட இந்தத் திருப்பதிகம் "திருநீல கண்ட திருப்பதிகம்" எனப்பெறும், சேக்கிழார் பெருமான்,

"அவ்வினைக்கு இவ்வினை" என்று எடுத்து "ஐயர்
அமுது செய்த
வெவ்விட முன் தடுத்து எம் இடர் நீக்கிய வெற்றி
யினால்
எவ்விடத்தும் அடியார் இடர் காப்பது கண்டம்"

என்றே,

"செய்வினை தீண்டா திருநீலகண்டம்" [2233]

எனச் செப்பினார்.

என "திருநீலகண்ட திருப்பதிகத்திற்கு" விளக்கம் அளித்துள்ளார். இறைவனது திருநீலகண்டம் உம்பர் களையும் அவுணர்களையும் காப்பாற்றியது போன்று, அடியார்களுக்கு எத்தகைய பேரிடர் எக்காலத்தும் எவ்விடத்தும் உற்றபோதும் அவர்களைக் காப்பாற்றும்

என்று திருநீலகண்டத்தின் சிறப்பை வெகு அழகாக எடுத்து உரைக்கிறார்.

அமுது உண்டபின்னும் அமரர்கள் இறந்து படுகின்றனர். ஆனால் யாரும் உண்ணுதற்கு அஞ்சும் நஞ்சை உண்ட பின்னும் இறைவன் எந்தக் குறையுமின்றி அழிவிலாது அருள்புரிகின்றான் என நயம்பட இளங்கோ வடிகள் தமது 'சிலப்பதிகாரத்தில்' பராட்டுகிறார்.

> ''விண்ணோர் அமுதுண்டுஞ் சாவ ஒருவரும்
> உண்ணா நஞ்சுண்டு இருந்து அருள் செய்குவாய்''
> [வேட்டுவரி - 21]

> ''பெயக் கண்டும் நஞ்சுண்டு அமைவர் நயத்தக்க
> நாகரீகம் வேண்டு பவர்'' (560)

என்பது தமிழ் மறையாம் திருக்குறள், யாவராலும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தை உடையவர்கள் தம் நண்பர்கள் நஞ்சை அளித்தாலும் அதை உண்டு, அதன் பின்னும் அவர்களுடன் முன் போல் உறவு கொள்வார்கள் என்ற திருவள்ளுவ நாயனார் திருவாக்கிற்குச் சிவபெரு மானின் செயற்கரிய செயல் ஒரு எடுத்துக் காட்டாக அமைந்துள்ளது. திருக்குறளில் கூறப்பட்ட கருத்து ''நற்றிணை'' யில்

> ''முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
> நஞ்சும் உண்பர் நனிநா கரிகர்'' (355)

என வலியுறுத்தப்பட்டுள்ளது.

மாபெருஞ் சிறப்பு மிக்க இச்செயலுக்குத் திருமூலர் தமது 'திருமந்திரத்தில்' தத்துவரீதியாகப் பொருள் விரித்துள்ளார். அவரது பாடல்:

> ''அண்டமோடு எண்டிசை தாங்கும் அதோமுகம்
> கண்டங்கறுத்த கருத்து அறிவார் இல்லை.

உண்டது நஞ்சு என்று உரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரி சடை யோற்கே (504)

உலகங்கள் யாவையும் காத்தருளும் சிவபெருமானின் கீழ்நோக்கிய முகம் அதோ முகம் எனப்படும். அது கறுத்ததற்குக் காரணம் நஞ்சு உண்டது என்று கூறப்படும் புராணக் கதை உருவகமாகும். இதன் பொருள் சிவபெருமான் குற்றம் பொறுத்ததாகும். ''சிவபெருமான் திருவருளால் ஆருயிர்கள் நல்வாழ்வு வாழ நல்கிய உலகு, உடல், உடைமைகள் திருப்பாற் கடல் எனப்படுகின்றன. அமரர்கள் மற்றும் அசுரர்கள் நல்வினை, தீவினைகளாகும். சிவபெருமானை மறந்து யான், எனது என்ற செருக்குடன் உயிர் இருவினைகளுக்கு ஈடாக முயலுதல் திருப்பாற் கடலைக் கடைவதைக் குறிக்கிறது. இறைவனை மறந்த பெரும் பிழைதான் கடலில் எழுந்த நஞ்சு. தன்னை மறந்த குற்றத்தை ஏற்றுப்பொறுத்ததே சிவபெருமானின் கண்டம் கறுத்ததாகும் என்பது இதன் உள்ளுறைப் பொருளாகக் கொள்ளப்படுகிறது.

கொடையைப் பெறுவோரின் தகுதியைக் கருத்தில் கொள்ளாது கொடையை அளிப்பது ''கொடை மடம்'' எனப்படும். கடையேழு வள்ளல்களில் வேள் பாரியும் ஆவியர் கோமான் பேகனும் முல்லைக்கும் மயிலுக்கும் தகுதியை நோக்காது முறையே தேரையும், போர்வையும் அளித்தனர். எனவே இவை இலக்கியத்தில் ''கொடை மடம்'' என்று பேசப்பட்டுள்ளன. உம்பர் மற்றும் அசுரர் ஆகியோரின் தகுதியைக் கருத்தில் கொள்ளாது அவர்கள் அமுதினைப் பெற இறைவன் கொடிய நஞ்சினை உண்டான். இவ்வாறு கருணை காட்டப் படுவோரின் தகுதியை நோக்காது அருளைப் பொழிவது பேதமையின் பாற்பட்டது. எனவே இது 'அருள்மடம்' என்று சொல்லப்படுகிறது. இத்தகு அருள்மடம் உடைய இறைவனைச் சுந்தரர்,

"ஓதக் கடல் நஞ்சினை உண்டிட்ட பேதைப்
பெருமான்" [திருச்சோற்றுத்துறை-6]

என நயம்படக் குறிப்பிட்டுள்ளார்.

மழை இன்றேல் உழவர்கள் தம் தொழிலை மேற்கொள்ளார்; உலகில் அதனால் பசிப்பிணி வாட்டும், தானம், தவம், வானவருக்குப் பூசனை என்பன ஏதும் உலகில் நடைபெறாது. இவ்வாறு உலகவாழ்க்கைக்கு இன்றியமையா நீரை அளிக்கும் மேகத்திற்கு கைமாறு ஏதும் செய்ய இயலாது. எனவேதான் கடவுள் வாழ்த்துக்குப் பின் வான் சிறப்பை வள்ளுவப் பெருந்தகையும், திங்களையும் ஞாயிற்றையும் போற்றிய பின் மாமழையை இளங்கோவடிகளும் போற்றியுள்ளனர். கைமாறு வேண்டா கடப்பாட்டிற்கு ஒரு எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது மேகம். மழையைப் பெய்யும் சூல் கொண்டமேகம் நீல நிறம் உடையதே. இறைவனும் எந்தக் கைமாறு கருதியும் நஞ்சினை உண்ணவில்லை. ஆருயிர்களைக் காக்கும் பொருட்டே இந்தச் செயலைப் புரிந்தான். எனவேதான் ஆருயிர்களைக் காக்கும் அவனது நீல மணிமிடறு முகிலுடன் ஒப்பிடப்படுகிறது. "புயலின மிடறுடைப் புண்ணியனே" என சம்பந்தப் பெருமானும், "கருமா முகில் போல் மிடற்றாய்" என்று சுந்தரரும் போற்றியுள்ளவை இங்கு நினைவு கூரத் தக்கன.

முற்காலத்தில் இசையினால் நஞ்சை நீக்கலாம் என்ற நம்பிக்கை நிலவி வந்தது. "ஏழிசையாய் இசைப் பயனாய்" எனச்சுந்தரரும், "ஏழ் நரம்பின் இன்னிசையாய்" என்றும் "ஏழ் நரம்பின் ஓசை படைத்தாய்" என்றும் அப்பரும், "பண்காட்டும் இசையான்" எனச் சம்பந்தரும் பரவுவதினின்றும் இறைவன் இசையில் தன்னிகரற்றவன் என்பது தெளிவாகிறது. மேலும் அப்பர் பெருமான் "குழல் மொந்தை தாளம் வீணை

கொக்கரையின் சச்சரியின் பாணியானை'' என்ப தினின்றும் இறைவன் இசையில் மட்டுமல்ல இசைக் கருவிகளை இசைப்பதிலும் திறமை மிக்கவன் என்பது புலப்படுகிறது. இறைவனது இந்த இயல்பினை,

''துத்தம் கைக்கிளை விளரிதாரம்
உழை இளி ஓசை பண் கெழுமப்பாடி
சச்சரி கொக்கரை தக்கை யோடு
தகுணிதம் துந்துபி தாளம் வீணை
மத்தளம் கரடிகை வன்கை மென்றோள்
தமருகம் குடமுழா மொந்தை வாசித்து
அத்தனைவிரவினோடு ஆடும் எங்கள்
அப்பன் இடம் திருவாலங் காடே'' (9)

என்று காரைக்காலம்மையார் தமது திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்களில் வலியுறுத்தியுள்ளார். துத்தம், கைக்கிளை, விளரி, தாரம், உழை, இளி, ஓசை என்ற ஏழிசைகளை இசையமைதியுடன் பாடி, சச்சரி, கொக்கரை, ஆகிய இசைக்கருவிகளை இயக்கி ஆடும் இறைவனது இடம் திருவாலங்காடு என்பதாம். இசையிலும் இசைக்கருவிகளை இசைப்பதிலும் ஆற்றல் மிக்க ஒருவன் ஆருயிர்கள் அஞ்சும் வகையில் உலகெங்கும் பரவிவந்த நஞ்சை நீக்கியதில் வியப்பு ஏதும் இல்லை.

திருநீலகண்டம் ஆலகால விடத்தினின்றும் ஆருயிர்களைக் காத்தமைக்கு அருள் அடையாளமாக மட்டுமன்றி, சிவபெருமானது முழுமுதற்றன்மையையும் உணர்த்துகிறது. இறைவனது இந்த இயல்பினை உணர்ந்து போற்றி வணங்குவதன் மூலம் ஆருயிர்கள் வாழப்பெறுவதால், இதை உடையவனை ''வாழுந்திடு மிடற்றுவானவர்'' என சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில் புகழ்ந்துள்ளார். ஆருயிர்கள் தன்னருள் பெற்று உயந்து தழைக்க

உறுதுணையாக உள்ள கண்டத்தை உடையவனை "மைதழையுங் கண்டத்து மலை மருந்தை" என்று சேக்கிழார் பெருமான் மேலும் சிறப்பித்துள்ளார்.

முற்றாவெண்திங்கள் சூடிய பெருமானுக்கே கொடிய நஞ்சு அமுதாக மாறினால், அவன் அடியாரை அது என்ன செய்ய இயலும்!

"இறைவரோ தொண்டருள் ஒடுக்கம்
தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே"

என்பதல்லவா தமிழ் மூதாட்டியாரின் வாக்கு, எனவே சமணர்களின் தூண்டுதல் பேரில் பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திரவர்மப் பல்லவனால் தாண்டக வேந்தருக்கு அளிக்கப்பெற்ற நஞ்சு அமுதாக மாறியதில் வியப்பு என்ன என்று சேக்கிழார் பெருமான் வினவுகிறார்.

"பொடியார்க்குந் திருமேனிப்புனிதற்குப் புவனங்கள்
முடிவாக்குந் துயர் நீங்க முன்னை விடம் அமுதனால்
படியார்க்கும் அறிவரிய பசுபதியார் தம்முடைய
அடியார்க்கு நஞ்சு அமுதமாவது தான் அற்புதமோ (1370)

என்பது அன்னாரின் அருள்வாக்காம்:

கர்ணாகமத்தின்படி சடா மகுடத்தை அணிந்துள்ள சிவபெருமானின் 4 கைகளில் பின் இருகைகளில் மானும் மழுவும் இருக்க, முன் வலக்கையில் நஞ்சை உடைய கிண்ணமும், முன் இடக்கை வரத முத்திரையிலும் அமைக்கப்படவேண்டும். அவனது கண் கிண்ணத்தில் உள்ள நஞ்சை நோக்கியபடி இருக்க வேண்டும். இது அவன் நஞ்சை உண்ணப் போகிறான் என்பதைச் சுட்டிக் காட்டும். 2 கைகள் கொண்ட அன்னை அண்ணலுக்கு

இடப்பக்கத்தில் திரிபங்க நிலையில் நின்றபடி, வலக் கையால் அன்னலை அணைத்தபடி இருக்கவேண்டும். தன் நாயகன் நஞ்சை உண்ண இருப்பதால், அன்னையைப் பதட்டமும் வருத்தமும் உற்ற நிலையில் காட்ட வேண்டும். இந்த வடிவை இன்னொரு விதமாகவும் அமைக்கலாம் என்று சொல்லப் பட்டுள்ளது. இதன்படி அன்னையும் அத்தனும் தங்கள் ஊர்தியான காளை மீது உட்கார்ந்து இருக்கவேண்டும். இறைவனை அச்சம் அளிக்கும் வகையில் காட்ட கோரைப்பற்களையும், ஏனைய அணிகலன்களுடன் தேள்களாலாகிய மாலை யையும் உடையவனாக் உருவாக்கப் படவேண்டும். பின் வலக்கையில் முத்தலைச் சூலமும், முன் வலக்கையில் நஞ்சினைக் கொண்ட கிண்ணமும் இருக்க, பின்இடக் கையில் கபாலம் காணப்படவேண்டும். மற்றொரு கையைப் பற்றி ஒன்றும் கூறப்படவில்லை. ஒருக்கால் தன் அருகில் அமர்ந்து இருக்கும் அன்னையை அந்தக் கையால் தழுவிக்கொண்டிருக்கலாம்.

சிவபெருமான் நஞ்சை உண்ணும் நிலையில் காட்டும் வடிவங்கள் அரிதாகத்தான் உள்ளன. இவற்றில் ஒன்று மதுரையம்பதியில் உள்ள மீனாட்சியம்மை திருக் கோயிலில் உள்ள நந்திமண்டபத்தில் உள்ளது. நந்தி மண்டபத்தை அடுத்து அருங்காட்சியம் அமைந்துள்ள ஆயிரங்கால் மண்டபம் உள்ளது. இதன் வாயிலுக்கு வலப்புறத்தில் உள்ள தூணில் இந்த வடிவம் காணப்படு கிறது. நின்ற நிலையில் உள்ள இந்த வடிவின் 4கைகளில் பின் வலக்கையில் உடுக்கையும், பின் இடக்கையில் சூலமும் இருக்க, முன் வலக்கை தன் அன்புக்கு உரிய மானுக்கு ஏதோ அளிப்பது போன்று உள்ளது. அவனது முன் இடக்கையில் கிண்ணம் காணப்படுகிறது. ஆகம விதிகளின்படி இந்த வடிவம் உருவாக்கப்படவில்லை என்பது குறிப்பிடத் தக்கது. நெல்லை மாவட்டத்தைச் சார்ந்த கழுகுமலையில் உள்ள ''தென்னக எல்லோரா',

எனப்பெறும் வெட்டுவான் கோயிலில் இத்தகு வடிவம் இருப்பதாகத் தெரிகிறது.

சென்னையினின்றும் நாகலாபுரம் செல்லும் வழியில் சுருட்டப் பள்ளி என்ற ஊர் உள்ளது. தமிழகத்தைச் சார்ந்த ஊத்துக் கோட்டையினின்றும் சுமார் 1 கி. மீ. தொலைவில் ஆனால் ஆந்திரமா நிலத்தில் இந்த ஊர் உள்ளது. இந்தத் தலம் திருநீலகண்டேசுவரர் திருத்தலமாகப் போற்றப்படுகிறது. பள்ளிகொண்டே சுவரர் திருக்கோயில் எனப்பெறும் இங்குள்ள திருக்கோயிலில் மூலவராக இலிங்கவடிவில் எழுந்தருளி உள்ளவன் வால்மீகேசுவரர் என்று அழைக்கப் பெறுகிறான். கருவறையை அடுத்துள்ள மண்டபத்தில் நீலகண்டேசுவரர் வடிவம் காணப்படுகிறது. பள்ளி கொண்ட திருக்கோலம் திருமாலுக்கு உரிய ஒன்று. இருப்பினும் இங்குச் சிவபெருமான் பள்ளி கொண்ட நிலையில் உள்ளது வேறு எங்கும் இல்லாத ஒன்றாம். கிழக்கு நோக்கி படுத்துள்ள சுமார் 7 அடி நீளமுள்ள இவன் கட்டமைந்த உடலைக் கொண்டவன். தெற்கில் தலைவைத்துப் படுத்துள்ள இவனுடைய 4 கைகளில் முன் வலக்கை தலைக்குக் கீழ் உள்ளது. நீட்டிய பின் இடக் கையில் மானும், நீட்டிய பின்வலக்கையில் மழுவும் காணப்பட, முன் இடக்கை தொடைமீது அமைக்கப் பட்டுள்ளது. இவனது சடா மகுடத்தில் திங்களும் கங்கையும் காணப்படுகின்றன. இவனது வலக்காதில் குழையும், இடக்காதில் தோடும் உள்ளன. இறைவனுக்கு மேல் புறமாக இருகைகள் கொண்ட சர்வமங்கல நாயகி என்ற பெயருடன் அன்னை உட்கார்ந்த நிலையில் காணப்படுகிறாள். அவளது வலக்கையில் தாமரை மலர் காணப்பட, இடக்கை இறைவனது கழுத்துக்கு நேராக நீட்டிய நிலையில் உள்ளது. இறைவன் உண்ட நஞ்சை தொண்டையில் நிறுத்தும்படி அவனை அன்னை வேண்டிக்கொள்வதை இது சுட்டிக் காட்டுகிறது. சுதையாலான இந்த வடிவிற்கு அபிடேகம் கிடையாது.

அவ்வப்போது புனுகுச்சட்டம் சாத்தப்பெறுகிறது: இறைவனுக்கு அபிடேகம் செய்யப்படாத காரணத்தால், அவனது திருவடி அமைந்துள்ள ருத்ரபாதத்திற்குத்தான் அபிடேகம் செய்யப் பெறுகிறது. ஆகமத்தில் கூறியபடி, இந்த வடிவம் நின்ற நிலையிலும் இல்லை; உட்கார்ந்த நிலையிலும் இல்லை; அதினின்றும் மாறுபட்டுப் படுத்த நிலையில் உள்ளது. நஞ்சை உண்டபின் ஏற்பட்ட மயக்கம் எனப்படுவதால், இங்கு இந்த வடிவம் படுத்த நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. ஆளுடைய நம்பிகள் தமது திருநாகைக் காரோணம் திருப்பதிகத்தில்,

'உலவு திரைக்கடல் நஞ்சை அன்று அமரர்
வேண்ட உண்டருளிச் செய்தது
உமக்கு இருக்க ஒண்ணாதிடவே'' (6)

என்பர். அமரர்கள் வேண்டுகோளின் பேரில் கடல் நஞ்சை உண்ட இறைவனால் இருக்க இயலவில்லை என்பர். இதனால் இங்கு இறைவனைப் பள்ளி கொண்ட நிலையில் அமைத்தார்கள் போலும். மேலும் நஞ்சினை ஏற்கனவே உண்டுவிட்டமையால், இந்த வடிவம் ஆகமத்தின்படி நஞ்சு உள்ள கிண்ணத்தை ஏந்தியபடி அமைக்கப்படவில்லை. நஞ்சுண்ட திருத்தலம் எனப் படுவதால், இது கால கூட க்ஷேத்திரம் என்றும் அழைக்கப் பெறுகிறது. நஞ்சை உண்ட மயக்கத்தில் உலகம் எங்கும் இருள் பரவி விட்டதால், அமரர்கள் அதனை நீக்க இறைவனை வேண்டினர். அவர்கள் வேண்டுகோளுக்கு இணங்கி இறைவன் இருளை நீக்கி அருள் புரிந்த காலம் 'பிரதோஷ காலம்' என்றும், ஏனைய சிவாலயங்களில் விட 'கால கூடக்ஷேத்திரமாகிய' இங்கு பிரதோஷ கால பூசனை தனிச்சிறப்பு பெற்றது என்றும் சொல்லப்படுகிறது.

''உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு''

என்பர் தெய்வப் புலவர் திருவள்ளுவ நாயனார். உடுத்த ஆடை குலைந்த போது அதைச் சரிசெய்ய, கை விரைந்து செல்கிறது. அது போன்று நண்பனுக்குத் துன்பம் உற்றபோது அதைத்துடைக்க உடனடியாக உதவுவதே நட்பின் நல்லிலக்கணம் என்பதாம். இதற்கு ஓர் இலக்கியமாக இங்குச் சிவபெருமானின் நண்பன் எனப்படும் குபேரன் அவனது மயக்க நிலையைப் போக்க அவனருகில் சாமரை வீசும் நிலையில் காணப் படுகிறான். மேலும் அகத்தியர், புலத்தியர் மற்றும் கௌதமர் ஆகியோரும் காணப்படுகின்றனர். வடபுறச் சுவரில் தும்புரு, வசிட்டர் மற்றும் விசுவாமித்திரரும், தென்புறச்சுவரில் பிருகு மற்றும் பிரமாவும் உள்ளனர். கதவை ஒட்டிய கீழ்புறச் சுவரில் இந்திரன், வால்மீகி, திருமால், மார்க்கண்டேயர் மற்றும் நாரதர் காணப் படுகின்றனர். இறைவனது படுக்கையை ஒட்டி பிள்ளையார், இருதுணைவியருடன் முருகன் அமைக்கப் பட்டுள்ளனர்.

வேறு எங்கும் இல்லாத அமைப்பினைக் கொண்ட இது காண வேண்டிய ஒன்றாம்.

## 5. 'திங்கள் சூடிய செல்வனார்' [சுந்தரர்]

[சந்திர சேகர மூர்த்தி]

சிவபெருமானுக்கென்று சிறப்படையாளங்கள் பல உண்டு. அவை நெற்றியில் பொலிவுடன் விளங்கும் இமையா முக்கண், மின்னார் செஞ்சடை, சடா மகுடத்தில் காணப்பெறும் கங்கை, முற்றாவெண்திங்கள், கொன்றை மலர் என்பனவாம். சண்டிக்கு அருள் பாலிக்கும் அம்மான், இராவணனுக்கு அருள் நல்கும் பெம்மான் போன்ற அருள் வடிவங்களாயினும் சரி, யானை உரி போர்த்த மூர்த்தி, காலனைக்காலால் காய்ந்த பெருமான் போன்ற முடிவிலாற்றலை உணர்த்தும் திருவுருவங்களாயினும் சரி, கலை உலகில் தன்னிகரற்ற படைப்பெனப் போற்றப் பெறும் ஆடவல்லான் வடிவாயினும் சரி இறைவனது அந்திவானச் செஞ்சடையில் இளம் பிறை இல்லாத வடிவம் இல்லை.

பிரமாவின் மூத்த பிள்ளையான தக்கன் அசுபதி முதல்ரேவதிஈறாகத் தனது 27 பெண்களைச் சந்திரனுக்கு மணம் செய்வித்தான். அவர்கள் எல்லோரிடத்திலும் ஒரு தன்மைத்தான அன்பு உடையவனாக ஒழுகுமாறு தன் மருகனுக்கு அறிவுரை வழங்கினான். தக்கனது பெண்கள் 27 பேர்களில் கார்த்திகையும், உரோகிணியும் பேரழகு உடையவர்களாக இருந்தமையால், சந்திரன் அவர்களிடம் மட்டும் ஆராக்காதலுடன் ஒழுகி வந்தான்; ஏனையோரை அவன் வெறுத்தான். இதனால் துன்பம் அடைந்த அவர்கள் தங்களது தந்தையான தக்கனிடம் முறையிட்டனர். தன அறிவுரைகளை மதியாது தன் மக்களுக்கு துன்பம் விளைவித்ததை அறிந்த தக்கன் கோபமுற்று, சந்திரனைத் தன்மருகன் என்று கூட

எண்ணாது "கலைகள் எல்லாம் தேய்ந்து இலவாக" என்று சாபம் இட்டான். இதனால் திங்கள் தனது 16 கலைகளில் ஒவ்வொன்றாக இழந்து ஒரு கலை மட்டும் இருக்கும் அவல நிலையை அடைந்தான், அந்நிலையில் இறைவனை அடைக்கலம் அடைந்தான். இறைவன் அவனுக்கு 'அஞ்சேல்' என்று அடைக்கலம் அளித்து, ஒருகலையை உடைய பிறைத்திங்களைத் தன் கற்றைச் சடை மீது அணிந்தான். இந்நிலையில் தக்கனது சாபம் சந்திரனை அணுகவில்லை. இவ்வாறு இறைவன் தன் சடையில் சந்திரனைச் சூடியகாரணத்தால் 'சந்திர சேகரன்' என்ற பெயரினைப் பெற்றான். இதைத் தமிழில் "பிறையணி பெம்மான்" என்று போற்றுவர்.

தன் இயல்பும் குன்றி புகழும் இழக்கும் நிலையில் இருந்த இந்துவினை தன்முடி மேல் ஏற்று மீளவும் வாழ்வும் பேரும் அளித்த இறைவனது பெருங்கருணைத் திறத்தை போற்றாத திருவருட் செல்வர்கள் இல்லை; நாவுக்கு மன்னர் திருவையாற்றில் இறைவனது திருக்கயிலாய காட்சியைக் கண்ட போது பாடியருளிய "மாதர் பிறைக்கண்ணியானை" என்று தொடங்கும் திருப்பதிகத்தில் ஒவ்வொரு திருப்பாடலிலும் இதனைச் சிறப்பித்துள்ளார். "மாதர் பிறைக் கண்ணியானை" (1), "போழிளங்கண்ணியினானை" (2), "எரிப்பிறைக் கண்ணியினானை" (3), "பிறையிளங்கண்ணியினானை" (4), "ஏடு மதிக்கண்ணியினானை" (5), "தண் மதிக் கண்ணியினானை" (6), "கடி மதிக்கண்ணியினானை" (7), "விரும்பு மதிக்கண்ணியினானை" (8), "முற்பிறைக் கண்ணியினானை" (9), "திங்கள் மதிக்கண்ணியினானை" (10), "வளர் மதிக்கண்ணியினானை" (11) என்பன அந்தத் திருப்பதிகத்தில் உள்ள அவரது திருவாக்குகள்: அந்தத் திருப்பதிகத்தின் ஒவ்வொரு திருப்பாடலும் இந்த அருட் செயலை வியந்தே தொடங்கப்பட்டுள்ளது என்பதும் குறிப்பிடத் தக்க சிறப்பாகும்.

இறைவன் பிறைத்திங்களைத் தன் சடையில் அணிந்தது அவன் தன்னை அடைக்கலம் அடைந் தோருக்கு எல்லா நலன்களையும் அளிப்பான் என்பதைத் தான் உணர்த்துகிறது. இதைத்தான் கச்சியப்ப சிவா சாரிய சுவாமிகள் தமது கந்தபுராணத்தில்,

''நெற்றியங் கண்ணுடை நிமலத்து எம்பிரான்
உற்றவர்க்கு அருள் புரிகின்ற உண்மையைத்
தெற்றென உணர்த்தல் போல் திங்களின் கலை
கற்றையஞ் சடையிசைக்க வின்று பூத்ததே''

[6-4-43]

என வெகு அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

தங்களுக்குக் கிடைக்கவேண்டிய அமுது கிடைக்காது தடுத்த காரணத்தால் இராகு, கேது என்ற அவுணர்கள் ஞாயிற்றையும் திங்களையும் விழுங்குவதாகவும், அதனால்தான் ஞாயிறு, திங்கள் கிரகணங்கள் ஏற்படு கின்றன என்றும் புராணங்களில் சொல்லப்பட்டுள்ளது. இவ்வாறு சந்திரனுக்கும் பாம்பிற்கும் தீராப்பகை இருப்பினும்,

''பிறையும் அரவும் புனலும் பிறங்கிய
செஞ்சடை வைத்த இறைவன்'' [திருவாரூர்-4]

என்பதுடன் அமையாது,

''வளராத பிறையும் வரி அரவும் உடன்
துயிலவைத்து அருளும் எந்தை''

[திருவதிகை வீரட்டானம்-3]

என்று சுந்தரர் மேலும் அருளியுள்ளார். தமக்குள் ஒருவருக்கொருவர் பகைமை பாராட்டும் இருவர் ஒரே இடத்தில் தூங்குகின்றார்கள் என்றால், அவர்களிடையே

பகை இல்லை என்பது தானே பொருள். இதைத்தான் தாண்டகவேந்தர்,

"பாம்பும் மதியும் புனலுந் தம்மிற்பகை
தீர்த்து உடன்வைத்த பண்பா போற்றி"
[திருவதிகை வீரட்டானம்-4]

என்றும்,

"மதியொடு மாசுண முந்தம்மின் மருவ
விரிசடை முடிமேல் வைத்த வான்
நீர்க்கங்கை யானை" [திருக்கற்குடி-5]

என்றும் அருளியுள்ளார். இதினின்றும் இறைவன் பிறைக்கும் பாம்பிற்கும் உள்ள தீராப் பகையைத் தீர்த்து ஒருவருக்கொருவர் நட்புடன் கூடி தன் சடையில் வாழுமாறு வைத்துள்ளான் என்பது தெளிவாகிறது.

திங்கள் இளங்கண்ணியினைத் தன் சடைமீது சூடியதன் மூலம் அண்ணல் திங்களை அழிவினின்று மட்டும் காப்பாற்றவில்லை; மீளவும் தனது 16 கலைகளைப் பெற்றுப் பொலிவுடன் விளங்கவும் வழிவகுத்தான். அண்ணலின் அந்திசெக்கர் போன்ற சடையில் தன் பிறவிப் பகைவனான பாம்புடன் இருந்தும் பிறை முழு நிலவாக வளருவதாக நாவின் மன்னர் போற்றியுள்ளார்.

"தளருங் கோளரவத் தொடு தண்மதி
வளருங் கோல வளர் சடையான்
[திருக்கடம்பூர்-1]

என்பர், பிறைக்கும் பாம்பிற்கும் இடையில் பகைமை இல்லை என்பதைத்தான் பிறையின் வளர்ச்சி சுட்டிக் காட்டுகிறது. இதைச் சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில்,

"பிறைத்தளிர்ச் சடைப் பெருந்தகை"

என நயம் பட உரைத்துள்ளார். பிறையை இறைவன் தளிர்போன்று தன் சடையில் சூடியுள்ளான் என்பதாம். தளிர்தான் இலையாக மேலும் வளரும், எனவே இறைவனது சடையைச் சேர்ந்த காரணத்தால் முழு நிலவாக வளர உள்ள பிறையை ''பிறைத்தளிர்'' என வெகு பொருத்தமாகச் சேக்கிழார் பெருமான் கூறியுள்ளார்.

பாம்பையும் பிறையையும் இறைவன் ஒன்றாகத் தன் சடையில் அணிந்துள்ளது அவனது பண்பிற்கு ஒரு எடுத்துக்காட்டு என்று ஆரூருடைய நம்பிகள் புகழ்ந்துள்ளார்.

''பாம்பினொடு படர்சடைமேல் மதிவைத்த
பண்பீர்'' [திருநாகைக் காரோணம்-3]

என்பது அவரது திருவாக்கு. இங்கு இவர் குறிப்பிட்ட பண்பு இறைவன் நீதிநெறியினின்றும் பிறழாதவன் என்பதுதான். பிறவிப்பகை கொண்ட இருவரும் ஒரு இடத்தில் வாழ்வது இறைவனின் நீதியின் நேர்மையையே சுட்டிக்காட்டுகிறது.

''சமன் செய்து சீர் தூக்குங் கோல் போல் அமைந்து ஒருபாற்
கோடாமை'' [திருக்குறள் 118]

காரணமாக சோழ மன்னன் மாந்தாதா ஆட்சியில் புலியும் மானும் ஒரு நீர் துறையில் நீருண்டனவாம்: இதை,

''புலியுடனே புல்வாய் ஒரு துறைநீர்
மாந்த உலகாண்ட மன்னர்பிரான்'' [13-14]

என்று குலோத்துங்க சோழனுலா குறிப்பிடுகிறது. குறிப்பிட்ட குணத்தின் மிக்கோனை அக்குணத்தின் உருவமாகக் கருதுவது தமிழ்மரபு. அம்மரபினை ஒட்டி

இறைவனின் நீதி நேர்மையைப் பாராட்டி சம்பந்தப் பெருமான் 'நீதியன்'' எனத் தம் திருப்பதிகங்களில் கூறியுள்ளார். அதாவது இறைவன் நீதியின் திருவுரு என்பதாகிறது. இறைவனது இந்தச் சிறப்பு இயல்பை பிறை அணிந்து பாம்புடன் வாழவைத்தது எடுத்துக் காட்டுகிறது. ஆருயிர்கள் தம்முன் கொண்ட தீராப் பகையினையும் இறைவன் திருமுன் விட்டொழித்தன என்றால், அவனது பெருங் கருணைத்திறத்தினை என்ன வென்பது !

ஞானக் குழந்தையாம் சம்பந்தப் பெருமான் தம்மை ஆட்கொண்ட இறைவனைத் தம் தந்தைக்குச் சுட்டிக்காட்டும் முதல் திருப்பாடலான ''தோடுடைய செவியன்'' என்பதில் இறைவனின் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்ற ஐந்து தொழில் களும் குறிப்பிடப்பட்டுள்ளன. அதில் ''தூவெண்மதி சூடி'' என்பது காத்தல் தொழிலைச் சுட்டிக்காட்டுகிறது. இவ்வாறாக இறைவன் ஆருயிர்களைத் தன் திருவருள் திறத்தால் காப்பதை, பிறையணிந்த செயல் வலியுறுத்து கிறது. சங்க நூலான புறநானூற்றில்,

''பிறைநுதல் வண்ணமாகின்று. அப்பிறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே''

[கடவுள் வாழ்த்து]

என்று கூறப்பட்டுள்ளது. இறைவனது நெற்றியில் பிறை அழகாக அமைந்துள்ளது; அதைக்கின்னரர், கிம்புருடர் முதலிய 18 கணங்களும் போற்றுகின்றன என்பதாம்: பிறை தனியாக இருப்பின் போற்றப்பட்டிருக்காது. அது இறைவனது சடையைச் சார்ந்தமையால்தான் 18 கணங்களால் போற்றப்படுகிறது. இது எளியோ ராயினும் பெரியோரைச் சார்ந்தால், சிறப்பு அடைவர் என்பதற்குச் சான்றாக உள்ளது.

இறைவன் அணிந்துள்ளது பிறைத்திங்கள். இதைக் ''கோணார் பிறைச்சென்னிக் கூத்தன்'' என்பர் மணிவாசகப்பெருமான். கோணார்பிறை என்றால் வளைவு உடைய பிறைத் திங்கள் என்பதாம். திங்களின் கோணல் ஆருயிர்கள் மலத்தால் எய்திய மனக் கோணலைக் குறிக்கும். வளைவு கொண்ட பிறைச் சந்திரனைத் தன் தலையில் சூடி அதை வளர வைத்தது தன்னை அடைக்கலம் அடைந்த ஆருயிர்களின் மனக் கோணலை நீக்கி நன்னெறியில் செலுத்தி ஆட்கொள்வான் என்பதாம்.

இறைவனது சடையில் பிறை சூடப்பட்டுள்ளதைத் திருவருட் செல்வர்களான காரைக்கால் அம்மையார், சேரமான் பெருமாள் நாயனார், மணிவாசகப் பெருந்தகையார் ஆகியோர் நகைச்சுவை ததும்ப பலவாறாகத் தமது திருவாக்குகளில் குறிப்பிட்டுள்ளனர். எடுத்துக் காட்டாகப் பாம்பு தன்னை வருத்தும் என்ற அச்சத்தின் காரணமாகத் திங்கள் இணைந்து விட்டதா, அதுதான் பிறை வளராமைக்குக் காரணமா என்று திங்கள் ஒரு கலையுடன் இருப்பதைக் காரைக்காலம்மையார் தமது ''அற்புதத்திருவந்தாதி''யில் கேட்கிறார்.

''மறுவுடைய கண்டத்தீர் வார்சடைமேல் நாகம்
தெறுமென்று தேய்ந்துழலும் ஆ! ஆ!—உறுவான்
தரைமீது ஓடுமேல் தானதனை அஞ்சி
வளருமோ பிள்ளை மதி'' (36)

என்பது அவரது திருவாக்காம்.

''நேர்ந்து அரவங்கொள்ளச் சிறுகிற்றோ நீ யதனை
ஈர்ந்தனவே கொண்டிசைய வைத்தாயோ—பேர்ந்து
வளங்குழவித் தாய்வளர மாட்டாதோ என்னோ
இளங்குழவித் திங்கள் இது'' (42)

என்று திங்கள் வளருதல், குன்றுதல் இன்றி ஒருபடியாக இறைவனது சடையில் இருப்பதற்கு, பாம்பால் பிளக்கப் பட்ட ஒரு கீற்றையுடைய அதை இறைவன் அப்படியே சூடிக்கொண்டதுதானோ என அவர் மேலும் வினவு கிறார். இறைவன் தன் திருமார்பில் பன்றியின் கொம்பை அணிந்துள்ளான். அதையும், சடையில் உள்ள பிறைத்திங்களையும் பார்த்த பாம்பு அறிவின்மை காரணமாக எது திங்கள் எனத்தெளியாது மருள்கிறது என்று

''திருமார்பில் ஏனச் செழுமருப்பைப் பார்க்கும்
பெருமான் பிறைக்கொழுந்தை நோக்கும்--ஒருநாள்
இது மதியென்று ஒன்றாக இன்றளவுந் தேரா
ததுமதி யொன்றில்லா அரா'' (46)

இந்தத்திருப்பாட்டில் பாம்பின் மருட்சியைக் குறிப் பிடுகிறார்.

இறைவனது அந்திவான் போன்ற செஞ்சடையைத் தீயுடனும், கங்கையை அந்தத் தீயை அணைக்க அமரர்கள்ஊற்றும்பாற்கடலுடனும், பிறைத்திங்களைத் தோணியுடனும், பாம்பைத் தோணியைச் செலுத்தும் கழியுடனும் சேரமான் பெருமாள் நாயனார் தமது ''பொன்வண்ணத் திருவந்தாதி''யில் அழகுற ஒப்பிட்டுக் காட்டுகிறார்.

''எரிகின்ற தீயொத்துள சடை ஈசற்கு அத்தீக்கு இமையோர்
சொரிகின்ற பாற்கடல் போன்றது சூழ்புனல் அப்புனலிற்
சரிகின்ற திங்கள் ஓர் தோணி ஒக்கின்றது அத் தோணியுய்ப்பான்
தெரிகின்ற திண்கழை போன்றுளதால் அத்திறல் அரவே'' (67)

என்பது அவரது திருவாக்கு:

"பாடிய வண்டுறை கொன்றையினான் படப்பாம்பு
உயிர்ப்ப
ஓடிய தீயால் உருகிய திங்களின் ஊறல் ஒத்தது
ஆடியநீறது கங்கையும் தெண்ணீர் யமுனையுமே
கூடிய கோப்பு ஒத்ததால் உமைபாகம் எம்
கொற்றவற்கே" (90)

என்ற இத்திருப்பாடலில் பாம்பின் உயிர்ப்பாகிய தீயால் திங்கள் உருகிவிட்டது; அந்தக் கசிவு நீரில் இறைவன் பூசிய திருநீறு கலந்துவிட்டது; அது கங்கையும் யமுனையும் கலந்தது ஒப்ப இருந்தது என்று அவர் மேலும் குறிப்பிட்டுள்ளார்.

சேரமான் பெருமாள் நாயனார் திங்களைத் தோணியுடன் ஒப்பிட்டதைப் போன்று மணிவாசகப் பெருமானும்,

"மந்தாகினி நுந்தும்பந்தப் பெருமை
தழிச்சிறை நீரிற்பிறைக் கலஞ்சேர்தருதாரவனே"
[நீத்தல் விண்ணப்பம்-47]

என்று ஒப்பிடுகிறார். மந்தாகினியாகிய கங்கையின் செருக்கை அடக்கிய சடையாகிய குளத்தில் மிதக்கும் தோணியாகிய பிறைச்சந்திரன் என்பதாம். மேலும் அவர்,

"வெண்தலை முழையிற்
பதியுடை வாளரப்பார்த்து இறை பைத்துச்
சுருங்க அஞ்சி
மதிநெடு நீரிற் குளித்து ஒளிக்குஞ் சடை
மன்னவனே"
[நீத்தல் விண்ணப்பம்-42]

என்பர். இறைவன் அணிந்துள்ள வெண் தலை மாலையின் பொந்தில் இருக்கும் பாம்பு திங்களைக்கண்டு தன் இயற்கைப்படி படம் எடுக்கும். மறுகணத்தில் தான் இருக்கும் இறைவனின் சடை நினைவுக்குவர, அது தன் படத்தைச் சுருக்கிக்கொள்ளும். இந்த ஒரு கணத்தில் திங்கள் பாம்பின் படத்தைக் கண்டு அஞ்சிக் கங்கையில் மூழ்கி ஒளிந்துவிடும் என்பதாம்.

சங்ககால இலக்கியங்களிலும் காப்பியங்களிலும் பிறை சூடிய பெருஞ் செயல்தான் ஏனைய அருட் செயல்களைக் காட்டிலும் பெரும் அளவில் பேசப் பட்டுள்ளது. எடுத்துக் காட்டாக, "காமர் சென்னிப் பிறை நுதல் விளங்கும ஒரு கண்" என்றும், "பால்புரை பிறை நுதறபொலிந்த சென்னி" என்றும் புறநானூற்றி லும், "இளம் பிறை சேர்ந்த நுதலன்" என்று பதிற்றுப் பத்திலும கூறபபட்டுள்ளன. சிலப்பதிகாரத்தில் இந்தச் செயல் பரவலாகப் பேசப்பட்டுள்ளது. எடுத்துக் காட்டாக மனையறம் படுத்த காதையில்,

"குழவித் திங்கள் இமையவர் ஏத்த
அழகொடு முடித்த அருமைத் தாயினும்"
[வரி 38-39]

என்பர் இளங்கோவடிகள். இளம் பிறையைச் சடையில் சூடியது அரும்பெரும் செயல்; எனவே அதை அமரர்கள் புகழ்ந்து ஏத்தினர்; பிறை இறைவன் சடையில் பொலிவுடன் அலங்கரிக்கிறது என்பதாம்.

ஆகமங்களில் இந்த வடிவம் மூன்று வகைகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை: 1) கேவலமூர்த்தி-அன்னையின்றி, அண்ணல் மட்டும்; 2) உமா சகித மூர்த்தி-அன்னையுடன் கூடிய அண்ணல்; 3) ஆலிங் கனமூர்த்தி - அன்னையும் அண்ணலும் ஒருவரை ஒருவர் அணைத்தநிலை. அம்சுமத்பேதாகமத்தின்படி, 4 கைகள் கொண்ட கேவலமூர்த்தியின் முன்வலக்கை அபய

முத்திரையிலும், முன்இடக்கை வரத முத்திரையிலும் இருக்க, பின்வலக்கையில் மழுவும், பின்இடக்கையில் மானும் கத்திரி முத்திரையில் அமைக்கப்படவேண்டும். மான் இறைவனை நோக்கியோ அல்லது வேறு பக்கம் திரும்பியோ இருக்கலாம். சமபங்க நிலையில் நிற்கும் இந்தத் திருவுருவின் தலையைப் பிறையுடன் கூடிய சடா மகுடம் அழகு செய்ய வேண்டும். எல்லா அணிகலன் களும் அணிந்து இருக்கவேண்டும். உத்தரகாமிக ஆகமத்தின்படி, முன்வலக்கை கடக முத்திரை அல்லது கத்யவலம் பித முத்திரையில் இருக்கவேண்டும். தாமரை இருக்கைமீது நின்றுள்ள இந்த வடிவின் இருபுறமும் தோள்கள் வரை சடை அமைக்கப்படவேண்டும். மழுவையும் மானையும் கொண்டபின் இருகைகள் தோள்களுக்கு மேல் இருக்கக்கூடாது. உமா சகித மூர்த்திவடிவில் அன்னை அண்ணலுக்கு அருகில் அமைக்கப்படவேண்டும். அம்மையையும் அப்பனையும் ஒரு இருக்கை மீது உருவாக்கலாம் அல்லது தனித்தனி யாகவும் அமைக்கலாம். ஆலிங்கன மூர்த்திக்கு மூன்று அமைப்புகளை ஆகமங்கள் விதித்துள்ளன. முதல் வடிவத்தில் இறைவன் தன் இடக்கை ஒன்றினால் அன்னையை அணைத்து இருக்கவேண்டும். அண்ணலின் கை அன்னையின் இடக்கை மீது அல்லது இடக்கொங் கைக்கீழ்க் காட்டப்படவேண்டும். அன்னையின் வலக் கையில் தாமரை மலரை அமைக்கவேண்டும். இரண்டாவது வடிவில் அன்னையின் வலக்கை இறைவனை அணைத்து இருக்க வேண்டும். இறைவனது இடுப்புக்கு மேல் வலப்பாகத்தில் அன்னையின் கையைக் காட்டவேண்டும். இவளது இடக்கையில் மலரை உருவாக்கவேண்டும். மூன்றாவது வடிவில் ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டிருக்க வேண்டும். ஸ்ரீதத்வநிதி என்ற நூலின்படி அன்னைக்கும் 3 கண்கள் அமைக்கப்படவேண்டும். திரிபங்க நிலையில் நிற்கும் அன்னை தனது வலக்கையில் நீலோற்பல மலரை ஏந்தி

இருக்க வேண்டும். இறைவனது சடாமகுடத்தில் பிறை ஒரு புறத்தில் அமைக்கப்படும். ஆடவல்லான் வடிவில் பொதுவாகச் சடைபரந்து காணப்படும்; காரணம் அவன் நடனம் புரிவதுதான். எனவே பிறை பரந்து இருக்கும் சடையில் ஒருபுறம் காணப்படும். சென்னை கந்தகோட்டத்தில் உள்ள ஆடவல்லானின் செப்புச் சிலையை இதற்குச் சான்றாகக் கூறலாம். தஞ்சைப் பெரிய கோயிலின் விமானத்தின் கீழ்த்தளத்தில் மேல் புறம் பிறை சூடிய பெம்மானின் வடிவமும், வடபுறத்தில் அன்னையைத் தழுவிய அண்ணலின் வடிவமும் சிலா வடிவங்களாகக் காணப்படுகின்றன.

ஆலிங்கனமூர்த்தியைக் கருவறையின் பின்புறம் உள்ள புரையில் அமைக்கும் முறை முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் பின்பற்றப்பட்டதாகத் தெரிகிறது. இத்தகு அமைப்பு திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த துடையூர் விஷமங்கலேசுவரர் திருக்கோயிலிலும், தென்னாற்காடு மாவட்டத்தைச் சார்ந்த ஏமப்பேரூர் வடபுரீசுவரர் திருக்கோயிலிலும் உள்ளன.

எல்லாத் திருக்கோயில்களிலும் பிறையணி பெம்மானின் செப்புப்படிமங்கள் பொதுவாகக் காணப் படுகின்றன.

# 6. 'விடைமேற்கொள் விகிர்தன்' [சுந்தரர்]

## [விருஷபாருடமூர்த்தி]

''பலபல வேடமாகும் பரனாரி பாகன்'' என்ற ஞானக் குழந்தையின் திருவாக்கிற் கேற்பச் சிவபெருமானது பல்வேறு திருவுருவங்களை அருள் பாலிக்கும் வடிவங்கள், பேராற்றலைக் காட்டும் அழிதற் றன்மை கொண்ட வடிவங்கள் எனப்பலவாகப் பகுத்து ஆகமங்கள் பேசுகின்றன. அவற்றுள் அருள்தரு திருமேனிகள் குறிப்பிட்ட அன்பருக்கு ஆதியும் அந்தமும் அற்ற அண்ணல்தன் பேரருளினைக் காட்டியதாகும். எடுத்துக் காட்டாக இராவணனுக்கு அருள் பாலிக்கும் பெம்மான், சண்டிக்கு அருள் தரும் அம்மான் ஆகியவையாம். அடியார் தன் மாட்டுக் கொண்ட அன்பின் ஆழத்தை உலகினருக்கு எடுத்துக் காட்டி, உலகோரும் உய்யும் நெறியினை உணர்த்த குறிப்பிட்ட அன்பர்களை இறைவன் ஏற்றவாறு சோதிக்கிறான். அதில் அவர்கள் மனந்தளராது நிலை குலையாது தாம் கொண்ட கொள்கைகளை உறுதியாகக் கடைப்பிடித்து ஒழுகும் போது, அடலேறு உகந்து ஏறும் ஐயன் வெளிப்பட்டு, திருவருள் புரிகிறான். குறிப்பிட்ட அன்பர்கள் முன் அகிலாண்டமும் ஈன்ற அன்னையுடன் செங்கண்மால் விடையூரும் விகிர்தனாகத் தோன்றுகிறான்.

இமயவல்லியுடன் இடப ஊர்தியாக இறைவன் வெளிப்பட்டு அன்பர்களுக்குக் கருணை பாலிப்பதை, தொண்டர்தம் சிறப்பை உலகுக்கு விளக்க எழுந்த திருத்தொண்டர் புராணத்தில் பரக்கக் காணலாம்: ''ஒரு மைந்தன் தன் குலத்திற்கு உள்ளான்'' என்பதும் உணராது மனு நீதிச் சோழன் தன் புதல்வன் மீது தேர்

வளர்ந்த போது, மழவிடைமேல் இடமருங்கில் உமையாளுடன் உம்பர்தலைவன் தோன்றித் திருவருள் புரிந்தான்; மனைவி சொன்ன சூளால் தன் இளமையைத் துறந்த திருநீல கண்டநாயனார் வேத முதல்வரை "துன்னிய விசும்பினூடு துணையுடன் விடைமேற் கண்டார்." இல்லையே யென்னாத இயற்பகையார் "தன்றுணையுடன் வானிற்றலைவனை விடைமேற் கண்டார்." இளையான்குடி மாறநாயனார்முன் "ஏலவார் குழலால் தன்னோடு இடபவாகனனாய்த் தோன் றினான்." "மலைமலிந்த தோள்வள்ளல்" மானக்கஞ் சாறன் நாயனாருக்காக "மறைப்பொருளாமவர்" "பாங்கின் மலை வல்லியுடன் பழைய மழவிடையேறி" வந்தான். ஆனாயநாயனாரின் குழலோசை கேட்டருளி தவவல்லியுடன் கண்ணுதலான் விடையுகைத்து வந்தான். தாதை எனக்கருதாது. இருதாளுந்துண்டித்த விசார சருமனார் முன் "சடைநீள் முடியாருந் தேவியோடும் விடையேறி" வெளிப்பட்டு சண்டீசப் பதவியை நல்கி அருளினான். சீகாழிப்பிள்ளையார் தோணியப்பரை நோக்கி "அம்மே! அப்பா" என்று அழுதபோது "பொன்மலை வல்லியுந்தாமும் பொருவிடைமேல் எழுந்தருளி" பிறையணி பெம்மான ஞானப்பால் ஊட்டு வித்தான். கல்லெறிந்து அருச்சித்த சாக்கிய நாயனாருக்குக் கண்ணுதலார் துணைவியோடும் மழ விடைமேல் தோன்றினான் 'புதல்வனுடல் துணித்த' சிறுத்தொண்டநாயனார் முன் மலைபயந்த தையலோடு தனி வெள்விடைமேல் வெளிப்பட்டருளினான். இம் மட்டோ! தாரகனைக் கொன்ற பின்னர்க் குமரன் மண்ணியின் கரையில் சேய்ஞலூரில் இறைவனைப் பூசித்தபோது, இறைவன் வெளிப்பட்டமை,

"உமையொரு புடையிற் சேர்தர
அருள்விடை மீமிசை அண்ணல் தோன்றினான்".

[1-14-71]

என்பர் கச்சியப்ப சிவாசாரியார் தம் கந்தபுராணத்தில். அர்ச்சுனனுடன் விற்போர், மற்போர் புரிந்தபின் அவனுக்கு அருள்புரிய இறைவன் "பச்சை மயில் பாதியுடனே துய்யவிடைமீது,"; "அருள்கூர் அம்மையுடனே விடையின் மீது" தோன்றியதாக வில்லிபாரதம் கூறுகிறது.

சமணம் ஓங்கி இருந்த பாண்டிப்பதியில் மீண்டும் சைவம் தழைத்து ஓங்க ஞானவேந்தர் திருமறைக் காட்டினின்றும் பாண்டிய நாடு செல்லத்துணிந்த போது, தாண்டகவேந்தராம் அப்பர் பெருமான் "உறு கோள் தானுந்திய" எனத் தடுக்க முயன்றார். அதுபோது ஞானச் செல்வர் "வேயுறு தோளிபங்கன்" என்ற திருப்பதிகத்தினை அருளி, அன்னாரின் இசைவுடன் பாண்டிய நாடு சென்றார். பிறவாயாக்கைப் பெரியோன் இறைவியுடன் விடைமீது எழுந்தருளுதலால், நவ கோள்கள், சோதிட ரீதியாக விலக்கப்பட்ட நாள்கள், கூற்றுவன், தீ இடி மின்னல் போன்ற இயற்கை உற்பாதங்கள், சிங்கம், புலிபோன்ற கொடிய விலங்குகள், வாதம், பித்தம், செய்வினையால் ஏற்படும் நோய்கள், அரக்கர், கொடுமை நிறைந்த பூதங்கள், நீர்ப்பிராணிகள், அலை கடல் மற்றும் பிற வலிமை மிக்க சக்திகள் ஆகியவற்றால் அன்பர்களுக்கு இடுக்கண் விளையாது; நன்மையே விளையும் என இத்திருப்பதிகத்தில் அருளியுள்ளார். மேலும் இத்திருப்பதிகத்தின் திருக்கடைக் காப்பில், "தானுறு நாளும் கோளும் அடியாரை வந்து நலியாத வண்ணம் உரைசெய்" ததாகக் குறிப்பிட்டு உள்ளார். இத்திருப்பதிகத்தில் "வேயுறு தோளி", 'ஏழை', 'உமை', 'மதிநுதல் மங்கை', 'மடவாள்', 'மடவாள்', 'செப்பிளமுலைமங்கை', 'மடவாள்', 'நாரி', 'கொத்தலர்குழலி' என ஒவ்வொரு பாட்டிலும் அருட்சக்தியாகிய அன்னைபோற்றிப் பரவப்படுகிறாள். இதுவுமன்றி "வேயுறுதோளி" என்று இந்தத்திருப்பதிகம் அன்னையுடன் தொடக்கம் செய்யப்பட்டுள்ளது

என்பதும் குறிப்பிடத்தக்கது. "எருதேறயேழையுடனே" "உமையோடும் வெள்ளைவிடைமேல்", "மடவாள் தனோடும் விடையேறு நங்கள் பரமன்", "செப்பிள முலை நன்மங்கையொருபாகமாக விடையேறு செல்வன்" "விடைமேலிருந்து மடவாள் தனோடும்", "நாரிபாகன் பசுவேறும் எங்கள் பரமன்" என 6 திருப்பாடல்களில் பண்ணிலாவு மொழி அம்மையுடன் மால் விடைமேல் மதியணி பெம்மான் அயர்ந்து வரும் திருக்கோலத்தைச் சிறப்பிக்கிறார். இவ்வாறாக அன்னையுடன் விடையூரும் விமலன் திருவுரு அடியார்க்கு எல்லா இன்னல்களையும் களைந்து திருவருள் புரியும் என்பதை தெளிவுற வலியுறுத்துகிறார்.

"அருட் கருணைதானாய திருவுள்ள முடைய தவவல்லி" என்பது சேக்கிழார் பெருமான் திருவாக்கு. எனவே ஏறு உகந்து ஏறுவோன் இடப்பாங்கு உறையும் உமையம்மை அருளின்திருவுரு; அருட்சக்தி எனப்பெறும் அவள் கருணையே திருமேனியாக உடைமையால், சேக்கிழார் பெருமான் "தொல்லைமால்வரை பயந்த தூயோள்." என்றும் வழுத்துகிறார். அருட்சக்தியாகிய அன்னையின் அருளின்றி, அத்தனின் அருள் இல்லை. "சத்தியருளின்றிச் சத்தனருளின்றாகும்" என்பது திருமூலர் திருவாக்கு. எனவேதான் அடியாருக்கு அருள இறைவன் வெளிப்படும் போது, அருளே திருமேனியாக உடைய அன்னையுடன் எழுந்தருளுகின்றான். இம்மட்டோ! எப்பொருளிடத்தும் எல்லா இடத்தும் இன்பம் காணப்பெறின், அது அருளாற்றலாம் சக்தியாம்; எனவே அனைத்து இன்பமும் அருட்சக்தியின் திருவுரு எனவும் கொள்ளப்படுகிறது.

"சக்தி வடிவு சகல ஆனந்தம்
ஒத்த ஆனந்தம் உமையவள் மேனியாம்" (1728)

என்பது செந்தமிழ் மறையாம் திருமந்திரம். இந்நிலையில் இறைவன் இனியவனாய் இருத்தல், அங்கயற்கண்ணி அவனின் ஒரு கூறாக உள்ளபோது தான் நிகழ்கிறது.

''கொத்தார் மலர் குழலாளொருகூறாய் அடியார்
பால்
மெய்த்தாயினும் இனியானை' (220)

என்பர் சேக்கிழார் பெருமான். ''எஞ்சாத வாட்டாய நாயனார்'' தம் கழுத்தை அரியும் போது அச்செயல் புரிவதினின்றும் அவரை ''அம்பலத்தாடும் ஐயர் வீசிய செய்யகை தடுத்தது,'' ஆடவல்லானின் முன் இடக்கை தான் வீசிய நிலையில் காணப்படும். ''சிக்கனவா வீசுகரம்'' என்பது உண்மை விளக்கம்; இறைவனது இடப்பாங்கில் அன்னை உறைவதால், அவன் முழு வடிவில் வெளிப்படாது கையால் தன் அன்பரை தன் கழுத்தை அரியும் செயலினின்றும் தடுத்தபோது, வலக்கையின்றி இடக்கை தான் தடுத்தது. திருக்குறிப்புத் தொண்டர் தமது தலையைப் பாறைமீது முட்டி மோத முயன்ற போது, அவரை அச் செய்கையினின்றும் தடுத்தது ''அணிவளைத் தழும்பர்மலர்ச் செங்கை'' யாம். இங்கும் இறைவி பாகத்துக் கைதான் அன்பரை தமது தலையைப் பாறை மீது மோதுவதினின்றும் தடுத்தது என்பது குறிப்பிடத்தக்கது. இறைவன் வெளிப்பட்டுத் தனது திருவருளை நல்கி, அடியார்களை அந்தமில் அழியாப் பேரின்பத்தை அடையச் செய்யும்போது, ஆனந்தத்தின் வடிவாய் அருளின் திருவுருவாய்ப் பொலியும் அன்னையுடன் எழுந்தருளுவது முற்றிலும் பொருத்தமே.

''கடகரியும் பரிமாவும் தேரும் உகந்தேறாதே
இடபம் உகந்து ஏறிய வாறெனக்கறிய இயம்பேடீ''
(269)

என்பர் மணிவாசகப் பெருந்தகையார்.

"படிமத வாரணம் பேணுந்துரக நிற்கப் பெரிய
இடிகுரல் வெள்ளெருது ஏறுமிது என்னை கொல்
எம்மிறையே"
[திருநாகை - திருவிருத்தம்-1]

என வினவுகிறார் அப்பர் அடிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகளும்,

"விடையேறு வதென் மதயானை நிற்க"
[திரு அஞ்சைக்களம்-5]

என வியப்பை அடைகிறார். யானை, குதிரை, தேர், ஆகியவை இருக்க, சிவபெருமான் ஏற்றினைத் தனது ஊர்தியாகக் கொள்வானேன்? இதற்கு மணிவாசகப் பெருமானே பதிலும் அளித்துள்ளார்.

தடமதில்கள் அவை மூன்றாம் தழல் எரிந்த
அந்நாளில்
இடபமதாய் தாங்கினான் திருமால் காண்
சாழலோ" (269)

முப்புரங்களைச் சிவபெருமான் சிரித்து எரித்த போது திருமால் ஆனேற்று வடிவமாகச் சிவபெருமானைத் தாங்கினான் எனத் தொன்னூல்கள் கூறும். இதனால் தான் "மிகுபீடுடை மால்விடையான்" "செருமால் விடையூருஞ் செல்வன்" என சம்பந்தப் பெருமானும், "போரார்ந்த மால்விடை யொன்றூர்வான்", "செங்கண் மால் விடையார்" என அப்பர் பெருமானும், "வெள்ளை மால் விடையாய்", "வேதமால் விடை ஏறவல்லானை" என சுந்தரமூர்த்தி சுவாமிகளும் தமது தேவாரத் திருப்பதிகங்களில் போற்றியுள்ளனர்.

விடை அறக்கடவுளாகக் கொள்ளப்படுகிறது. ஊழிமுடிவிலும் விடையாகிய அறக்கடவுள் தன் முடிவை அடையாது இறைவனைத் தாங்கி நிற்கும் என்பர்.

"நல் அறவடிவாய் விளங்கும் ஏற்றுப் பொருப்பூரும் அபிராம் சுந்தரன்" "தருமமால் விடை" என்றெல்லாம் திருவிளையாடற் புராணம் குறிப்பிடுகிறது. ஊழி காலத்து "ஏறதாயொரு எழிலுரு"க்கொண்டு அறக் கடவுள் இறைவனை அணுக, அவன் அதனைப் "பரிவொடு ஊர்தியாய்த் தாங்குதி யாரினுந் தலைமை பெற்றுளாய்" என்று தன் ஊர்தியாக ஏற்றுக் கொண்டதாகக் கந்த புராணம் கூறுகிறது. "நீதியாய போருடை விடையொன்றேற வல்லவர்" என்பது அப்பர் அடிகள் திருவாக்கு. "அடல் விடை" என்பர் திருமூலர். அடல் விடை என்றால் பாவத்துடன் போரிடும் புண்ணிய ஏறு என்பதாம். அறம் என்றும் இளமையாக இருப்பது, என்றும் மூப்பினை அடையாதது. எனவே தான் திருவருட் செல்வர்களால் 'மழவிடை' எனப் போற்றப்பட்டது. அறம் என்றும் தன் நிலையில் பிறழாது இருப்பதால், 'மழவிடை' என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. அறத்தின் மாண்பை வள்ளுவப் பெருந்தகையார் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளார்:

"அறத்தினூஉங்கு ஆக்கமுமில்லை அதனை
மறத்தலின் ஊங்கு இல்லை கேடு" (33)

இறைவன் விதித்த வழிஅறம். அதன் வழி நடத்தலும் அறமாம், இறைவனை "வேண்டுதல் வேண்டாமை இலான்" என்பர் பொய்யாமொழிப் புலவர். ஆனேறும் இறைவனைப் போன்று விருப்பு, வெறுப்பு அற்றது: அதற்கு உரிய பல பெயர்களில் 'விடை' என்பதும் ஒன்று. விடை என்றால் விடுதலை; அதாவது விருப்பு, வெறுப்புக்களை விடுதலாம். மேலும் அது மனித வாழ்விற்கு இன்றியமையா உணவுப் பொருட்களை உற்பத்தி செய்ய பெரிதும் பயன்படுகிறது. தன்கடும் உழைப்பால் விளைந்த நெல் முதலியவற்றை மனிதன் பெற, வைக்கோலை தனது உணவாகக் கொள்கிறது: சத்தைப் பிறர் அடைய, சக்கையைத் தான் அதுபெறு

கிறது. அது தன்னை வருத்தி, பிறரை வாழ வைக்கும் பண்பு கொண்டது.

மக்களின் உடல் வளர்ச்சிக்கு மிகவும் இன்றியமையாதவற்றுள் ஒன்று பசுவின் பால், தாய்ப்பால் பெற இயலாத குழந்தைகட்கும் பசுவின் பால் தருவது உலக வழக்கு. இறைவனை வழிபடும் முறைகளில் ஆனஞ்சாட்டுதல் சிறப்பாகக் கருதப்படுகிறது. "ஆனிடையைந்து கந்தான்" என்பது ஞானப் பெருந்தகையின் திருவாக்கு. பால், தயிர், நெய், கோமூத்திரம், கோமலம் என்பன ஆனைந்தாம். இவற்றால் வழிபட்டால், உயிருக்கு உய்வு உண்டாகும் என்பது ஆன்றோர் திருவாக்கு. இங்ஙனம் உடலுக்கும் உயிருக்கும் உறுதி பயக்கும் பசுவினை "ஊனமில் ஆயம்" என்பர் சேக்கிழார் பெருமான். பிறரை வருத்தி தான் வாழ எண்ணுவோன் கீழ்மகன். பிறரும் வாழவேண்டும்; தானும் வாழவேண்டும் என்னும் கருத்துடையோன் இடைப்பட்டவன். தான் அழிந்தாவது பிறரை வாழ வைப்போன் சான்றோன் எனப்படுவான்.

"ஓங்கு பெருஞ் செந்நெலூடு கயலுகள
பூங்குவளைப் போதில் பொறி வண்டு கண்படுப்ப
தேங்காதே புக்கிருந்து சீர்த்த முலைபற்றி
வாங்கக் குடம் நிறைக்கும் வள்ளற்பெரும் பசுக்கள்"
[திருப்பாவை-3]

என்பது சூடிக்கொடுத்த நாச்சியார் திருவாக்கு. பசு தன் பாலை அளிப்பதன் மூலம் தன்னை அழித்துக் கொண்டு பிறரை வாழவைக்கிறது.

சமணர்களுடன் புனல் வாதம் பொருட்டு சம்பந்தப் பெருமானால் ஏட்டினில் எழுதி வையையாற்றில் விடப்பட்ட திருப்பாடல்,

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்"

என்ற தொடக்கம் கொண்டது. எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டு ஒழுகும் அறவோராம் அந்தணர் மற்றும் விண்ணோருடன் ஆனினம் ஒரு சேர இத்திருப் பாடலில் அருளப்பட்டுள்ளது. இவ்வாறு வாழ்த்து வதால் ஏற்படும் பயனை சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில்,

> ''அந்தணர் தேவர் ஆனினங்கள் வாழ்க'' என்று
> இந்த மெய்ம் மொழிப் பயன் உலகம் இன்புறச்
> சந்த வேள்விகள் முதல் சங்கரர்க்கு முன்
> வந்த அர்ச்சனை வழிபாடு மன்னவாம்'' (2720)

என அழகாக எடுத்துரைக்கிறார். உலகோர் துன்பம் நீங்கி இன்பம் எய்த மந்திரங்களைக் கொண்ட சிவவேள்விகள் உள்பட அர்ச்சனைகளும் ஏனைய வழிபாடுகளும் நிலை பெறச்செய்வதே இந்த வாழ்த்தினால் ஏற்படும் பெரும் பயனாகும். இது ஒன்றே போதும் ஆனினத்தின் சிறப்பை விளக்க.

அடியார்களின் பாசத்தை நீக்கி பேரின்ப வெள்ளத்தில் அழுந்தச் செய்ய இறைவன் வெளிப்படும் போது ஏறூர்ந்து வருதால், அதை மணிவாசகப் பெருமான் ''இருள் மடிந்தருளிய இன்ப ஊர்தி'' என்பர். இறைவன் அடியாருக்கு அருளவெளிப்படும் போது உலகோர் உய்ய அறநெறியையும் வலியுறுத்துவதால், அவன் அறக்கடவுளாகிய ஏற்றின்மீது அமர்ந்து வருவது சாலப்பொருத்தமே.

''ஆகமங்கள் விருஷபாரூடமூர்த்தியை மட்டும் குறிப் பிடுகின்றன. இந்த வடிவு விருஷப வாகன மூர்த்தி என்றும் அழைக்கப்பெறும். ஆகம விதிகளின்படி, சிவபெருமான் விடைமீது உட்கார்ந்தும் இருக்கலாம் அல்லது அதன் முன்னால் நின்று கொண்டும் இருக்கலாம். சிவபெருமானது நின்ற நிலையில் வலக்கால் ஊன்றி

இருக்க, இடக்கால் சிறிது வளைந்து காணப்படும். இந்த நிலை திரிபங்க நிலை எனப்படும். முன் இடக்கை வளைந்து பின்னால் நிற்கும் காளையின் தலைமீது வைத்த நிலையில் காணப்படும். முன்வலக்கையில் வக்ர தந்தாயுதம் என்ற படைக்கலம் இருக்கும். பின் வலக்கையில் மழுவும், பின்இடக்கையில் மானும் உருவாக்கப் படவேண்டும். தலையில் சடா மகுடம், சடாபத்தம் அல்லது சடாபாரம் இவற்றில் ஒன்று காணப்பெறும். இடது அல்லது வலப்பக்கத்தில் உள்ள அன்னை அத்தனைப் போன்று திரிபங்க நிலையில் அமைக்கப் படவேண்டும். வலக்கையில் நீலோற் பலமலரும், இடக்கை கத்ய வலம்பித முத்திரையிலும் காணப்படும். இருவருக்கும் பின்னால் காளையை உருவாக்க வேண்டும். இவ்வாறாக ஆகமங்களில் இந்த வடிவின் நின்ற நிலைதான் விரிவாக விதிக்கப்பட்டுள்ளது.

நெல்லைமாவட்டம் திருவாலீசுவரம் விமானத்தில் உள்ள சிலாவடிவம் நின்ற நிலையில் உள்ளது. தஞ்சை மாவட்டம் திருவெண்காடு கோயிலைச் சார்ந்ததும், தற்போது தஞ்சை அருங்காட்சியகத்தில் உள்ளதுமான செப்புப்படிமம் நின்ற நிலையில் உள்ளது. கங்கை கொண்ட சோழீச்சுரத்தில் உள்ள செப்புப் படிமமும் நின்ற நிலையில்தான் உருவாக்கப்பட்டுள்ளது. ஆகம விதிகளின்படி, இந்த வடிவங்களை விருஷபாருடமூர்த்தி என்றே கூறவேண்டும். ஆனால் சிற்பக்கலைவல்லுநர்கள் இவற்றை விருஷபாந்திகர் என்றே அழைக்கின்றனர். இதினின்றும் விடைமீது அமர்ந்துள்ள வடிவங்களை விருஷபாருடமூர்த்தி என்றும், காளையுடன் கூட நின்ற நிலையில் உள்ள திருவுருவங்களை விருஷபாந்திகர் என்றும் கொள்ள வேண்டியுள்ளது.

ஏனூரும் பெம்மானை பொதுவாகச் செப்புப் படிமங்களாகத்தான் அமைத்தனர். இறைவன் இந்த வடிவில் தான் அன்பர்களுக்கு அருளத் தோன்றும்

காரணத்தால், திருவிழாக்காலத்தில் அன்பர்கள் காண வீதி உலா வர இந்த வடிவம்தான் ஏற்றது எனக்கருதி இத்தகு வடிவங்களைச் செப்புப் படிமங்களாக உருவாக்கினர் போலும்; ஒரு சில கோயில்களில் எடுத்துக்காட்டாக புதுக்கோட்டை திருக்கோகர்ணீசுவரர் கோயில் போன்றவற்றில் இந்த வடிவம் சிலா வடிவிலும் உள்ளது:

> ''தெருளாதான் மெய்ப் பொருள் கண்டற்றால்தேரின்
> அருளாதான் செய்யும் அறம்'' (249)

என்பர் தெய்வப்புலவர், அருள் அற்றவன் செய்யும் அறம் மெய்ஞானம் இல்லாதவன் உண்மைப் பொருளை கண்டாற்போலும் என்பதாம். அறத்திற்கு அடிப்படை அருள் என்பது போதரும். இறைவன் அடியார்களுக்கு அருளும்போது அறத்தையும் நிலை நாட்டுகிறான். எனவே தன் அன்பர்களுக்குத் திருவருள்புரியும் இறைவன் அருட் சக்தியாகிய குரவநாறும் குழல் உமையுடன் அறக் கடவுளாகிய சினவிடைமேல் தோன்றுவது முற்றிலும் பொருத்தமே.

# 7. "தாயும் தந்தையும் சேயும் ஆயான்" [சம்பந்தர்]

## [சோமாஸ்கந்த மூர்த்தி]

நீலமணி மிடற்றனான சிவபெருமான் பொதுவாக இலிங்கத் திருவுருவில் வழிபடப்பட்டபோதிலும், உலகிற்கு ஊறுவிளைவிப்போரைத் தண்டிக்கவும், அன்பர்களுக்கு அருளவும் பலதிருவுருவங்களைத் தாங்கியதாகக் கொள்ளப்படுகிறான். மேலும் ஆடவல்லானாகவும், ஆன்மீக நெறி அருளும் ஆசானாகவும் பரவப்படுகிறான். இவையன்றி பிறையணி பெம்மான், பிச்சை உகுக்கும் பெம்மான் போன்றவை "என்பாக எங்கும் அணிந்தானின்" ஏனைய திருவுருவங்களாம். அவற்றில் ஒன்று சிவனுமை முருக திருவுரு [சோமாஸ்கந்த திருவுரு].

கொடியேர் நுண்ணிடையாளாம் உமையாளுடன் கூடிய திருவுருவில் [உமாசகிதமூர்த்தி] அண்ணல் சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க, அன்னை இடப்பக்கத்தில் காணப்படுவாள். அத்தனை நான்கு கைகளுடனும் அன்னையை 2 கைகளுடனும் அமைக்க வேண்டும். அரவம் அரைக்கசைத்த அம்மானின் பின் வலக்கையில் மழுவும், பின் இடக்கையில் மானும் இருக்க, முன் இடக்கை வரத முத்திரையிலும், முன் வலக்கை அபயமுத்திரையிலும் காணப்படும். மலையரையன் பாவையின் வலக்கையில் மலரும், இடக்கை இருக்கை மீதும் இருக்கும். பண்ணிலாவிய மொழியம்மை படரும் சடைமீது பாய் புனல் அணிந்த பால் வெண்ணீற்றனை நோக்கியபடி காணப்படுவாள். மலையான் மகளுடன் கூடிய இத்தகைய திருவுருவில்

பெற்றோர்களுக்கு இடையில் பிணிமுக ஊர்தியாம் முருகனைக் கொண்டதே சிவனுமை முருகுதிருவுரு.

நிலத்தை 4 பிரிவாகக் கண்ட தமிழர் குறிஞ்சிநிலக் கிழவனாகக் குன்றுதோறும் ஆடும் குமரனைக் கொண்டனர். சங்க காலத்தில் தமிழகத்தில் வணங்கப் பெற்ற வால்வளைமேனி வாலியோனாம் பலதேவனுக்கு இன்றைக்கு கோயில் இல்லை. ஆனால் செந்தூர் வடிவேலன் அற்றை நாள் தொடங்கி இற்றை நாள் வரை தமிழகத்தின் தனிப்பெருங் கடவுளாகப் போற்றப் படுகிறான். 'செந்தமிழ் நூல் விரித்தோன்'' என்றும், ''முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்போன்'' என்றும் திருவருட் செல்வராம் அருணகிரிநாதர் அருளி யுள்ளார். இதனின்றும் தமிழ் மக்களுக்கு செவ்வேளிடம் கொண்ட ஈடுபாடு புலப்படும். செந்தமிழ்க் கடவுளாம் செங்கோட்டு வெற்பனைக் குழந்தையாகக் காண்பதில் தமிழர்கள் தனி இன்பம் கண்டனர்; இந்த நூற்றாண்டைச் சார்ந்த மகாகவி பாரதியார் கூட

''அறிவாகிய கோயிலிலே
அருளாகிய தாய் மடிமேல்
பொறிவடி வேலுடன் வளர்வாய்''

எனக்கூறியது இங்கு நினைவு கூரத்தக்கது. குழந்தையைப் பெற்றோர்களுடன் காண்பதே இயற்கை. இதன் விளைவுதான் சிவனுமை முருகு திருவுரு. எனவே வள்ளிமணாளனின் வழிபாடு சிறப்பாக உள்ள தமிழகத்தில் அதற்குரிய கடவுள் திருவுருவங்களில் சிவனுமை முருகு திருவுரு ஒன்றாக அமைந்ததில் வியப்பு ஏதும் இல்லை. இந்தத் திருவுரு வடநாட்டில் இல்லை என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

காடரங்கா மா நடமாடிய நீதியனின் பல்வேறு திருவுருவங்களை சைவ சமயக் குரவர்களில் தலைசிறந்த

மூவரும் தமது திருப்பதிகங்களில் பலவற்றானும் போற்றிப் பரவி ைசத்துள்ளனர். திருஞானசம்பந்தப் பெருமான் சப்தவிடங்கத்தலங்களில் ஒன்றான திருக் காறாயிலில் எழுந்தருளியுள்ள கண்ணாயிரநாதர் மீது பாடிய திருப்பதிகத்தில்

''தாயானே தந்தையும் ஆகிய தன்மைகள்
ஆயானே ஆயநல்லன்பர்க்கு அணியானே
சேயானே''

எனத் திங்கள் தங்கும் தாழ்சடையானைத் தாயாகவும் தந்தையாகவும் சேயாகவும் கூறியுள்ளார். இது சோமாஸ்கந்த திருவுருவினைக் குறிக்கும் குறிப்பாகக் கொள்ளப்படுகிறது. இக்குறிப்பைத் தவிர இறையருட் செல்வர்களாகிய மூவரும் தமது திருப்பதிகங்களில் இந்தத் திருவுருவைப் பற்றி வேறு எங்கும் குறிப்பிட வில்லை.

சரவணப் பொய்கையில் விடப்பட்ட சிவ பெருமானின் தொல்லைத்திருமுகம் ஆறினின்றும் தோன்றிய ஆறுதீப் பொறிகளினின்றும்,

''கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டுங் கொண்டே
ஒருதிருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலக மூய்ய.'' [1-11-92]

அன்னையும் அத்தனும் தம் குமரனைக்காணச் சரவணப் பொய்கையை அடைந்தனர். இறைவனின் ஆணையின் படி இறைவி தன் மகனை சரவணப் பொய்கையினின்றும் எடுத்து கொங்கையுறுபால் அருத்தி தன் நாயகனிடம் கொடுத்தாள். அவனை இறைவன் ஒரு பக்கத்தில் இருத்தி, தன் இடப்பாகத்து அன்னையை உட்கார வைத்தாள். இங்ஙனம் இவர்கள் மூவரும் வீற்றிருந்து

அருள்வதை கச்சியப்ப சிவாசாரிய சுவாமிகள் தம் கந்தபுராணத்தில்,

''ஏலவார் குழல் இறைவிக்கும் எம்பிரான் தனக்கும்
பாலனாகிய குமரவேள் நடுவுறும் பான்மை
ஞாலமேலுறும் இரவொடு பகலுக்கும் நடுவாய
மாலையானது ஒன்று அழிவின்றி வைகுமா
றொக்கும் [1-13-26]

என்று இரவு பகல் மாலைப் பொழுதுடன் ஒப்பிடுகிறார். கந்தனது பிறப்பு, திருவிளையாடல் ஆகியவற்றைக் கூறும் கந்த புராணத்தில் சிவபெருமான், உமையம்மை, முருகன் ஆகிய மூவரும் ஒன்றாக இருப்பதாகக் குறிப்பிடும் முதல் திருவுருவமே சோமாஸ்கந்தவடிவம் என்பது குறிப்பிடத்தக்கது.

இறைவன் சச்சிதானந்தமயமாக உள்ளவன் எனப் படுகிறது. சத் என்றால் உண்மை, சிவம்; சித் என்றால் அறிவு, சக்தி; ஆனந்தம் என்றால் இன்பம், முருகன். இவ்வாறாக சிவனுமை முருகு என்ற திருவுரு இறைவனின் சச்சிதானந்த இயல்பினைக் குறிப்பிடு வதாகத் தத்துவ ரீதியாகப் பொருள் கொள்ளப்படு கிறது. இதனைப் பாம்பன் குமரகுருபரதாச சுவாமிகள் தமது 'திருவலங்கற்றிரட்டு' என்ற நூலின்கண், ''எங்கே அறிவோ அங்கே உண்மையும் - எங்கே உண்மையோ அங்கே அறிவும் - எங்கே இன்பமோ அங்கே அறிவும் - எங்கே அறிவோ அங்கே இன்பமும் - எங்கே இன்பமோ அங்கே உண்மையும் - எங்கே உண்மையோ அங்கே இன்பமும்-எங்கே சிவையோ அங்கே சிவமும் - எங்கே சிவமோ அங்கே சிவையும் - எங்கே சேயோ அங்கே சிவையும் - எங்கே சிவையோ அங்கே சேயும் - எங்கே சேயோ அங்கே சிவமும் - எங்கே சிவமோ அங்கே சேயும் ஆமென்றறிவர் தாமே அறிஞர்'' என்று விளக்கமாக அருளியுள்ளார்.

ஸ + உமா + ஸ்கந்த = சோமாஸ் கந்தர் அதாவது உமை, கந்தனுடன் கூடிய திருவுரு சோமாஸ் கந்தவடிவம என்பதாம்.

ஆகம விதிகளின்படி, கந்தம்கமழ் கொன்றையணி பெமமானுககும் ''கொங்கியல் பூங்குழற் கொவ்வைச் செவ்வாய் கோமாள மாதுமையாளுக்கும் ''இடையில் சூர்மா தடிந்த கோழிக் கொடியோனைக குழந்தையாகக் காட்டவேணடும், சேந்தன் நின்றநிலை, நடனநிலை, இருகைகை அலலது அனனையின் மடி மீது உட்கார்ந்த நிலை என்பவற்றில் ஏதாவது ஒரு நிலையில இருக்கலாம். அணிதிகழ அறுமுகச் செவவேள் எனினும் அவனுககு ஒருதலையும் இருகைகள்தாம் இருக்கவேணடும். தலையில கரந்த மகுடம் இலங்க, காதுகளில் மகர குணடலம் விளங்க, மார்பல் சன்னவீரம் என்ற அணிகலன் அணிநது இருக்கவேண்டும். நின்ற நிலையில் இருப்பின, ஒருகையில மலரும், மற்றொருகை கத்யவலம் பித முத்திரையிலும் இருக்கலாம. அல்லது இருகை களிலும் மலரை ஏந்தி இருக்கலாம். ''சிலபரதனம்'' என்ற ஆகமததின் படி. ''குருகு பெயர் குன்றம் கொனறான'' மேலாடை ஏதுமின்றி [குழந்தை அலலவா] இடக்கை வரத முத்திரையிலும், வலக்கை புத்தகதது உடனும் இருககவேணடும். நடன நிலையில் இருப்பின, வலக்கை சூசி முத்திரையிலும் இடக்கையில பழமும் இருக்க வேண்டும். ''கரண ஆகம'' விதிகளின்படி, சிவனுமை முருகு திருவுருவிற்கு இருமருங்கும் நான் முகனும், கொணடல் வணணனாம் திருமாலும் தத்தம் மனைவியருடன் இருக்க வேணடும்.

தமிழகத்தில் பண்டை நாள் தொட்டு கோயில்கள் இருந்தமைக்கு இலக்கிய சான்றுகளும் பிறவும் உள்ளன. சங்ககால இலககியமான புறநானூற்றில் பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதியை வாழ்த்தும் காரிகிழார்

"பணியிரத்தை நின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர் வலஞ் செயற்கே"

(புறம் 6)

என்று குறிப்பிட்டுள்ளார். அதாவது முனிவர்களால் போற்றி வணங்கப் பெறும் நுதல் விழி நாட்டத்து இறையோனின் கோயிலை வலம் வருகையில் பாண்டிய மன்னனது வெண் கொற்றக்குடை வணக்கத்திற்கு அறிகுறியாகத் தாழவேண்டும் என்பதாம். கி.பி. 600 முதல் 630 வரை காஞ்சியில் செங்கோலோச்சிய பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திரவர்மனின் சமகாலத்தவரான திருஞான சம்பந்தர் நான் மாடக் கூடல் பற்றிய தமது திருப்பதிகத்தில்,

"கணங்களாய் வரினும் தமியராய் வரினும் அடியவர்
தங்களைக் கண்டால்
குணங்கொடு பணியும் குலச்சிறை குலாவுங்
கோபுரஞ் சூழ் மணிக்கோயில்" (4)

என்று திதுதிர் மதுரையம் பதியில் ஆலவாய் "கோபுரத்துடன் கூடிய மணிக்கோயில்" என்று அருளியுள்ளார். "குறியவும் நெடியவும் குன்று கண்டன்ன" பொலிவு பெற்ற அற்றை நாள் கோயில்கள் "சுடுமண் ஓங்கிய நெடுநிலைக்கோட்டம்" என்று மணிமேகலையிற் குறிப்பிட்டாற் போன்று செங்கல்லால் கட்டப்பெற்றமையால், அவை காலத்தை எதிர்த்து நிற்க இயலாது அழிந்து போயின. இற்றை நாள் கோயில்களின் வளர்ச்சியின் முதற்கட்டம் குடைவரைக் கோயில்கள், இவற்றைத் தமிழகத்தில் தோற்றுவித்த பேறுபெற்றவன் 'விசித்திர சித்தன்' என்று தன்னைக் கூறிக்கொண்ட பல்லவப் பேரரசன் முதலாம் மகேந்திர வர்மன். இவன் காலத்திலும், இவன் மகன் வாதாபி கொண்ட மாமல்லன் என்ற புகழ் மிக்க முதலாம் நரசிம்மன் காலத்திலும் இவன் பேரன் பரமேசுவரவர்மன்

காலத்திலும் உருவாக்கப் பெற்ற குடைவரைக் கோயில்களின் கருவறையில் இறை உரு ஏதும் இல்லை. பரமேசுவரவர்மன் மகனும் இரண்டாம் நரசிம்மன் எனப் பெற்ற இராசசிம்மன் காலத்தில் அமைக்கப்பெற்ற குடைவரைக் கோயில்களிலும், எழுப்பப்பெற்ற கற்றளிகளிலும் கருவறையின் பின் சுவரில் சோமாஸ்கந்த திருவுருப் புடைச் சிற்பமாக உருவாக்கப்பெற்றது.

கி.பி. 680 முதல் 700 வரை பல்லவ அரியணையை அலங்கரித்த இராசசிம்மன் சிவனை முழுதும் மறவாத சிந்தையான். இவன் தன்னை 'சிவசூடாமணி', 'ஈசானபக்தன்', 'தேவ தேவ பக்தன்', 'ஸ்ரீசங்கர பக்தன்' என்று பெருமைப்படக் கூறுவதினின்றும் கூற்றை உதைத்த கூத்தனிடம் இவன் கொண்ட அளப்பற்ற அன்பு தெளிவாகிறது. குடைவரைக் கோயில்களை உருவாக்கியதோடு, தன் தந்தையால் தொடங்கப்பெற்ற கற்றளிகளைக் கட்டும் பணியினையும் போற்றத்தக்க வகையில் செய்துள்ளான். இவனால் கட்டப்பெற்ற கற்றளிகளான காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயில், மாமல்லபுரம் கடற்கரைக் கோயில், பனமலை தளபுரீசுவரர் கோயில் சிற்பக்கலை உலகில் மாபெரும் புகழ் அடைந்துள்ளன.

மாமல்லபுரத்தில் இறந்த முறையில் முற்றுப்பெற்ற இராமனுச மண்டபத்தின் கருவறையின் பின் சுவரில் சோமாஸ்கந்த திருவுரு புடைச் சிற்பமாகச் செதுக்கப் பெற்றுள்ளது. இந்தத் திருவுருவின் காலடியில் உருவம் ஏதும் இல்லை, இங்குள்ள மற்றொரு குடைவரைக் கோயிலான யமபுரி எனப்பெறும் மகிஷாசுரமர்த்தினி கோயிலின் கருவறையின் பின் சுவரில் அண்ணல் சுகாசனத்தில் 4 கைகளுடனும், அன்னை இரு கைகளுடன் ஆறுமுகவனைத் தன் மடி மீது வைத்தும் காணப்படுகிறார்கள்: இவர்களது காலடியில் காளையும் அன்பன் ஒருவனும் உள்ளான்; விடை மற்றும் அன்பன்

ஒருவனுடன் கூடிய சோமாஸ்கந்த திருவுரு இது ஒன்று தான். இத்திருவுருவிற்கு இருபுறமும் அயனும் அரியும் காணப்படுகின்றனர். இவர்களுடன் ஞாயிறு இங்குக் காட்டப்பட்டுள்ளது இதன் தனிச்சிறப்புகளில் ஒன்றாம். இங்குள்ள "ஈஸ்வரகிருகம்" எனப்படும் தர்மராச இரதத்தின் மூன்றாவது நிலையில் உள்ள கருவறையிலும் இத்தகு வடிவம் உள்ளதாகத் தெரிகிறது. மாமல்ல புரத்தை அடுத்த சாலுவன் குப்பத்தில் உள்ள "அதிரான சந்த பல்லவ கிருகம்" எனப்பெறும் குடைவரைக் கோயிலின் கருவறையின் பின் சுவரில் வெண்கொற்றக் குடையுடனும், மலரோனும் மாலும் புடைசூழவும் சோமாஸ்கந்த திருவுரு புடைச்சிற்பமாகச் செதுக்கப் பட்டுள்ளது. கருவறையை அடுத்த முன்மண்டத்தில் இருபுறமும் சோமாஸ்கந்த திருவுருவங்கள் அமைக்கப் பட்டுள்ளன. பாண்டியாகள் குடைவரைக்கோயில்களில் திருப்பரங்குன்றத்தில் மட்டும் இலிங்கத்திருவுரு உள்ள கருவறையின் பின் சுவரில் இந்த வடிவம் காணப் படுகிறது.

பல்லவ மன்னன் இராச சிம்மனால் கட்டப்பெற்ற கைலாயநாதர் கோயில், கடற்கரைக்கோயில், தளபுரீ சுவரர் கோயில் ஆகியவற்றின் கருவறையின் பின் சுவரிலும் இத்திருவுரு உருவாக்கப் பெற்றுள்ளது. கைலாய நாதர் கோயிலில் மதிலாக அமைந்துள்ள பல சிற்றாலயங்களில் இந்தவடிவம் உள்ளது. அவற்றில் சில அக்கால வர்ணபூச்சுடன் காணப்பெறுவது குறிப்பிடத் தக்கது. தளபுரீசுவரர் கோயிலில் கருவறையின் பின் சுவரில் காணப்பெறும் இத்தகு திருவுருவுடன் முன் புறத்தில் மறையவனும் கடலில் பள்ளி கொண்டோனும் தத்தம் மனைவியருடன் புடைச் சிற்பமாக உள்ளனர். இத்தகு திருவுருவிற்கு முன் பொதுவாக 16 பட்டை தீட்டிய தாவர இலிங்கம் வைக்கப்பெற்று இருக்கும்.

மேலே குறிப்பிட்ட திருவுருவங்களினின்றும் வேறு பட்ட திருவுரு திருச்சியை அடுத்த திருப்

பைஞ்ஞீலியில் உள்ள குடைவரைக் கோயிலில் காணப் படுகிறது. 4 கைகள் கொண்ட இறைவன் சுகாசனத்தில் உட்கார்ந்துள்ளான், தலையில் சடாமகுடம் இலிங்கம், இவனது முனவலக்கையின் முத்திரையிலும் முன் இடக்கை தொடை மீதும் இருக்க, பின்வலக்கையில் மழுவும் பின இடக்கையில் அக்கமாலையும் காணப்படு கின்றன. 2 கைகள் உடைய அன்னை சென்று அடையாத திருவுடைய அப்பனுக்கு இடப்பக்கத்திற்குப் பதிலாக வலப்பக்கம் அமைக்கப்பட்டுள்ளான். இருவருக்கும் இடையில் முருகன் நின்ற நிலையில் காணப்படுகிறான். இதன் காலடியில் உள்ள உரு யமன் என்று சொல்லப் படுகிறது. எனவே இது யமன் கோயில் என்று சொல்லப் படுகிறது. அறியாமையைக் குறிக்கும் முயலகனைத்தான் ஆடவல்லான் மற்றும் ஆலமர் செல்வன் காலடியில் அமைப்பது மரபு. அதற்குக் காரணம் அறியாமையாகிய இருள் அகன்றாலன்றி

"சோதி
இளம் பருதி நூறாயிரங் கோடி போல
வளந்தரு தெய்வீக வடிவை"க்

காண இயலாது என்பதுதான். எனவே இங்குக் காலடியில் உள்ள உருவை முயலனாகக் கொள்வதே பொருத்தமாகத் தோன்றுகிறது. அன்னை இடப்பாகம் அன்றி வலப் பக்கமாக இருப்பது இதன் தனிச்சிறப்பாகும்.

பல்லவப் பேரரசன் இராசசிம்மன் காலத்திற்குப்பின் சோமாஸ்கந்த திருவுரு கருவறையில் அமைக்கப்பட்ட தாகத் தெரியவில்லை; எனவே இத்திருவுருவை இவன் காலத்திய தனிச்சிறப்பு எனக்கொள்ளலாம். சோழப் பேரரசின் காலத்தில் உலோக சிற்பம் உலகப்புகழ் பெறும் அளவு முதிர்ச்சி அடைந்தது. அக்காலத்தில் ஏனைய திருவுருவங்களோடு இத்திருவுருவையும் வடிப்பதில் ஊக்கம் காட்டியதன் விளைவாக இன்றைக்குப் பெரிய

சிவன் கோயில்களில் எல்லாம் இத்திருவுருவினைப் பஞ்சலோகச் சிலையாகக் காணும்பேறு உள்ளது.

சிவன்றன் திருக்கோயில்களில் இந்தத் திருவுரு பொதுவாக உலோக வடிவமாகத்தான் காணப்படுகிறது. இதினின்றும் வேறுபட்டு, கற்சிலையாக இந்தவடிவம் திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திருமழபாடி திருக் கோயிலில் உள்ளது. அழகான், மிடுக்குடன் காணப்படும் இந்த வடிவம் வேறும் எங்கும் இல்லாத ஒன்றாம்.

# 8. ''புரம் செற்ற கொற்றச் சேவகன்'' [மணிவாசகர்]

## [திரிபுராந்தகமூர்த்தி]

''எட்டுக் கொலாம் அவர் ஈறில் பெருங்குணம்'' என்பர் அப்பர் பெருமான். திருவள்ளுவப் பெருந் தொகையும் 'கடவுள் வாழ்த்தில்' இறைவனை 'எண் குணத்தான்' என இறைவனுக்கு எட்டுக் குணங்கள் உள்ளனவாகக் குறிப்பிடடுள்ளார். இவ்வாறு போற்றப் படும் எட்டுக் குணங்களாவன; தன் வயத்தனாதல், தூய உடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்ப முடைமை. இவற்றில் ஒன்று. முடிவிலாற்றலுடைமை: இறைவனது ஆற்றலுக்கு முடிவு இல்லை அதாவது அவன் பேராற்றல் படைத்த பெருந்தகை என்பதாம். தமிழ் மரபுப்படி சொல்ல வேண்டுமானால், அவன் ஆற்றலின் திருவுரு. அவனது அளப்பற்ற ஆற்றலை உணர்த்தும் எட்டு வீரச் செயல்களில் ஒன்று அவன்தன் புன்னகையால் முப்புரங்களை எரிமடுத்தது.

தாரகாட்சன், கமலாட்சன், வித்யுன்மாலி என்ற மூன்று அவுணர்கள் இரும்பு, வெள்ளி, பொன் ஆகிய வற்றால் மூன்று கோட்டைகளை அமைத்தனர். அவற்றில் தத்தம் சுற்றம் சேனை சூழ இருந்து வானத்தில் திரிந்து இமையோர்களுக்கு இன்னல்கள் விளைவித்து வந்தனர். அமரர்களின் துன்பத்தைத் துடைக்க இறைவன் அவர்கள் மீது போருக்கு எழுந்தான். பூமி தேர்த்தட்டாகவும், ஞாயிறும் திங்களும் தேர்ச்சக்கரங் களாகவும், மறைகள் குதிரைகளாகவும் அமைந்தன.

பிரமன் தேரோட்டியாக அமர, மேருமலை வில்லாகவும், வாசுகி என்ற பாம்பு நாணாகவும், திருமால் அம்பாகவும் அமைந்தனர்.

"வேந்தன் வளைத்து மேருவில்
அரவு நாண் வெங்கனை செங்கண்மால்
போந்த மதிலணி முப்புரம்
பொடியாட வேதப்புரவித் தேர்
சாந்தை முதல்! அயன் சாரதி" (6)

என்பர் சேந்தனார் தமது திருவிசைப்பாவில். தங்களால் தான் சிவபெருமான் அவுணர்களை வெற்றி கொள்ளப் போகிறார் என்று அமரர்கள் அகந்தை அடைந்தனர். தேர்த்தட்டில் இறைவன் தன் காலை வைத்தவுடன் அதன் அச்சு முறிந்தது. வானவர்களின் அகந்தையை எண்ணி இறைவன் எள்ளி நகைத்தான். அந்தச் சிரிப்பில் உட்பர்கள் உதவி ஏதுமின்றி அவுணர்களின் மூன்று நகரங்களும் தீயால் வெந்து சாம்பலாகிவிட்டது. இதை,

"எண்ணார் புரமூன்றும் எரிஉண்ண நகை
செய்தாய்"
[திருவெண்ணை நல்லூர்-6]

என்று ஆரூருடைய நம்பிகள் அருளியுள்ளார். தாரகாட்சன்முதலிய மூவரும் அரக்கர்களாயினும், முறை தவறாது சிவபூசை செய்தவர்கள். அவர்கள் மூவரும் நற்பண்பினன், நல்லொழுக்கினன், நல்லறிவினன் எனப் பட்டனர். அவர்கள் முறையே சுகுணன், சுசீலன், சுபுத்தி என்று அழைக்கப்பட்டனர். இறைவன் முப்புரத்தை எரித்த போதிலும், முப்புராதிகள் முறையாகச் சிவபூசை செய்தமையால் அவர்களை அழிக்கவில்லை. தீப்பற்றி எரிந்த அரக்கு மாளிகையி னின்றும் உயிரோடு தப்பிய வீமனை வில்லிபுத்தூரர் தம் பாரதம் என்ற நூலில் "முக்கண் அற்புதன் முனிந்த

ஊர் மூவரோடு ஒப்பான்'' என்று முப்புரத்து அசுர மன்னர்கள் தீயில் மாளாததுடன் ஒப்பிட்டுக் காட்டியுள்ளார். அவர்கள் தன்னிடம் கொண்ட பேரன்பின் காரணமாக அவர்களில் இருவரைத் தன் வாயிற்காப் போராகவும், மூன்றாமவனை முழவு வாசிப்பவராகவும் அண்ணல் ஆட்கொண்டான்.

''அடங்கலார் ஊர் எரியச்சீறி அன்று
மூவர்க்கு அருள் புரிந்தீர்''

[திருவெண்காடு-1]

எனத் தம்பிரானின் தோழராம் சுந்தரர் தமது திருப்பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு பகைவர்களுக்குத் தீயாகவும், அடியார்களுக்கு அமுதாகவும் ஒரே காலத்தில் இரு தன்மைகளுடன் இருந்த இறைவனது சிறப்பைத் தாண்டக வேந்தர் தமது திருவையாறு திருத்தாண்டகத்தில்

''ஆரார் திரிபுரங்கள் நீறா நோக்கும்
அனலாடி ஆரமுதே'' (1)

என்றும்,

''தீவாயின் முப்புரங்கள் நீறா நோக்குந் தீர்த்தா'' (2)

என்றும் அருளியுள்ளார், இதை அமரர்களின் அகந்தை அழியப்புன்னகையும், சிவபூசை தவறா அவுண அரசர்கள் மூவர் உய்ய தண்ணகையும், சிவபூசை தவறிய முப்புரத்தில் வாழ்ந்தோரை அழிக்க வெந்நகையும் பிறவா யாக்கைப் பெரியோன் புரிந்ததாகக் கூறுவர்.

இறைவனின் அளக்கலாற்றா ஆற்றலை உணர்த்தும் இந்த மாபெருஞ் செயலைத் திருவருட் செல்வர்கள் தமது திருவாக்குகளால் பலவாறாகப் போற்றியுள்ளனர். எடுத்துக்காட்டாக,

"இமையவர் ஏத்தச்
சில்லை மால் விடையேறித் திரிபுரந்தீயெழச்செற்ற
வில்லினார்" [திருத்தெங்கூர்-6]

என ஆளுடைய பிள்ளையும்,

"செம்பு கொப்பளித்த மூன்றுமதிலுடன்
சுருங்க வாங்கி
அம்பு கொப்பளிக்க எய்தார்"
[திரு அதிகை வீரட்டானம்-2]

என ஆளுடைய அரசுகளும்,

"நிற்பானும் கமலத்தில் இருப்பானும் முதலா
நிறைந்து அமரர் குறைந்து இரப்ப
நினைந்து அருளி அவர்க்காய்
வெற்பார்வில் அரவு நாண் எரி அம்பால்
விரவார் புரமூன்றும் எரிவித்த
விகிர்தனை" [திருக்கரிய நல்லூர்-5]

என ஆளுடைய நம்பிகளும்,

"கொன்றான்காண் புரமூன்றுங் கூட்டோடே
சாழலே" (16)

என ஆளுடைய அடிகளும் போற்றியுள்ளனர். மேலும் மணிவாசகப் பெருந்தகையார் "திருவுந்தியார்" என்ற ஞானவெற்றியில் முதல் நான்கு பாடல்களில் இந்த வீரச் செயலைப் புகழ்ந்துள்ளார்.

பிறை கொப்பளித்த சடையராம் இறைவனின் எட்டு வீரச் செயல்களில் ஏனையவற்றை விட மூவெயில் முருக்கியதைத்தான் திருவருட்செல்வர்கள் பெருமளவில் தமது திருப்பதிகங்களில் பரவியுள்ளனர் என்பது அவர் தம் திருமுறைகளைப் பயின்றோர் அறிவர். சம்பந்தப்

பெருமான் சுமார் 329 இடங்களிலும், அப்பர் பெருமான் 285 இடங்களிலும், வன்றொண்டர் 72 இடங்களிலும், திருவாதவூரர் திருவாசகத்தில் 21 இடங்களிலும், திருக்கோவையாரில் 26 இடங்களிலும் இதைப் போற்றி வணங்கியுள்ளனர். 9 ஆம் திருமுறையில் இது 17 இடங்களில் பரவப்பட்டுள்ளது. திருமால் அன்பர்களாகிய ஆழ்வார்கள் தமது திருப்பாசுரங்களில் காமனைக் காயந்ததையும், தக்கன் பெருவேள்வி தகர்த்ததையும், யானை உரி போர்த்ததையும் ஓர் இடத்தில் மட்டும் குறிப்பிட்டிருக்க, முப்புரங்களை அழித்ததை 10 இடங்களில் பேசியுள்ளனர். ஏனைய வீரச் செயல்களைப்பற்றிய குறிப்பு அவர்தம் திருப்பாசுரங்களில் இல்லை. இதினின்றும் திருவருட் செல்வர்களில் ஞானவேந்தர்தாம் இந்த அரிய செயலைப் பெரிதும் போற்றியுள்ளனர் என்பது தெளிவாகிறது.

திரிபுரம் வேவச் செய்தமைக்குத் திருமூலர் தமது திருமந்திரத்தில் தத்துவரீதியாக வெகு அழகாகப் பொருள் கூறியுள்ளார்:

''அப்புஅணி செஞ்சடை ஆதிபு ராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார்அறி வாரே'' (329)

என்பது அவரது திருவாக்கு. ஆறு சடைக்கரந்த அண்ணல் ஆருயிர்களின் செவ்விநோக்கி, ஆணவம், மாயை, கன்மம் என்ற மூன்று மலங்களைத் தன் திருவருள் நோக்கால் சுட்டு எரித்தான். இவ்வாறு இறைவன் ஆருயிர்கள் உய்யும்பொருட்டு இயங்கி வருவதைச் சாதாரண மக்களும் உணர வேண்டி முப்புரங்களைச் சுட்டெரித்தான் என உருவகம் கொண்ட கதையாக அமைக்கப்பட்டது என்பதாம்.

இரும்பு, வெள்ளி, பொன் ஆகியவற்றால் முப்புரங்களின் கோட்டைகள் அமைக்கப்பட்டன. இரும்பு ஆணவ மலத்தையும், வெள்ளி மாயா மலத்தையும், பொன் கன்ம மலத்தையும் குறிப்பதாகக் கருதப்படுகிறது. அன்பு, அறிவு, ஆற்றல் ஆகிய நற்பண்புகள் அரக்க அரசர்கள் மூவரையும், தீய பண்புகள் முப்புரங்களில் வாழ்ந்த அவுணர்களையும் உணர்த்துவதாகக் கொள்ளப்படுகிறது. அவுணர்கள் அழிந்தது இறைவன் திருவருள் நோக்கத்தால் தீய பண்புகள் அழிக்கப்பட்டதைச் சுட்டிக் காட்டுகிறது. அவுண அரசர்கள் மூவரும் அண்ணலால் வாயிற் காப்போராகவும் முழவு வாசிப்பவனாகவும் ஆட்கொள்ளப்பட்டது அறிவு வலப் பக்கத்துக் காவற்கும், ஆற்றல் இடப்பக்கத்துக் காவற்கும், அன்பு பின்னால் குடமுழக்குவதற்கும் அமைந்துவிட்டன என உள்ளுறைப் பொருளாகக் கூறப் படுகிறது.

"உலகேத்த சிலையால் எயில் எய்தான்" [கோயில்-2] என்பது ஞானவேந்தரின் திருவாக்காம். சிலை என்றால் வில் என்றும் மலை என்றும் இருபொருள்கள் உண்டு. "கற்றூண் பிளந்து இறுவது அல்லால் பெரும் பாரம் தாங்கிற்றளர்ந்து வளையுமோதான்" என்பர். கல் பெரும் பாரத்தால் தாங்காது பிளந்து உடையுமன்றி, வளையாது. வளையாத உறுதிபடைத்த மேருமலையை இறைவன் வளைத்தது அவனது அளக்கலாகா அளப்பற்ற ஆற்றலைத்தான் உணர்த்துகிறது. ஆருயிர்களின் கல் போன்ற மனத்தை இறைவன் செவ்வி நோக்கி தன்பால் வளைத்து, "நமசிவாய" என்ற திருவைஞ்செழுத்தாகிய தன் திருப்படைக்கலத்தால் மும்மலங்களைச் சிதைத்தான் என்றும் பொருள் சொல்லப்படுகிறது. மும்மலங்கள் சிதைந்தால், பிறப்பு அறுந்துவிடும் என்பதும் பெறப்படுகிறது.

இறைவனது அற்பபோராம் திரிபுரப்போருக்கு இமையோர்கள் பல ஏற்பாடுகளைச் செய்தனர். இதனால்

அவர்கள் தங்களால்தான் அண்ணல் வெற்றியடையப் போகிறான் என்று அகந்தை கொண்டனர். இதை அறிந்த அண்ணல் தன் காலைத் தேர்மீது வைக்க, அதன் அச்சு முறிந்தது: வானவர்களின் அறியாமையை எண்ணி அவன் எள்ளி நகைக்க, அந்தச் சிரிப்பால் முப்புரங்கள் அழல்பட்டு நீறாகியது. இவை இறைவனின் திருவருளால் உலகம் இயங்குகிறது அன்றி, அதைத் துணையாகக் கொண்டு அண்ணல் செயல்படவில்லை என்பதாகவும் பொருள் சொல்லப்படுகிறது.

எண்ணார் புரமூன்று எரி உண்டதை நாவுக்கரசர் பெருமான் தமது தனி விருத்தத்தில்,

''மூவா உருவத்து முக்கண் முதல்வ மீக்கூரிடும்பை
காவாயெனக் கடைத்தூங்கு மணியைக்கையால் அமரர்
நாவாய் அசைத்த ஒலி ஒலிமாறியது இல்லை அப்பால்
தீயாய் எரிந்து பொடியாய்க்கழிந்த திரிபுரமே'' (3)

என்பர். அமரர்கள் பூமி தேர்த் தட்டாக, ஞாயிறுந் திங்களும் இருசக்கரங்களாக என்று எந்த ஏற்பாடுகளையும் செய்யவில்லை. அவர்கள் இறைவன் எழுந்தருளியுள்ள கோயிலின் கடைவாயிலில் உள்ள மணியை அசைத்துத் தம் துன்பத்தை முறையிட்டனர். அந்தக் கடை வாயில் மணியின் ஒலி அடங்கு முன் மூன்று நகரங்களும் வெந்து பொடியாகிவிட்டன என்பதாம். ஆருயிர் ஆணவத்தை அகற்றி இறைவனை அடைக்கலம் அடைந்து தம்மைக் காக்க வேண்டினால், இறைவனது திருவருளால் அது வேண்டியது வேண்டியாங்கு உடனே எய்தும் என்று இதன் உள்ளுறைப் பொருளாகக் கூறப்படுகிறது.

இறைவனது திருவருள் திருவடியாகவும், ஆருயிரின் உடம்பு தேராகவும், ஊழ்வினை தேரின் அச்சாகவும்

பொருள் கொள்ளப்படுகிறது: இறைவனது திருவடி தேரில் வைத்தவுடன் அதன் அச்சுமுறிந்துவிட்டது என்பது இறைவனின் திருவருள் கைகூடப்பெறின், உடம்பின் ஊழ்வினை அற்று விடுகிறது என்றும் தத்துவ ரீதியாகச் சொல்லப்படுகிறது.

பேணார் புரங்கள் மூன்றை எரித்ததை நாவுக்கரசு பெருமான்,

''கற்றார் பயில் நாகைக் காரோணத்து எங் கண்ணுதலே
விற்றாங்கிய கரம் வேய் நெடுங்கண்ணிவியன்கரமே
நற்றாள் நெடுஞ்சிலை நாண் வலித்த கரநின்கரமே
செற்றார் புரஞ்செற்ற சேவகம் என்னை கொள் செப்புமினே''

[திருநாகைக்காரோணம்-2]

என்று இறைவனையே கேட்கிறார். முப்புரத்தின்மேல் இறைவன் போருக்கு எழுந்த போது, தனது இடக்கையில் வில்லையும், வலக்கையில் அம்பையும் ஏந்தி இருந்தான். அவனது இடப்பாதி அன்னை. எனவே இறைவன் அவற்றைத் தீமடுக்க அம்பு எய்தான் என்பது எவ்வாறு என்று நகைச்சுவை ததும்பக் கேட்கிறார்.

திருவருட் செல்வர்கள் மட்டுமன்றி செந்நாப் புலவர்களும் ஏனைய வீரச்செயல்களைக் காட்டிலும் முப்புரங்களை எரிமடுத்ததைத்தான் பெரிதும் புகழ்ந்து உள்ளனர். எடுத்துக்காட்டாக, பத்துப்பாட்டுள் ஒன்றான திருமுருகாற்றுப்படையில் ''மூ வெ யி ல் முருக்கிய முரண்மிகு செல்வனும்'' [வரி 154] என மூன்றவாது படைவீடான திருவாவினன்குடி என்ற பகுதியில் நக்கீரனார் இந்தச்செயலைச் சிறப்பிக்கிறார். சிவபெருமானின் பெருவலியை உணர்த்த புரம் மூன்று எரித்ததைச் சுட்டிக்காட்டுகிறார்.

எட்டுத் தொகை நூல்களான புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை ஆகிய வற்றிலும் இந்தச் செயல் பேசப்பட்டுள்ளது.

> ''ஓங்கு மலைப் பெருவிற் பாம்புஞாண்கொளீஇ
> ஒருகணை கொண்டு மூவெயில் உடற்றிப்
> பெருவிறல் அமரர்க்கு வென்றி தந்த
> கறை மிடற்று அண்ணல்'' [புறம் 55]

என்பது புறநானூறு: உயர்ந்த மலையாகிய பெரிய வில்லில் பாம்பாகிய அம்பைப்பூட்டி, மூன்று நகரங்களை எய்தான். அதன் மூலம் பெருவலி படைத்த அமரர் களுக்குச் சிவபெருமான் வெற்றியை அளித்தான் என்பதாம்:

பதிற்றுப்பத்து என்ற நூலில் கடவுள் வாழ்த்தில்,

> ''பொன்றார்
> எயிலெரி யூட்டிய வில்லன்'' [வரி [illegible]-[illegible]]

என்று இந்தச் செயல் பேசப்பட்டுள்ளது. அவுணர்களது மதில்களை தீ மடுத்த வில்லினை உடையவன் சிவபெருமான் என்பதாம்.

பரிபாடலில் 5 ஆம் பாடலில்,

> ''ஆதி அந்தணன் அறிந்துபரி கொளுவ
> வேதமா பூண் வையத்தேர் ஊர்ந்து
> நாக நாணா மலைவில் லாக
> மூவகை ஆரெயில் ஓரழல் அம்பின் முளிய
> மாதிரம் அழல வெய்து அமரர் வேள்விப்
> பாகம் உண்ட பைங்கண் பார்ப்பான்''
> [வரி [illegible]-[illegible]];

என்று இந்த வீரச் செயல் விரிவாக உரைக்கப் பட்டுள்ளது. மறைகளாகிய குதிரைகள் பூட்டப்பெற்ற, பூமியாகிய தேரை பிரமன் செலுத்த, சிவபெருமான் மூன்று மதில்களை இமயமலையாகிய வில்லில் வாசுகி யாகிய அம்பைப் பூட்டி எய்தான். அவன் எய்த தீக் கணையால் முப்புரம் அழிந்தது என்பதாம். மேலும் அதே நூலில் முதல்பாட்டில்,

"பணிவில்சீர்
செல்விடைப் பாகன் திரிபுரஞ் செற்றுழி"
[வரி 75-76]

என்றும் சொல்லப்பட்டுள்ளது. தலைமைத் தன்மை யினை உடைய காளையை ஊர்தியாகக் கொண்ட சிவபெருமான் முப்புரத்தை அழித்த காலத்தில் என்பதாம். "திரிபுரம் தீ மடுத்து," "முக்கண்ணான் மூவெயிலும் உடன்ற" என்பன கலித்தொகை.

முப்புரம் எரியக் கண்டு இறைவன் கைகொட்டி ஆடிய நடனம் கொடுமை உடைய காரணத்தால் "கொடுங் கொட்டி" என்ற பெயர் பெற்றது. அது "கொடு கொட்டி" என்னாயிற்று. புகார் நகரில் இந்திர விழாவின் இறுதி நாளில் மாதவி தன் காதலன் கோவலனுக்கு ஆடிக்காட்டிய 11 வகை நடனங்களுள் "கொடுகொட்டி" ஒன்று என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

"திரிபுரம் எரியத் தேவர் வேண்ட
எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப
உமையவள் ஒருதிற னாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொடுகொட்டி ஆடலும்"
[கடலாடுகாதை, வரி 40-43]

பிரமன் தலையைக் கொய்தது, காலனைக் காலால் காய்ந்தது, முப்புரம் எரி செய்தது, யானை உரி

போர்த்தது, தக்கன் பெருவேள்வி தகர்த்தது, அந்தகா சூரனைக் கொன்றது, காமனைக் கண்ணாற் காய்ந்தது, சலந்தராசூரனைக் கொன்றது ஆகிய சிவபெருமானின் எட்டு வீரச் செயல்களில் இது மாபெரும் வீரச் செயலாம். ஏனெனில் பெருவலி படைத்த அவுணர்களை அழிக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டிருப்பினும், இறைவன் படைக்கலம் ஏதுமின்றித் தன் சிரிப்பால் அவர்களை அழித்தான். எனவேதான் வீரத்தைத் தம் உயிரினும் மேலாகக் கருதிய பண்டைத் தமிழர்கள் இறைவனின் ஏனைய வீரச் செயல்களைக் காட்டிலும் இந்தச் செயலில் தம் மனத்தைப் பறிகொடுத்து அதைப் பெரும் அளவில் போற்றிப் புகழ்ந்தனர் என்று கொள்ளலாம்.

எட்டு வீரச் செயல்களைப் புரிந்த திருவுருவங்களில் அந்தகனைக் கொன்ற வடிவிற்கு ஆகமங்களில் விதிகள் இல்லை. முப்புரம் எரித்த திருவுரு நீங்கலாக ஏனைய 6 வடிவங்களுக்கு ஒரு அமைப்பைத்தான் ஆகமங்கள் சொல்லுகின்றன. ஆனால் இந்த வடிவை மட்டும் எட்டு வகைகளாக உருவாக்கலாம் என்று சொல்லப்பட்டுள்ளது. முதல் வடிவத்தில் வலக்கால் சற்று முன்னாலும், இடக்கால் சற்று வளைந்து பின்னாலும் இருக்க வேண்டும். 4 கைகளில் முன் வலக்கை அம்பு கோக்கப்பெற்ற வில்லின் நாணினையும், முன் இடக்கை அம்பையும் பிடித்து இருக்க, பின் வலம் மற்றும் இடக்கைகள் நிரலே மழுவையும் மானையும் கத்திரி முத்திரையில் ஏந்தி இருக்க வேண்டும். அம்பு பல வர்ணங்களில் தீட்டப்பெற்று, சிவபெருமான் சிறுவிரல் கனத்திலும், 3 வளைவுகள் கொண்ட அல்லது பிறைத் திங்கள் வடிவில் அமைந்த வில் இறைவனது கை முட்டி கனத்திலும் இருக்க வேண்டும். தலையில் சடாமகுடத்தை அமைக்க வேண்டும். இரண்டாவது வடிவத்தில் இறைவனது இடக்கால் முயலகன் மீது வைக்கப்பட்டிருக்க வேண்டும். மூன்றாவது வடிவத்தில்

இடக்கால் நேராகவும், வலக்கால் சற்று வளைந்தும் அமைக்கப்பட வேண்டும். நான்காவது வடிவில் வலக்கால் முயலகன் மீது இருக்க வேண்டும். ஐந்தாவது வடிவில் முன் வலக்கையின் உள்ளங்கை மேல்நோக்கியும், முன் இடக்கையின் உள்ளங்கை கீழ் நோக்கியும் உள்ள நிலையில் அம்பைப் பிடித்துக் கொண்டிருக்க பின் வலக்கையில் மழுவும், பின் இடக்கைகளில் மான் அல்லது வில் காணப்படவேண்டும். இந்த 5 வடிவங்களுக்கும் 4 கைகள் அமைக்கப்படவேண்டும். 8 கைகள் கொண்ட ஆறாவது வடிவில் வலக்கை நான்கில் அம்பு, மழு, கத்தி மற்றும் வச்சிரம் இருக்க, இடக்கை இரண்டில் வில்லும் கேடயமும் இருக்க வேண்டும். ஏனைய இரு இடக்கைகள் விசுமய மற்றும் கடக முத்திரைகளில் உருவாக்கப்படவேண்டும். 10 கைகள் கொண்ட ஏழாவது வடிவில் வலக்கைகளில் அம்பு, சக்கரம், சூலம், மழு மற்றும் வச்சிரம் இருக்க, இடக்கைகள் மூன்றில் வில், சங்கு மற்றும் கேடயம் ஆகியவற்றை அமைக்க வேண்டும். ஏனைய இரு இடக்கைகள் விசுமய மற்றும் சூசி முத்திரைகளில் காட்டப்படவேண்டும். கடைசியான எட்டாவது வடிவம் தேருடன் அமைக்கப்படவேண்டும்; வலக்கால் உயரத் தூக்கிய நிலையிலும், இடக்கால் தேரின் நடுவிலும் இருக்க வேண்டும். பிரமா தேரோட்டியாகவும், திருமால் காளை வடிவில் தேரின் அருகிலும் காட்டப்படவேண்டும். எல்லா வடிவங்களுக்கும் அன்னையை இடப்புறத்தில் அமைக்க வேண்டும்.

இத்தகு வடிவங்கள் ஆங்காங்கு உள்ள திருக்கோயில்களில் காணப்படினும், கலை அழகு மிக்க இரு திருவுருவங்கள் குறிப்பிடத்தக்கனவாம். ஒன்று சுதை வடிவில் இந்த வீரச் செயல் நிகழ்ந்ததாகப் போற்றப்படும் திருவதிகையிலும், மற்றொன்று ஓவியமாக தமிழக மன்னர்களில் தன்னிகரற்ற மாமன்னன் இராசராச சோழன் கட்டிய தஞ்சைப் பெரிய கோயிலிலும் உள்ளன.

தென்னார்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டியை அடுத்துள்ள திருவதிகை திருக்கோயிலின் கருவறையின் தென்புறப் புரை ஒன்றில் உள்ள தேருடன் அமைந்துள்ள இந்தத் திருவுரு சுதையாலானதாம். ஆகம விதிகளி னின்றும் வேறுபட்டு இங்கு வலக்கால் ஊன்றி இருக்க, இடக்கால் மடித்து முன்னால் காட்டப்பட்டுள்ளது. மேலும் ஆகமங்களில் இந்த வடிவிற்கு 4, 8, 10 கைகள் தாம் கூறப்பட்டுள்ளன. ஆனால் இங்கு 12 கைகள் உருவாக்கப்பட்டுள்ளன. இந்தக் கைகளில் சூலம், சத்தி, வில், அம்பு போன்ற படைக்கலங்கள் அமைக்கப் பட்டுள்ளன. அம்பை எய்ய வில் வளைந்த நிலையில் உள்ளது. வில்லின் மேல் கோடியில் உள்ள பாம்பின் தலையினின்றும் வில்லில் நாண் பூட்டப்பட்டுள்ளது என்பது தெளிவாகத் தெரிகிறது. கால் மற்றும் வில் வளைந்த நிலை இறைவன் முப்புரங்கள் மீது போர் தொடுக்கும் நிலையில் உள்ளான் என்பதை உணர்த்து கிறது. இறைவன் தலையில் சடாமகுடம் அழகு செய்கிறது. பிரமா தேர் முன்பகுதியில் தேரோட்டியாக உட்கார்ந்து உள்ளான். தேரை அடுத்துத் திருமால் காளை வடிவில் காட்டப்பட்டுள்ளான். இறைவனைச் சுற்றிலும் அமரர்கள் காணப்படுகின்றனர். இறைவனின் திருவுரு எழில் மிக்கதாக உருவாக்கப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கதாம்.

தஞ்சைப் பெரிய கோயிலில் கருவறையைச் சுற்றி உள் சுற்றுப்பாதை அமைக்கப்பட்டுள்ளது. அங்கு வடபுறச் சுவரில் முப்புரங்கள் மேல் போருக்கு எழுந் தருளும் இறைவனின் திருக்கோலம் அழகு மிளிர தீட்டப்பெற்றுள்ளது. 8 கைகள் கொண்ட அண்ணலின் கைகளில் படைக்கலங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. மேருவாகிய வில்லை வளைத்து, வாசுகி என்னும் பாம்பை நாணாக ஏற்றி, திருமாலாகிய அம்மை அதில் வைத்து எய்யும் நிலையில் உள்ளான். நான்முகன் தேரைச் செலுத்த, மூத்த பிள்ளை பெருச்சாளி மீதும்,

இளைய பிள்ளை மயில் மீதும், காளி சிங்கத்தின் மீதும் அமர்ந்து இறைவனைச் சுற்றிக் காட்டப்பட்டுள்ளனர். மூவெயில் எரி செய்த செல்வன் மற்றும அரக்கர்களின் முகங்களில் வீரம் இயற்கையாகக் காட்டப்பட்டுள்ளது. அவுணர்கள் என்ன நேருமோ என்று அஞ்சுவதால், அவர்கள் பரிவுக்கு உரியவர்களாகத் தென்படுகின்றனர். இறைவனின் வீரக் கோலத்தைக் காணும் இமையோர்கள் வியப்பின் எல்லையை எய்தியமை காணப்படுகிறது. ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் தீட்டப் பெற்ற இந்த ஓவியம் சோழர்கால ஓவியங்களின் தனிச் சிறப்புக்குச் சான்றாக விளங்குகிறது. இதுவுமன்றி, இந்தத் திருக் கோயிலின் விமானத்தின் மேற்றளத்தில் முப்புரம் எரி செய்த பெம்மான் வில் ஏந்திய நிலையில் உள்ள வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இதுவும் அக்கால மக்கள் வீரத்தை எவ்வாறு போற்றினர் என்பதை உணர வைக்கிறது.

ஏனைய வீரச் செயல்களைப் புரிந்த திருவுருவின் பெயருடன் எடுத்துக்காட்டாக யானை உரி போர்த்த மூர்த்தி போன்று வேறு கோயில்களில் மூலவர் இருப்ப தாகத் தெரியவில்லை. ஆனால் திரிபுராந்தகர் என்ற பெயரைக் கொண்ட மூலவராக உள்ள திருக்கோயில்கள் தமிழகத்தில் உள்ளன. எடுத்துக்காட்டாக கி. பி. 731 முதல் 796 வரை பல்லவப் பேரரசனாக விளங்கிய இரண்டாம் நந்திவர்மன் காலத்தில் காஞ்சிபுரத்தில் திரிபுராந்தகேசுவரர் கோயில் எடுப்பிக்கப்பட்டது. தொண்டை நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற 14வது தலமான திருவிற்கோலம் சென்னையினின்றும் பேரம் பாக்கம் வழியாக அரக்கோணம் செல்லும் வழியில் உள்ளது. அது தற்காலத்தில் கூவம் என்று அழைக்கப் பெறுகிறது. தூங்கானை மாடம் என்ற விமான அமைப்பினைக் கொண்ட இந்தத் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவனது திருப்பெயர் திரிபுராந்தகர் என்பதாம். இவன் தீண்டாத மேனியை

உடையவன் என்பர். அதிக மழை பெய்வதாக இருந்தால், இவன் மீது வெண்மை நிறம் படரும்; போர் வருவதாக இருந்தால், சிவம் நிறம் படர்கின்றது என்று சொல்லப் படுகின்றது. இங்கு இறைவன் முப்புராதிகள் மேல் போர் தொடுக்க வில் ஏந்திய காரணத்தால், இந்தத் தலம் திருவிற்கோலம் எனப் பெயர் பெற்றது. போருக்குச் செல்லுமுன் தேவர்கள் தன்னை வணங்காத காரணத்தால், இறைவனது தேரின் அச்சை விநாயகர் முறியச் செய்து விட்டார்.

''முப்புரம் எரி செய்த அச்சிவன் உறைரதம்
அச்சது பொடி செய்த அதிதீரா''

என்பது அருணகிரிநாதர் திருவாக்கு. எனவே இங்குள்ள திருச்சுற்றில் தென் மேற்கு மூலையில் உள்ள பிள்ளையார் அச்சிறுத்த பிள்ளையார் என வணங்கப் படுகிறார். இறைவனது தேரின் அச்சு இற்ற இடம் அச்சிறுபாக்கம் எனப்படுகிறது. இது தொண்டை நாட்டில் தேவாரப் பாடல் பெற்ற 29வது தலமாகும்.

திருமாலின் 10 தோற்றங்களில் உலகளந்தான் வடிவம் போன்று சிவபெருமானின் அட்ட வீரச் செயல் களில் இது திருவருட் செல்வர்களாலும் செந்நாப் புலவர் களாலும் அதிக அளவில் பாராட்டப் பெற்றுள்ளது. மேலும் ஏனைய தலங்கள் சிலவற்றிலும் இப்பெயர் கொண்ட மூலவர் உள்ளனர். வீரத்தைத் தம் உயிரினும் மேலாகக் கருதியதால்தான் தமிழ் மக்கள் வீரத்தின் நிலைக்களான இந்த வடிவத்திடம் இவ்வாறு பேரன்பு கொண்டவர்களாக அதைப் பரவி வணங்கி வந்தனர்.

# 9. பிறைதங்கு சடையானும், புள்ளூர்தியும்

[சங்கர நாரயண மூர்த்தி]

சைவமும் வைணவமும் இந்து சமயத்தின் இரு கண்கள் எனப் போற்றப்படுகின்றன. சைவத்தில் பிறவா யாக்கைப் பெரியோனாம் சிவபெருமானை முழு முதற் பொருளாகப் பரவப்பட்டால், வைணவத்தில் அரவணைத்துயிலும் திருமாலை மூலமும் நடுவும் ஈறும் இல்லா முதல்வனாக வணங்கப்படுகிறான். சிவபெரு மானுக்கு ஆலமர் செல்வன், ஆடவல்லான், பிச்சை உகக்கும் பெம்மான் போன்ற வடிவங்கள் உள்ளன. அதே போன்று நெடிய மாலுக்கு மீன் முதலாகப் பத்து தோற்றங்களும் [அவதாரங்களும்], அருள் பாலிக்கும் அம்மான் ஆகிய வடிவங்களும் இருக்கின்றன. இந்த இருபெருந் தெய்வங்களின் ஒருங்கிணைந்த திருவுருவம் தான் அரி அரன் [சங்கர நாராயணன்] வடிவம்.

சங்கன், பதுமன் என்ற இரு நாகர்கள் இருந்தனர். சங்கன் சிவபெருமானிடத்தும், பதுமன் திருமாலிடத்தும் அன்பு பூண்டவர்கள். இவர்கள் இருவரும் சிவபெருமான் பெரியவனா அல்லது திருமால் உயர்ந்தவனா என வாதிட்டு வந்தனர். இந்த ஐயத்தை அன்னை பராசக்தி அண்ணலிடம் வெளியிட்டாள். இறைவன் அன்னையிடம் மண்ணுலகத்தில் புன்னை வனத்தில் தவம் புரிந்தால், தக்க விடை கிடைக்கும் எனப்பதில் அளிக்கிறான். ஆடிமாதம் முழுநிலாவன்று இறைவன் அன்னை முன் அரி அரனாகத் தோன்றுகிறான். இந்த வடிவை

''தாழ் சடையும் நீண்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால்—சூழும்

திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டு உருவும் ஒன்றாய் இசைந்து''

[மூன்றாந்திருவந்தாதி-63]

எனப் பேயாழ்வார் தமது திருப்பாசுரத்தில் வெகு அழகாகப் பாடியுள்ளார். சேரமான் பெருமாள் நாயனார் தமது ''பொன்வண்ணத் திருவந்தாதி'' யில்,

''இடமால் வலந்தான் இடப்பால் துழாய் வடப்பால் ஒண்கொன்றை
வடமாலிடந்துகில் தோல்வலம் ஆழி இடம் வலம்மான்
இடமால் கரிதால் வலம் சேது இவனுக்கு எழில் நலஞ்சேர்
குடமால் இடம் வலம் கொக்கரையாம் எங்கள் கூத்தனுக்கே'' (6)

என இத்திருவுருவை சொல்லோவியமாகப் படைத்துள்ளார்.

சிவபெருமான் பெரியவனா அல்லது திருமாலா என்ற கேள்வி பண்டைக் காலந்தொட்டே இருந்து வந்துள்ளது.

பாதியாயுடன் கொண்டது மாலையே''

[திரு ஆலவாய்-2]

என ஞான சம்பந்தப் பெருமானும்,

''நாரணனை இடப்பாகத்து அடைத்தார் போலும்''

[திருவீழிமிழலை-2]

என அப்பர் அடிகளும்,

''மாலொர் பாகமுந் தாம் உடையவர்''

[திருப்பனையூர்-3]

என ஆளுடைய அடிகளும் தமது திருப்பதிகங்களில் அருளியுள்ளனர். அமரர்கள் தெய்வம் என்று போற்று கின்ற அரியைவிட சிவபெருமானுக்குத்தேவி இல்லை என இத்திருவுருவினை நாவின் மன்னர் தமது திருவை யாற்றுத்திருப்பதிகத்தில் சிறப்பிக்கின்றார்.

''பிரிவிலா அமரர்கள் கூறப்பெருந்தகைப்பிரான்
என்று ஏத்தும்
அரியலாற் தேவி இல்லை ஐயன் ஐயாறனார்'' (5)

என்பது அவரது திருவாக்கு. இவற்றினின்றும் சிவபெருமான் தன் ஒரு பாகத்தைத் திருமாலுக்கு அளித்தான் என்பது தெளிவாகிறது. இது சிவபெருமான் தான் முழுமுதற்பொருள் என்ற கொள்கையின் அடியாகப்பிறந்தது.

திருமால் அடியார்களாகிய ஆழ்வார்களில் மங்கை மன்னன்,

''பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து''
[3-4-9]

என்றும், பொய்கையாழ்வார்,

''மாமதிள் மூன்று எய்த
இறையான் நின் ஆகத்து'' [முதல். திரு. 28]

என்றும், நம்மாழ்வார்,

''ஏறனை......தன்னுள் வைத்து'' [2-2-3] என்றும் தமது திருப்பாசுரங்களில் அருளியுள்ளனர். இவை திருமால் தன் ஒரு பாகத்தை சிவபெருமானுக்கு அளித்தான் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. இது திருமால்தான் பரம்பொருள் என்ற அடிப்படையைக் கொண்டது.

சிவபெருமான் பெரியவனா அல்லது சக்தியா என்ற கேள்விக்கு இடமின்றி சைவமும் சாக்தமும் அடைந்த சமரச நிலையை ஆணோடு பெண்ணாகிய வடிவம் உணர்த்துகிறது. அது போன்று அரி அரன் வடிவம் சைவத்திற்கும் வைணவத்திற்கும் ஏற்பட்ட சமரசத்தின் விளைவு என்பது அறிஞர்கள் கருத்து.

ஆகமங்களின்படி, இந்த வடிவின் வலப்பாதி சிவபெருமான். இடப்பாதி திருமால். 4 கைகள் கொண்ட இந்த வடிவின் இடப்பாதியில் திருமால் என்பதற்கு ஏற்ப சங்கும் சக்கரமும் அமைக்கலாம்; அல்லது ஒரு கையில் கதை காணப்பட, மற்றொருகை கடக முத்திரையில் தொடைக்கு அருகில் உருவாக்கப்பட வேண்டும். வலப்பாதியில் உள்ள இருகைகளில் சிவபெருமான் என்பதற்கு இணங்க, மழு அல்லது அபய முத்திரையில் இருக்கலாம்; அல்லது சூலம் மற்றும் வரத முத்திரையில் இருக்கலாம்; அல்லது சூலம் மற்றும் அக்கமாலை இருக்கலாம். இடப்பாதியில் கேயூரம், கங்கணம் போன்ற அணிகலன்கள் இருக்கவேண்டும். வலப்பாதி முழங்கால் வரையில் புலித்தோலாலும், இடதுபாதி பட்டாடையாலும் அழகு செய்யப் பட்டிருக்கவேண்டும். உடலின் நிறம் வலப்புறம் வெண்மையாகவும், இடப்புறம் பச்சை அல்லது நீல நிறமாக இருக்கவேண்டும். சமபங்க நிலையில் நிற்கும் இந்த வடிவின் வலப்பாதி அச்சம் அளிக்கும் வகையிலும், இடப்பாதி அமைதியான தோற்றத்துடனும் உருவாக்கப் படவேண்டும். சிவபெருமானுக்கு உரிய நெற்றிக் கண் நெற்றியில் வலப்பாதியில் பாதி மட்டும் அமைக்கப்பட வேண்டும். 'விஷ்ணு தர்மோத்திரம்' என்ற நூலின்படி, இந்த வடிவின் இடப்புறம் திருமாலின் ஊர்தியான கருடனும், வலப்புறம் சிவபெருமானின் ஊர்தியான காளையும் காட்டப்படவேண்டும்.

தமிழகக் கோயிற் கட்டிடக்கலையின் முதற் கட்டமான குடைவரைக் கோயிலிலும் மற்றும்

மலைதளியிலும் இந்த வடிவம் உருவாக்கப் பெற்றுள்ளது. எடுத்துக்காட்டாக உலகோர் கண்டு வியக்கும் மாமல்லபுரத்தில் அரிய சிற்பங்களைக் கொண்ட மலைதளி தர்மராச இரதம். அதில் முதற்தளத்தில் இந்த வடிவம் அமைக்கப்பட்டுள்ளது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் முன்வலக்கை அபய முத்திரையிலும் முன் இடக்கை ஊரு முத்திரையிலும் உள்ளது. பின் வலக்கையில் சிவபெருமான் என்பதற்கு இணங்க மழு உருவாக்கப்பட்டுள்ளது. பின் இடக்கையில் உள்ளது சரியாகத் தெரியவில்லை.

பல்லவர்களைப் பின்பற்றி பாண்டியர்களும் தாங்கள் உருவாக்கிய குடைவரைக் கோயில்களில் இந்த வடிவை அமைத்துள்ளனர். எடுத்துக் காட்டாக பசும்பொன் முத்துராமலிங்க மாவட்டத்தைச் சார்ந்த பிள்ளையார் பட்டி குடைவரைக் கோயிலில் பிள்ளையாருக்கும் இலிங்கத்திருவுருவிற்கும் இடையில் இந்த வடிவம் உருவாக்கப் பட்டுள்ளது. முதலில் இது பல்லவ மன்னனாகக் கருதப்பட்டுவந்தது. பல்லவர்கள் ஆட்சி திருச்சிக்குத் தெற்கே பரவவில்லை என்று வரலாறு கூறுவதாலும், இந்த வடிவின் அமைப்பைக் கருத்தில் கொண்டும் இது பல்லவ மன்னன் அல்ல அரிஅரன் என டாக்டர் நாகசாமி கருத்து தெரிவித்துள்ளார். இந்த வடிவின் தலையில் வலது பாதியில் சடாமகுடமும் இடப் பாதியில் கிரீடமும் காணப்படுகின்றன. இதை ஒட்டி இடது புறத்தில் திருமாலின் ஊர்தியான கருடன் இருப்பதால், வலப்புறத்தில் உள்ள வடிவம் நந்திகேசுவரராக இருக்கலாம் என்று ஊகிக்கப்படுகிறது. பிள்ளையார் பட்டியை அடுத்த குறைக்குடியில் 3 குடைவரைக் கோயில்கள் உள்ளன. முதல் குடைவரைக் கோயிலில் அரி அரன் வடிவம் காணப்படுகிறது. கருவறைக்கு வலப்புறம் இந்த வடிவம் உள்ளது. சிவபெருமான் என்பதற்கு ஏற்ப வலப்பாதியில் சடையும், மழுவும், புலி ஆடையும் காணப்படுகின்றன. இடப்

பாதியில் திருமால் என்பதற்கு இணங்க கிரீடமகுடமும், பட்டாடையும், சங்கும் அமைக்கப்பட்டுள்ளன.

பல்லவர்களைப் பின்பற்றி பாண்டியர்கள் மட்டுமன்றி, தற்காலத்தில் தர்மபுரி எனப்பெறும் தகடூரைத் தலைநகராகக் கொண்டு ஆட்சிபுரிந்த அதியமான்களும் சேலம் மாவட்டத்தைச் சார்ந்த நாமக்கல் குடைவரைக் கோயிலிலும் இத்தகு வடிவத்தைப் புடைசிற்பமாக உருவாக்கியுள்ளனர். இங்குள்ள இருகோயில்களில் மலையின் கீழ்ப்புறமாக உள்ளதில் கருவறையை ஒட்டி நரசிம்மரை அடுத்து அரிஅரன் திருவுரு அமைக்கப்பட்டுள்ளது. இந்த வடிவின் 4 கைகளில் பின் வலக்கையில் உள்ள மானும் முன்வலக் கையில் உள்ள பாம்பும் சிவபெருமானைக் குறிக்கின்றன. பின் இடக்கையின் மேல் தனியாக உள்ள சங்கு திருமாலை உணர்த்துகிறது. முன் இடக்கை கத்ய வலம்பித முத்திரையில் காணப்படுகிறது. தலையின் வலப் பாதியில் இளம்பிறையுடன் கூடிய சடைமகுடமும், இடப்பாதியில் கிரீடமகுடமும் அமைக்கப்பட்டுள்ளன. இருபுறமும் அமரர்கள் நின்ற நிலையில் உள்ளனர். அவர்களது தூக்கிய கைகள் வியப்பினை உணர்த்து கின்றன.

குடைவரைக் கோயில்கள் உருவாக்கப் பட்டதைத் தொடர்ந்து கற்றளிகள் கட்டப் பெறலாயின. அவ்வாறு கட்டப்பெற்ற பண்டை நாள் கோயில்களிலும் இந்த வடிவம் இடம் பெற்றுள்ளது. எடுத்துக் காட்டாக பல்லவப்பேரரசன் இராசசிம்மப் பல்லவனால் கட்டப் பெற்றதும், சிற்பக் கலையுலகில் தனக்கென தனி இடம் பெற்றதுமான காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயிலில் கருவறையின் தென்புறச்சுவரில் இந்த வடிவம் அமைந்து உள்ளது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் பின் வலக்கையில் மழுவும், பின்இடக்கையில் சங்கும் உள்ளன. இது எழில் மிக்க சுதையாலான வடிவமாகும்.

அரிஅரன் திருவுருவை கருவறையின் பின்புறச் சுவரில் உள்ள புரையில் அமைக்கும் முறை முதலாம் ஆதித்த சோழன் காலத்தில் பின்பற்றப்பட்டது. இத்தகு அமைப்பு திருச்சி மாவட்டத்தைச் சார்ந்த திருவெறும்பூர் திருவெறும் பீசுவரர் திருக்கோயிலிலும், திருமங்கலம் சாம வேதீசுவரர் திருக்கோயிலிலும், பாச்சில் அமலீசுவரம் அமலீசுவரர் திருக்கோயிலிலும் இருப்பதாகத்தெரிகிறது.

இவ்வாறு இந்த வடிவம் ஆங்காங்குள்ள திருக்கோயில்களில் காணப்படினும், இந்த வடிவிற்கு என்று தனியாகத் திருமுன் உள்ள திருக்கோயில் திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த சங்கரன் கோயிலாகும். மூலவரான வன்மீக நாதர் மற்றும் அன்னை கோமதி அம்மன் இவர்களின் கருவறைகளுக்கு இடையில் அரிஅரனுக்குத் தனித்திருமுன் உள்ளது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் வலப்பாதியில் பின்கையில் மழுவும், முன்கை அபய முத்திரையிலும் உருவாக்கப்பட்டுள்ளன. இடப்பாதியில் பின்கையில் சங்கு காணப்பட முன்கை கடகமுத்திரையில் தொடைக்கு அருகில் அமைக்கப்பட்டுள்ளது. ஆகமவிதிகளின்படி, இவை உருவாக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத் தக்கது. இந்த வடிவம் எழிலுடன் விளங்குவது கண்டு களிக்கத்தக்கதாம். தமிழகத்தில் அரிஅரனுக்குத் தனித் திருமுன் உள்ள திருக்கோயில் வேறு இருப்பதாகத் தெரியவில்லை.

# 10. எண்ணற்கு அரிய ஓர் ஏனம் [பெரியாழ்வார்]

[வராக அவதாரம்]

கருங்கடல் வண்ணனாம் காத்தற் கடவுளாகிய திருமாலின் பத்துத்தோற்றங்கள் [அவதாரங்கள்] போற்றப்படுகின்றன. இவை பத்தும் பரிணாம வளர்ச்சியின் முக்கியபடிகளை உணர்த்துவதாக ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். இவற்றில் மூன்றாவதாக எண்ணப்படுவது வராகம் அதாவது பன்றியின் வடிவமாம்.

வைகுண்டத்து வாயிற்காப்போரான ஜயவிஜயர்கள் சனகர், சனந்தனர் என்ற முனிவர்களின் சாபம் பெற்றனர். அது நீங்கி மீண்டும் பழைய நிலையை அடைய இவர்கள் இறை அன்பர்களாக நூறுபிறவிகள் எடுக்கவேண்டும் அல்லது தீயகுணம் படைத்தவர்களாக மூன்று முறை பிறக்க வேண்டும். இவற்றில் இவர்கள் தீயவர்களாக மூன்று பிறவி வேண்டுமென இறைவனிடம் வேண்டிக்கொண்டனர். முதலில் இவர்கள் காசிப முனிவரின் மனைவியான திதியிடத்து இரணியகசிபு, இரணியன் என்ற இரட்டைப் பிள்ளைகளாகத் தோன்றினர்; இவர்கள் எல்லா உலகங்களையும் வென்று, சோணபுரம் என்ற நகரில் வளங்கள் பலவற்றுடன் வாழ்ந்து வந்தனர். நாரதர் மூலம் எதிர் காலத்தில் தங்கள் வழித்தோன்றலான மாவலி என்பவனைத் திருமால் வஞ்சித்து பூமியைக் கவர்ந்து விடுவான் என்பதை அறிந்து கொள்கின்றனர். அதனால் கோபமுற்ற இரணியகசிபு பூமியைப் பாயைப் போலச் சுருட்டி, பாதாள உலகத்தில் வைத்து விட்டான். பூமியில்

வேள்விகள் இயற்றப்படாத காரணத்தால், அமரர்கள் மிகவும் நலிந்தனர். அதனால் அவர்களின் முறையீட்டின் பேரில் வைகுந்தநாதன் வராக வடிவங்கொண்டு பாதாளம் சென்று பூமியைத் தன் கோரைப்பற்களால் தூக்கிக் கொண்டிருந்தான். அதை அறிந்த அவுணன் தன் படையுடன் போருக்கு வர, வராகம் அவனைக் குத்திக்கொன்றது. அதன் பின் அரவணைப் பள்ளியான் பூமியைக் கொண்டு வந்து முன் போல் நிறுவிவிட்டான்.

ஏனைய தோற்றம் போலன்றி, திருமால் மற்று மோர் முறை வராக வடிவம் கொண்டதைக் கந்த புராணம் போன்ற நூல்களிலிருந்து தெரியவருகிறது. திருமால் மற்றும் பிரமா இவர்களுக்குள் யார் பெரியவன் என்ற கேள்வி எழ, அவ்வமயம் தீமலை ஒன்று தோன்றியது. அதன் அடி அல்லது முடியை யார் முதலில் அடைகிறானோ, அவனே பெரியவன் என்று விண்ணின்று ஓர் ஒலி எழுந்தது. பறவையேறு பரம புருடன் வராக வடிவம் கொண்டு நிலத்தை இடந்து, தீமலையின் அடியைத் தேடும் முயற்சியில் ஈடுபட்டான்.

சிவபெருமான் அந்தகாசூரனுடன் நடத்திய போரில் சிவபெருமானுக்கு உறுதுணையாம் பொருட்டு குறிப்பிட்ட தெய்வங்கள் தங்கள் சக்திகளை அனுப்பினர். அவ்வாறு அனுப்பப்பட்ட ஏழுசக்திகளும் ஏழுகன்னியர் (சப்த கன்னியர்) எனப்பட்டனர். அவர்களாவன: மகேசுவரி, வைணவி, வராகி, பிரம்மி, கௌமாரி, இந்திராணி மற்றும் சாமுண்டியாம். திருமாலின் சக்தியான வைணவி ஏற்கனவே கூறப்பட்டிருப்பினும், வராகமூர்த்தியின் சக்தியான வராகியும் ஏழுகன்னியரில் ஒருவளாக எண்ணப்படுகிறாள். ஒருசில இடங்களில் நரசிம்மி என்ற வடிவம் காணப்படினும் வராகி வடிவம் தான் ஏழு கன்னியரில் பொதுவாக அமைக்கப்பட்டது. இது அக்கால மக்கள் வராகவடிவத்தின் பாற்கொண்ட அன்பின் ஆழத்தைப்புலப் படுத்துகிறது.

திருமால் அன்பர்களாகிய ஆழ்வார்கள் தமது திருப்பாசுரங்களில் இந்த வடிவைப் போற்றிப் பணிந்து உள்ளனர். ஆண்டாள், குலசேகரப் பெருமாள் மற்றும் பூதத்தாழ்வார் ஓர் இடத்திலும், பேயாழ்வார் இரண்டு இடங்களிலும், பொய்கையாழ்வார் 4 இடங்களிலும், பெரியாழ்வார் மற்றும் திருமழிசைப் பிரான் 5 இடங்களிலும், நம்மாழ்வார் 21 இடங்களிலும் மங்கைமன்னன் 26 இடங்களிலும் இந்த வடிவைப் பரவிப்புகழ்ந்து உள்ளனர். மங்கைமன்னன்தான் இந்தத்தோற்றத்தைப் பெரும் அளவில் தமது திருப்பாசுரங்களில் போற்றி உள்ளார் என்பது தெளிவாகிறது.

வராகம் தன் கோரைப்பற்களால் பூமியை இடந்து சென்றதை ''பாரிடத்தை எயிறு கீற இடந்தானை'' என்பர் மங்கைமன்னன். அதன் பின் வராகம் நில மகளைத் தன் எயிற்றில் தாங்கியதை ''ஊனம் இல் ஞாலம் ஒடுங்கும் எயிற்று ஆண் ஏனம்'' என்பர் கம்ப நாட்டாழ்வார். இதினின்றும் அதன் எயிற்றின் வலிமையை உணரலாம். பெரியாழ்வார் ''வல்லெயிற்றுக் கேழலுமாய்'' என இதன் திண்மையைச் சிறப்பிக்கிறார். இது வானளாவும் பேருருவம் உடைத்து என்பதை ''நெடு விசும்பு அணவும் பன்றியாய்'' என்று மங்கை மன்னன் குறிப்பிட்டுள்ளார். அத்துடன் அவர் அமையாது மேலும் ''சிலம்பினிடைச் சிறு பரல்போல் பெரிய மேரு திருக்குளம்பில் கணகணப்ப'' என்று இந்த வடிவின் பேருருவத்தை விரிவுபட உரைக்கிறார். அதாவது காலில் அணியும் அணிகலனான சிலம்பில் உள்ள ஒரு சிறு பரலைப் போன்று வராகத்தின் குளம்பில் மலைகளில் பெரிய மேருமலை காணப்படுகிறதாம்.

சங்க நூலான 'பரிபாடலில்' ஏழு பாடல்கள் கார் முகில் வண்ணனைப் பற்றியது. அவற்றில் இரண்டாம் பாடலில் கீரந்தையார்,

''கேழல் திகழ்வரக் கோலமொடு பெயரிய
ஊழி'' [வரி 16-17]

என்று குறிப்பிட்டுள்ளார். அதாவது நீரினின்றும் நிலத்தைப் பன்றியாக திருமால் மேலே கொண்டு வந்து முன்போல் உயிர்களை வாழச் செய்தமையால், குறிப்பிட்ட ஊழி காலம் ''வராகக்கற்பம்'' எனப்பட்டது என்பதாம். அவர் மேலும் அதே பாடலில்,

''செய்யோள் சேர்ந்த நின் மாசில் அகலம்
வளர்திரை மண்ணிய கிளர்பொறி நாப்பண்
வைவாள் மருப்பின் களிறு மணன் அயர்பு
புள்ளி நிலனும் புரைபடல் அரிது [வரி 31-34]

என்று கூறியுள்ளார். அதாவது திருமகளை மார் பிடத்துக் கொண்ட திருமால் வராக வடிவம் கொண்டு தன் கூரிய வெள்ளிய கொம்புகளால் நீரினின்றும் நிலமகளை எடுத்து வருவதால், அவன் துன்பம் அடைய வில்லை என்பதாம். மூன்றாம் பாடலில் கடுவன் இளவெயினனார்,

'ஆழிக்கண் இருநிலம் உருகெழு
கேழலாய் மருப்பின் உழுதோய்'' [வரி 23:24]

என்பர். அதாவது அச்சத்தை அளிக்கும் பன்றி வடிவில் கடலினின்றும் நிலத்தை தன் கொம்பால் குத்தி மேலே எடுத்து வந்தான் என்பதாம். மேலும் அவர் நான்காம் பாடலில்,

''புருவத்து கருவத்து கந்தத்தால்
தாங்கி இவ்வுலகம் தந்து அடிப்படுத்து''
[வரி 22-23]

என்றும் குறிப்பிட்டுள்ளார். அதாவது பண்டை நாளில் பன்றி வடிவில் தன் வலிமை பொருந்திய கழுத்தில்

நிலத்தைத் தாங்கி நீரினின்றும் மேலே கொண்டு வந்தது மேரு போன்ற உயர்ந்த செயலாகும் என்பதாம். பதிமூன்றாம் பாடலில் நல்லெழுதியார் இதன் வடிவை,

''பொலம்புனை இதழ் அணி மணிமடல் பேரணி
இலங்கொளி மருப்பிற் களிறுமாகி'' [வரி 35-36]

என்று விளக்கமாகக் கூறியுள்ளார். அதாவது பன்றியின் கொம்பின் பெருத்த அடிப்பகுதி வரை பூ வேலையுடன் கூடிய பொன்னால் செய்யப் பெற்ற கிம்புரி அணியப் பெற்றுள்ளது. மேலும் அதன் கொம்பு ஒளி பொருந்தியதாகவும் இருந்தது என்பதாம்.

பத்ம மற்றும் வாயு புராணங்களில் வராகத்தினை வேள்வியின் பல உறுப்புகளாகக் கூறப்பட்டுள்ளது. அதன் நான்கு கால்களும் நான்கு மறைகள் எனவும், அதன் கொம்பு வேள்வித்தூண் என்றும், அதன் நாக்கு வேள்வித் தீ என்றும், அதன் தலை அந்தண வழிபாட்டுநர் [அர்ச்சகர்] என்றும், அதன் காதணிகள் வேதாங்கம் என்றும், அதன் இரத்தம் சோமபானம் என்றும் அதன் ஒவ்வொரு உறுப்பும் வேள்வியின் ஒவ்வொரு பொருளாகத் தத்துவ ரீதியாகச் சொல்லப் பட்டுள்ளது.

ஆகமங்களில் வராகத்தின் வடிவம் பூவராகம் [ஆதிவராகம், மகாவராகம் என்றும் சொல்லப்படும்], யக்ஞவராகம், பிரளயவராகம் என்று மூன்று வகைகளாக விதிக்கப்பட்டுள்ளது. முகம் மட்டும் பன்றி முகமாகவும், ஏனையவை மனித உடலாகவும் கொண்ட பூவராகத்தின் நான்கு கைகளில் பின் இருகைகளில் சங்கும் சக்கரமும் காணப்படும். தன் மனைவியுடன் உள்ள ஆதிசேடனின் தலைமீது வராகத்தின் வளைந்த கால் இருக்கும், வளைந்துள்ள வலது தொடை மீது நிலமடந்தை தன் இரு கால்களைத் தொங்கியபடி உட்கார்ந்த நிலையில் உருவாக்கப்படவேண்டும். வராகத்தின் முன் இடக்கை

மண்மகளின் கால்களைப் பிடித்த நிலையிலும், முன் வலக்கை அவளது இடுப்பைச் சுற்றியும் அமைக்கப்பட வேண்டும்.

4 கைகளைக் கொண்ட யக்ஞவராகம் சிங்காதனத்தின் மீது சுகாசனத்தில் அமர்ந்து காணப்படும். பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்கும். அருகில் திருமகள் சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும். அவளது இடக்கையில் தாமரை மலரும், வலக்கை இருக்கை மீதும் இருக்கும். மற்றொரு புறத்தில் நிலமகளும் சுகாசனத்தில் உட்கார்ந்த நிலையில் காணப்பட வேண்டும் இவளது லைக்கையில் நீலோற்பல மலரும், இடக்கை இருக்கை மீதும் அமைக்கப்பட வேண்டும். வராகம் மற்றும் திருமகளுக்கு வலக்கால் தொங்கியும் இடக்கால் மடித்து இருக்கை மீது இருக்க, நிலமடந்தைக்கு இடக்கால் தொங்கியும், வலக்கால் மடித்து இருக்கை மீது இருக்க வேண்டும்.

4 கைகளைக் கொண்ட பிரளய வராகமும் யக்ஞ வராகம் போன்று சுகாசனத்தில் சிங்காதனத்தின் மீது உட்கார்ந்த நிலையில் அமைக்கப்படவேண்டும். 4 கைகளில் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன் வலக்கை அபய முத்திரையிலும் முன் இடக்கை ஊரு முத்திரையிலும் காணப்படும். வலப்புறம் மண்மடந்தை வராகம் போன்று சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும். அவளது இடக்கையில் உத்பாலமலரும், வலக்கை இருக்கை மீதும் அமைக்கப்பட வேண்டும். தன் நாயகனின் ஆற்றலைக் கண்டு அவள் அடைந்த வியப்பு அவளது கண்களில் காட்டப்பட வேண்டும்.

உத்திரபிரதேசம், மத்திய இந்தியா, ஒரிசா மாநிலத்தில் ஒரு பகுதி ஆகிய இடங்களில் வராகத்தின் வடிவம் முழுமையும் விலங்காகவே காணப்படுகிறது: முகம் மட்டும் பன்றியாகவும், ஏனையவை மனித

உடலாகவும் அமைக்கும் மரபு எல்லாப் பகுதிகளிலும் பின்பற்றப்பட்டு வந்துள்ளது.

குடைவரைக் கோயில்களில் காணப்பெறும் திருமாலின் தோற்றங்கள் மூன்றில் வராக வடிவம் ஒன்றாம். ''கடிபொழில் சூழ்கடல் மல்லை'' என்றும், ''வங்கத்தால் மாமணி வந்துந்து முந்நீர் மல்லை'' என்றும் மங்கை மன்னனால் மங்களாசாசனம் செய்யப் பெற்ற மாமல்லபுரத்தில் பல்லவப் பேரரசர்களால் தோற்றுவிக்கப்பட்ட குடைவரைக் கோயில்களில் இரண்டு வராகத்தின் பெயரால் அழைக்கப்பெற்று வருகின்றன. அவற்றில் ஒன்று வராக மண்டபம் என்றும், மற்றொன்று பரமேசுவர மகாவராக விஷ்ணு கிரகம் எனப்பெறும் ஆதிவராகக் குடைவரைக் கோயில் என்றும் வழங்கப்படுகின்றன.

வராக மண்டபத்தில் உள்ள வராக வடிவத்தில் பன்றியின் தலை மனித உடலுடன் பொருந்தியுள்ளது இயற்கையாக உள்ளதாகச் சிறப்பிக்கப் பெறுகிறது. நின்ற நிலையில் உள்ள வராகத்தின் கொம்புகள் அதன் ஆற்றலை உணர்த்துவனவாக உள்ளன. 4 கைகள் கொண்ட இந்த வடிவத்தின் இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் ஆதிசேடன் மீது இருப்பது இவன் பாதாள உலகத்தினின்றும் மேலே எழுந்து வருவதை உணர்த்து கிறது. இவனது பின்வலக்கையில் சக்கரமும், பின் இடக்கையில் சங்கும், முன் வலக்கை தாயாரை இடுப்பின் கீழ் அணைத்தபடியும், முன்இடக்கை அவளது கால் களைப் பிடித்த நிலையிலும் உருவாக்கப்பட்டுள்ளன. தலையில் மகுடம் அமைக்கப்பட்டுள்ளது; வராகத்தின் வளைந்த வலத்தொடையின் மேல் உட்கார்ந்து உள்ளமை யால், பூமாதின் முகத்தில் நாணமும், அவுணரிடமிருந்து மீட்கப் பெற்றமையால் மகிழ்ச்சியும் கலந்து காணப்படு கிறது. தாயாருக்கு இருகைகள்தாம் உள்ளன;

இவர்களைச் சுற்றிலும் பிரமா, திங்கள், ஞாயிறு ஆகியோர் அமைக்கப்பட்டுள்ளனர். புடைச் சிற்பமாக உருவாக்கப்பெற்றுள்ள இந்த வடிவம் கலைச்சிறப்பு மிக்கதாகப் புகழப்பெறுகிறது. இந்த வடிவம் ஆகம விதிகளுக்கு ஏற்ப உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இங்குள்ள பரமேசுவர மகாவராக விஷ்ணு கிரகம் எனப்பெறும் ஆதிவராகக் குடைவரைக் கோயிலிலும் வராக மண்டபத்தில் உள்ளதைப் போன்ற வடிவம் புடைச் சிற்பமாக உள்ளது. மேற்கு நோக்கி அமைந் துள்ள இந்தக் கோயிலில் சுமார் 6 அடி உயரத்தில் நின்ற திருக்கோலத்தில் வராக வடிவம் உருவாக்கப் பட்டுள்ளது. தாயாரின் ஒரு கையில் மலர் காணப்படு கிறது. மாமல்லபுரத்தில் இந்த குடைவரைக் கோயிலில் மட்டும் நான் பூசை நடைபெற்று வருகிறது. அக்கால வாணப் பூச்சு நல்ல நிலையில் உள்ளது. எனவே இந்த வடிவிற்கு அபிடேகம் செய்யப்படுவதில்லை.

அதியமான் மன்னர்களில் குணசீலன் காலத்திய நாமக்கல் குடைவரைக் கோயில்களில் மேற்புறமாக உள்ள கோயிலின் கருவறைக்கு இடப்புறம் பூவராகம் புடைச்சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. முகம் மட்டும் வராகமாகவும், ஏனைய உறுப்புகள் மானிட வடிவிலும் உள்ளன. ஆகமங்களில் விதிக்கப்பட்ட நான்கு கைகளுக்குப் பதில் இங்கு உள்ள வடிவிற்கு இரண்டு கைகள்தான் உள்ளன, வலக்கை மேல் மண்மகள் கூப்பிய கைகளுடன் உட்கார்ந்து இருக்க, அவளது கால்களை இடக்கை தாங்கிக்கொண்டு இருக்கிறது. நான்கு வேதங்களும் மானிட வடிவில் வராகத்தின் தலைக்குமேல் உருவாக்கப்பட்டுள்ளன. வராகத்தின் காலடியில் பாம்பும் அதன் துணைவியும் காணப்படு கின்றனர். இது வராகம் பாதாள உலகத்தினின்றும் மேலே வருவதைச் சுட்டிக் காட்டுகிறது.

முத்தரையர்களால் உருவாக்கப்பட்டுள்ள குடைவரைக் கோயில்களில் புதுக்கோட்டை மாவட்டத்தில் கீரனூரிலிருந்து கிள்ளுக்கோட்டை செல்லும் வழியில் சுமார் 16 கிலோத் தொலைவில் உள்ள மலையடிபட்டி என்ற இடத்தில் உள்ள திருமாலுக்கு உரிய குடைவரைக் கோயிலின் கருவறைக்கு வலப்புறம் வராக வடிவம் புடைச்சிற்பமாகக் காணப்படுகிறது. சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இவனது 4 கைகளில் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன்வலக்கை அபய முத்திரையிலும், முன்இடக்கை தொடை மீதும் உள்ளன.

பாண்டியர்களின் குடைவரைக் கோயிலில் திருப்பரங்குன்றத்தில் மட்டும் இந்த வடிவம் அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள திருமாலின் கருவறையை ஒட்டி வராக வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது, நின்ற நிலையில் உருவாக்கப்பெற்ற இவனது இடக்கால் ஊன்றி இருக்க, முன்இடக்கை தொடைமீது உள்ளது. முன்வலக்கை தன் வலத்தொடை மீது உட்கார்ந்துள்ள மண்மகளை அணைத்தவாறு காணப்படுகிறது. இவனது காலடியில் நாகராசன் தன் மனைவியுடன் அமைக்கப்பட்டுள்ளான்.

வராகத்தை மூலவராகக் கொண்ட குடைவரைக் கோயில் பல்லவர்களால் மட்டுமே உருவாக்கப்பட்டுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

குடைவரைக் கோயில்களில் மட்டுமன்றி கற்றளிகளிலும் ஆங்காங்கு வராக வடிவம் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக,

''பலவேந்தர் வணங்கு கழற்
பல்லவன் மல்லையர்கோன் பணிந்த பரமேச்சுர
விண்ணகரம் அதுவே'' [2-9]

என மங்கை மன்னனால் பத்து திருப்பாசுரங்களில் மங்களாசாசனம் செய்யப்பெற்ற காஞ்சிபுரம் வைகுந்தப்

பெருமாள் கோயிலில் கருவறையைச் சுற்றிய புறச்சுவர் களில் சுதையிலான வராக வடிவங்கள் காணப்படு கின்றன. ஒன்றில் நாமக்கல் குடைவரைக் கோயிலில் உள்ளது போன்று நான்கு வேதங்களுடன்—ஆனால் தாயார் இன்றிக் காணப்படுகிறது; மற்றொன்று தாயாரைத் தன் வளைந்த இடத்தொடை மீது வைத்து அமைக்கப்பட்டுள்ளது. இது சென்னையை அடுத்துள்ள திருவிடந்தையில் உள்ள மூலவரைப் போன்ற அமைப்பைக் கொண்டது.

மேலும் சென்னையை அடுத்துள்ள உத்திரமேரூரில் உள்ள பல்லவர் காலத்திய புகழ் பெற்ற சுந்தர வரதப் பெருமாள் கோயிலில் திருமாலின் 9 வடிவங்கள் மூலவர் களாக உள்ளன. அவற்றில் ஒன்று பூவராக வடிவம். இங்குள்ள இரண்டாவது தளத்தில் வடக்கு நோக்கியுள்ள கருவறையில் மண் மடந்தையைத் தன் மடிமீது வைத்துக் கொண்டு பூவராகன் காணப்படுகிறான். அவனது 4 கைகளில் பின் இருகைகளில் சங்கும் சக்கரமும் உள்ளன. முன்வலக்கை நில மகளின் கால்களைப் பிடித்த நிலையிலும், முன்இடக்கை அவளை அணைத்த வாறும் அமைக்கப்பட்டுள்ளன. இது ஆகம விதிகளுக்கு வேறுபட்டுள்ளது. நிலமங்கை தன் இருகைகளையும் கூப்பிய நிலையில் காணப்படுகிறாள்.

பூவாரகம் மூலவராக உள்ள திருக்கோயில்களில் திருவிடந்தை ஒன்று. இது சென்னையினின்றும் மாமல்ல புரம் செல்லும் வழியில் உள்ளது. ''ஏரார் பொழில் சூழ் இடவெந்தையை'' மங்கைமன்னன் மங்களா சாசனம் செய்துள்ளார் [2-7]. ''ஏத்துவார் தம்மனத்துள்ளான இடவெந்தை மேவிய எம்பிரான்'' என்று மங்களா சாசனம் செய்யப்பெற்ற மூலவரின் இடப்புறத்தில் அன்னை இருப்பது இந்தத் தலத்தின் தனிச்சிறப்பு. எனவே இந்தத் தலம் 'திரு இட எந்தை' எனப் பெயர் பெற்றது. அண்ணல் அன்னைக்கு வலப்புறம் இருப்பதால்

அவன் 'திருவல எந்தை'' என அழைக்கப் பெறுகிறான்: ஏனை இடங்களில் அன்னை அண்ணலுக்கு வலப்புறம் இருப்பது குறிப்பிடத்தக்கது. கால முனிவரின் 365 பெண்களில் முதல் பெண்ணான கோமளவல்லியை மணந்தான். ஏனையோரை அகில வல்லித் தாயார் என்ற பெயரில் ஒரு வடிவமாக்கி மணந்து கொண் டமையால், இங்குள்ள பெருமாள் ''நித்ய கல்யாணப் பெருமாள்'' என்று அழைக்கப்பெறுகிறான். சுமார் 7 அடி உயரமுள்ள இந்த வடிவம் சுதையாலானது என்பது இதன் தொன்மையைக் காட்டுகிறது. நின்ற திருக்கோலத்தில் உள்ள இவனது வலக்கால் நேராகவும், இடக்கால் வளைந்து மனைவியுடன் அமைக்கப்பட்டு இருக்கும் ஆதிசேடனின் தலை மீது வைக்கப்பட்டுள்ளது. இது பாதாள உலகினின்றும் பூமியை மீட்பதைக் காட்டுகிறது. இவனது 4 கைகளில் பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் காணப்பட, முன் இடக்கையால் தாயாரை அணைத்துக்கொண்டிருக் கிறான். முன் வலக்கை தாயாரின் கால்களைப் பிடித்த நிலையில் உள்ளது. அண்ணலின் வளைந்துள்ள இடத்தொடைமேல் உட்கார்ந்துள்ள அகில வல்லித் தாயாரின் இரு கைகளில் வலக்கையில் தாமரையும், இடக்கை தொடைமீதும் காணப்படுகின்றன. வலத் தொடைக்குப்பதில் இடத்தொடை மீது தாயார் உட்கார்ந்து இருப்பது ஆகமத்தில் கூறப்பட்டதினின்றும் வேறுபட்டதாகும்.

வராகத்தை மூலவராகக் கொண்ட மற்றொரு திருக்கோயில் விருத்தாசலத்தை அடுத்துள்ள ஸ்ரீ முஷ்ண மாகும். தானே தோன்றியதாகப் போற்றப்படும் 8 வைணவத்தலங்களில் ஒன்றான இங்கு முகம் மட்டும் வராகமாகவும், உடல் மானிட உடலாகவும் உள்ள மூலவர் மேற்கு நோக்கி நின்ற திருக்கோலத்தில் காணப்படுகிறான். அவனது முகம் தெற்கு நோக்கி

உள்ளது. இந்த வடிவிற்கு இரண்டு கைகள்தாம் உள்ளன. அவை கடிமுத்திரையில் சங்கு சக்கரத்துடன் அமைக்கப்பட்டுள்ளன. இவனுக்கு வலப்புறத்தில் திருமகளும் இடப்புறத்தில் மண்மகளும் உள்ளனர். இவர்கள் மூவரும் ஒரே கல்லில் உருவாக்கப்பட்டுள்ளனர். மூலவரின் நின்ற திருக்கோலத்தில் காணப்படும் மிடுக்கு கண்டு இன்புறத்தக்கதாம். ஏனைய வைணவத்தலங்கள் போலன்றி இங்கு நாள்தோறும் அபிடேகம் நடை பெறுவது இதன் தனிச் சிறப்பாகும். இந்தத்திருவுரு பூவராகம் என்று போற்றப்படினும், ஆகமத்தில் விதிக் கப்பட்டபடி மண்மகளை மட்டும் தன் தொடை மீது தாங்கி, கைகளால் அணைத்தபடி இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. யக்ஞவராக வடிவத்தை மட்டும் மலர்மடந்தை மற்றும் மண்மடந்தையுடன் அமைக் கலாம். ஆனால் ஆகமத்தில் இவர்கள் சிங்காதனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும் என்று விதிக்கப்பட்டு உள்ளது. ஆனால் இவர்கள் இங்கு நின்ற திருக்கோலத்தில் காணப்படுகின்றனர். இந்தத்திருக்கோயிலில் உள்ள திருவீதி உலாநாயகர் [உற்சவர்] மானிட முகத்துடனும் இரு துணைவியருடனும் உள்ளான். தாயாரின் வேண்டுகோளுக்கு இணங்கி மானிடமுகம் கொண்டதாகச் சொல்லப்படுகிறது. இந்த வடிவம் யக்ஞவராகம் என்று அழைக்கப்பெறுகிறது. இவனது பின்கைகளில் சங்கும் சக்கரமும் முன்வலக்கை அபய முத்திரையிலும், முன் இடக்கையில் கதையும் உள்ளன. முகம் மானிடமாக இருப்பது, நின்ற திருக்கோலத்தில் இருப்பதும் ஆகம விதிகளுக்கு வேறுபட்டுள்ளன.

திருமால் வராக வடிவில் மண்மடந்தையை அவுணர் பிடியினின்றும் மீட்டு, முன்போல் உயிர்கள் வாழவழி செய்தான். அரசர்கள் கடமை என்ன என்பதைச் சேக்கிழார் பெருமான் தமது திருத்தொண்டர் புராணத்தில் மநு நீதிச்சோழன் மூலம்,

''மாநிலங் காவலனாவான் மன்னுயிர் காக்குங்காலைத்
தான் அதனுக்கு இடையூறு தன்னால் தன்
பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தால் கள்வரால் உயிர்
தம்மால்
ஆனபயம் ஐந்துந்தீர்த்து அறங்காப்பான்
அல்லனோ'' (121)

என வெகு அழகாக எடுத்துக் காட்டுகிறார். இவ்வாறு உலகைப் பல இடையூறுகளின்றும் காப்பாற்றி மக்கள் நல்வாழ்வு வாழ வழி செய்யும் தங்கள் ஆற்றலை உணர்த்தும் வகையில் இந்த வடிவம் அமைந்துள்ளதாகக் கருதிய முற்கால மன்னர்கள் இதைப் பெரும் அளவில் சிற்பமாக அமைத்தனர் என்பதில் வியப்பு இல்லை.

# 11. கிளரொளியால் குறைவில்லா அரி [நம்மாழ்வார்]

[நரசிம்மாவதாரம்]

பறவையேறு பரமபுருடனாம் திருமாலின் பத்துத் தோற்றங்களில் நரசிம்மம் நான்காவதாக வைத்துப் போற்றப்படுகிறது.

திருமால் வராக வடிவில் தன் தம்பியான இரணியகசிபைக் கொன்றதை அறிந்த இரணியன் திருமால் மேல் கடுங்கோபம் கொண்டான். திருமகள் கேள்வனைக் கொல்லவேண்டி அதற்கு முதற்படியாகத் தன் உயிரைத்தக்கவாறு பாதுகாக்க பிரமனைக்குறித்துத் தவம் இயற்றிப் பெருவரங்கள் பெற்றான், வானவரால், மானிடரால், விலங்குகளால் கொல்லப்படமாட்டான்; நீரில், நெருப்பில், காற்றில் இறப்பு இல்லை; மாளிகைக்கு வெளியிலோ உள்ளோ சாவு இல்லை; பகலில் இரவில் இறப்பு இல்லை; எந்தப் படைக் கலத்தாலும் கொல்லப் படமாட்டான். இவ்வாறும் இவன் பெற்ற பெரும் வரத்தைக் கம்ப நாட்டாழ்வார் ''பெண்ணில் பேரெழில் ஆணினில் அலியினில்'' என்று தொடங்கும் பாடல் முதற்கொண்டு 5 பாடல்களிலும் இவனது பெருவலியை ''வேதம் கண்ணிய பொருள் எலாம்'' என்பது முதற் கொண்டு 13 பாடல்களிலும் விவரித்துள்ளார். அவன் ஆணைப்படி அனைவரும் அவனையே கடவுளாக வணங்குகின்றனர். இந்நிலையில் அவனுக்கு மகனாகப் பிறந்த பிரகலாதன் திருமாலை வணங்க, அதனால் கோப முற்ற இரணியன் அவனைக் கொல்லமுயன்று பயன் அளிக்காது போயிற்று. ஒரு நாள் மாலை வேலையில் தன்மகனை நாராயணன் எங்கே என்று கேட்க. அவன்

"தூணிலும் உளன்; துரும்பிலும் உளன்" என்று பதில் அளித்தான். இரணியன் தன் எதிரில் உள்ள தூண் ஒன்றைக் காட்டி, அதைப் புடைத்தான. அதினின்றும் நரசிம்மம் தோன்றியதை,

"எங்கும் உளன் கண்ணன் என்ற மகனைக் காய்ந்து
இங்கு இல்லையால் என்று இரணியன் தூண் புடைப்ப
அங்கு அப்பொழுதே அவன் வீயத்தோன்றிய என்
சிங்கப்பிரான்" [2-8-9]

என நம்மாழ்வார் தமது திருமொழியில் பாடியருளி உள்ளார்:

"உயர்ந்தகையால் எற்றினான் எற்றலோடும்
திசை திறந்து அண்டம் கீறச் சிரித்தது அச் செங்கண் சீயம் [6-3-256]

எனக் கம்ப நாட்டாழ்வார் இதன் தோற்றத்தைக் குறிப் பிட்டு, "பிறந்தது தூணும் ஆங்கே பிறந்தது சீயம்" என்பது முதல் 14 பாடல்களில் அதன் தோற்றத்தையும், அசுரர்களை அழித்ததையும் படிப்போர் கண்முன் நிறுத்துகிறார். இரணியன் அயனிடம் பெற்ற பெரு வரத்தைக் கருத்தில் கொண்டு, திருமால் நரசிம்ம வடிவில் தோன்றி அவனைத் தன் மடியில் வைத்துத் தன் கை நகங்களால் கீறிக் கொன்றுவிட்டான்.

திருமாலிடத்து ஆழ்ந்த அன்பு கொண்ட ஆழ்வார்கள் நரசிம்மத்தின் திருவுருவத்தையும், இரணியனைக் கொன்றதையும் தம் திருப்பாசுரங்களில் பலபடியாக மங்களாசாசனம் செய்துள்ளனர். ஆண்டாள் ஓர் இடத்திலும், பூதத்தாழ்வார் 4 இடங் களிலும், பேயாழ்வார் 5 இடங்களிலும், திருமழிசைப் பிரான் 6 இடங்களிலும், பொய்கையாழ்வாரும் பெரியாழ் வாரும் 8 இடங்களிலும், நம்மாழ்வார் 15 இடங்களிலும்,

மங்கைமன்னன் 53 இடங்களிலும் இந்த வடிவைப் பற்றிக் குறிப்பிட்டு உள்ளனர். இதினின்றும் மங்கைமன்னன்தான் இந்த வடிவைப் பெரும் அளவில் புகழ்ந்துள்ளது தெரிய வருகிறது.

நரசிம்மத்தின் தோற்றத்தை,

''ஆயிரந்தோள் எழுந்தாட
பைங்கண் இரண்டு எரிகான்ற நீண்ட எயிற்றொடு
பேழ்வாய்
சிங்கஉரு'' [3-3-8]

என்று அருளிய மங்கைமன்னன் ''சிங்கவேள் குன்றம்'' என்ற வட நாட்டில் உள்ள திருப்பதியைப் பற்றிய தமது திருப்பாசுரத்தில் இதன் வடிவைப் பலவாறாக விளக்க மாகக் கூறியுள்ளார்:

''அலைத்த பேழ்வாய் வாள் எயிற்று ஓர்
கோளரியாய்'' [1-7-2]

''ஏய்ந்த பேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய்''
[1-7-3]

''மென்ற பேழ்வாய் வாள் எயிற்று ஓர் கோளரியாய்
[1-7-5]

''எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய் எயிற்றொடு''
[1-7-6]

என்பன அவர்தம் திருவாக்குகள். நரசிம்மம் தூணில் தோன்றி வளர்ந்தமையைக் கம்பநாட்டாழ்வார்,

''பிளந்தது தூணும் ஆங்கே பிறந்தது சீயம் பின்னை
வளர்ந்தது திசைகள் எட்டும் பகிரண்டம் முதல்
மற்றும்

அளந்தது அப்புறத்துச் செய்கையார் அறிந்து
அறையகிற்பார்
கிளர்ந்தது கனமுட்டை கிழிந்தது கீழும் மேலும்''
[6-3-259]

என்பர். பிளந்த தூணினின்றும் தோன்றிய நரசிம்மம் எட்டுத் திசைகளிலும் பரவிவளர்ந்தது. இந்த உலகுக்கு அப்பால் உள்ள அண்டங்களை அளப்பது போன்று நீண்டு வளர்ந்தது. அதனால் உலகமாகிய உருண்டையின் மேலும் கீழும் பிளவு ஏற்பட்டது என்பதாம்.

''முனைத்த சீற்றம் விண் சுடப்போய் மூவுலகும்
பிறவும்
அனைத்தும் அஞ்ச வாளரியாய் [1-7-7]

என் மங்கைமன்னன் நரசிம்மத்தின் சீற்றத்தின் வெம்மை விண்ணோர் உலகைச் சுட்டது என்று கூறுவதினின்றும் அதன் சினத்தை உய்த்து உணரலாம். எந்த இமையோர்களுக்காகச் சக்கரத் தண்ணல் நரசிம்மத்தின் வடிவைக் கொண்டானோ அவர்களே இதைக்கண்டு அச்சம் அடைந்தனர்.

''எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய் எயிற்றொடு
இது எவ்வுருவென்று
இரிந்து வானோர் கலங்கியோட'' [1-7-6]

''திண்ணியது ஓர் அரி உருவாய்த் திசையனைத்தும்
நடுங்கத்
தேவரொடு தானவர்கள் திசைப்ப'' [3-9-2]

என்பன மங்கைமன்னன் அருள் வாக்குகளாம்:

''பெரியவனை மாயவனைப் பேருலகமெல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியுங் கையும் திருவாயும் செய்ய

கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்ணென்ன
கண்ணே''

[17-படர்க்கைப்பரவல்-2]

என்று இளங்கோவடிகள் தம் சிலப்பதிகாரத்தில் அழகின் உறைவிடமாகப் போற்றும் திருமால் தன் அன்பர் களுக்காக எத்தகைய அச்சம் அளிக்கும் வடிவினைக் கொண்டான் என்பது எண்ணத்தக்கது.

நரசிம்மம் இரணியனைத் தன் மடியில் வைத்துத் தன் நகங்களால் கொன்றதை ஆழ்வார்கள் தமது திருப்பாசுரங்களில் சொல்லோவியமாகப் படைத்து உள்ளனர்.

''உரம் பற்றி இரணியனை உகிர்நுதியால் ஒள்ளிய
மார்பு உறைக்கவூன்றி
சுரம் பற்றி முடியிடியக் கண்பிதுங்க
வாயலறத் தெழித்தான்'' [4-3-8]

எனப் பெரியாழ்வாரும்,

''போரார் நெடுவேலோன் பொன் பெயரோன்
ஆகத்தை
கூரார்ந்த வள்ளுகிரால் கீண்டு—குடல்மாலை
சீரார் திருமார்பின் மேற்கட்டி—செங்குருதி
சோரக் கிடந்தானைக் குங்குமத்தோள் கொட்டி
ஆரா எழுந்தான் அரிஉருவாய்'' [சிறியதிருமடல்]

''ஆயிரக்கண்
மன்னவன் வானமும் வானவர்தம் பொன்னுலகும்
தன்னுடைய தோள்வலியால் கைக்கொண்டதானவனை
பின்னோர் அரியுருவ மாகி எரிவிழித்து
கொன்னவிலும வெஞ்சமத்துக் கொல்லாதே வல்லாளன்

மன்னு மணிக்குஞ்சி பற்றி வரயீர்த்து
தன்னுடைய தாள்மேல் கிடாத்தி அவனுடைய
பொன்னகலம் வள்ளுகிரால் போழ்ந்து புகழ்படைத்த
மின்னிலங்கும் ஆழிப்படைத் தடக்கை வீரனை''

(பெரிய திருமடல்)

என மங்கைமன்னனும் அருளியுள்ளனர்.

இரணியன் அளந்து நாட்டிய தூணினின்றும் அவன் தன் கையால் தட்டிய உடனே அவன் தட்டிய இடத்தினின்றும் முழுவளர்ச்சி அடைந்த நிலையில் நரசிம்மம் தோன்றி அவனைக் கொன்றதை,

''அளந்திட்ட தூணை அவன்தட்ட—ஆங்கே
வளர்ந்திட்டு வாள்உகிர்ச் சிங்க உருவாய்
உளந்தொட்டு இரணியன் ஒண்மார் பகலம்
பிளந்திட்ட கை'' [1-6-9]

என்பர் பெரியாழ்வார். இவ்வாறு இராணியன் தூணைத் தட்டிய உடனே நரசிம்மம் தோன்றியது இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளான் என்ற அவனது இயல்பினை எடுத்துக்காட்டுகிறது. இது நரசிம்மத் தோற்றத்தின் தனிச்சிறப்பாகும்.

அச்சம் அளிக்கும் நரசிம்மன் யோக நிலையில் வணங்கப்படுகிறான். சிவபெருமானுக்கு ஆலமர் செல்வன் வடிவம் போன்று திருமாலுக்கு யோக நரசிம்ம வடிவம் யோக நிலையை உணர்த்துகிறது. திருமாலின் 10 தோற்றங்களில் வேறு எந்தத் தோற்றமும் யோக நிலையில் வணங்கப்படுவதாகத் தெரியவில்லை. இந்த இயல்பு நரசிம்ம தோற்றத்தின் மற்றுமொரு சிறப்பாகும்.

திருமகளைத் தன் மடியில் வைத்துள்ள திருமாலின் வடிவம் இலட்சுமி நாராயணன் என்று வணங்கப்பெறுகிறது. அவனது 10 தோற்றங்களில் நரசிம்ம வடிவம்

மட்டும்தான திருமகளைத் தன் மடியில் வைத்து உள்ளதாக அமைக்கப்படுகிறது. வேறு எந்தத்தோற்றத்திற்கும் இத்தகு அமைப்பு கிடையாது. இவன் இலட்சுமி நரசிம்மன் என்று பரவப்படுகிறான்.

முற்காலத்தில் சைவக் கோயிலாயினும் சரி வைணவக் கோயிலாயினும் சரி கருவறையின் மேல் அமைக்கப்படும் விமானத்தின் தென்புறத்தில் ஆலமர் செல்வன் வடிவமும், மேல்புறத்தில் யோக நரசிம்மர் வடிவமும் அமைக்கும் மரபு பின்பற்றப்பட்டு வந்தது. செங்கல்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த காஞ்சிபுரத்தில் உள்ள ஜுரகரேசுவரர் மற்றும் சுந்தரரால் பாடப்பெற்ற கச்சி அநேகதங்காவதம் என்ற சிவாலயங்களையும், திருநெல்வேலி மாவட்டத்தைச் சார்ந்த மன்னார்கோயிலுள்ள இராசேந்திர சோழவிண்ணகரம் என்ற வைணவ ஆலயத்தையும் சான்றுகளாகக் கூறலாம்.

ஆகமங்களில் யோகநரசிம்மர், உக்ரநரசிம்மர், யானக நரசிம்மர், இலட்சுமிநரசிம்மர் என நான்கு வகை கூறப்பட்டுள்ளன. யோக நரசிம்மரைப் பொதுவாகத் துணைவியர் இன்றித் தாமரை இருக்கைமீது உத்குடி இருக்கையில் அமைக்கவேண்டும். யோக பட்டை இடுப்பைச் சுற்றியிருக்கும். இந்த வடிவு கேவலநரசிம்மர் என்றும் அழைக்கப்பெறும். 2 அல்லது 4 கைகளை அமைக்கலாம். 4 கைகள் இருப்பின், பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் காணப்பட, முன் இரு கைகள் முழங்கால்கள் மேல் நீட்டி இருக்கவேண்டும். 'சில்பரத்தினம்' என்ற நூலின்படி, நீட்டிய இருகைகளை ஒட்டிச் சங்கும் சக்கரமும், பின்இரு கைகளில் கதையும் தாமரை மலரும் இருக்க வேண்டும். இந்த வடிவை வேறு விதமாகவும் உருவாக்கலாம். இந்த வடிவிற்கு 4 கைகள் அமைக்கப்படும். பின்இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன்வலக்கை அபயமுத்திரையிலும் முன்இடக்கை கடி முத்திரையிலும் காணப்பட

வேண்டும். வலப்புறம் சகாசனத்தில் உட்கார்ந்துள்ள திருமகளின் இடக்கையில் தாமரை மலரும் வலக்கை இருக்கைமீது இருக்க வேண்டும். இடப்புறம் சுகா சனத்தில் அமர்ந்துள்ள மண்மடந்தை பின்வலக்கையில் நீலோற்பல மலரும், இடக்கை இருக்கைமீதும் அமைக்கப் படவேண்டும்:

சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்கும் உக்ர நரசிம்மரின் 4 கைகளில் பின்இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன்வலக்கை அபய அல்லது வரத முத்திரையில் இருக்கலாம். முன்இடக்கை தொடை மீது காணப்படும். வாயில் கோரைப்பற்கள் இருக்க வேண்டும். வைகானச ஆகமத்தின்படி, திரிபங்க நிலையில் நிற்கும் இந்த வடிவிற்கு 12 அல்லது 16 கைகள் இருக்கலாம். மடியில் கிடத்தப்பட்ட இரணியனது வயிற்றை இருகைகளால் பிளக்கவேண்டும். வலக்கை ஒன்று அபயமுத்திரையிலும், மற்றொன்றில் கத்தியும் இருக்க, இடக்கை ஒன்றால் அசுரனின் தலையில் உள்ள மகுடத்தைப் பிடித்துக்கொண்டிருக்க, மற்றொரு கை அடிப்பது போன்று இருக்கும். வலக்கை ஒன்றால் அசுரனின் கால்களைப் பிடித்திருக்க வேண்டும்; அவனது குடலை வலம் மற்றும் இடக்கைகள் இரண்டால் மாலையைப் போன்று தூக்கிக்கொண்டிருக்க வேண்டும். அவுணன் திருமாலுடன் போரிடவேண்டித் தன் கைகளில் கத்தியும் கேடயமும் பிடித்து இருக்க வேண்டும்; மலர் மடந்தை, மண்மடந்தை, பிரகலாதன், வீணையுடன் நாரதர் ஆகியோர் இருபுறமும் கூப்பிய கைகளுடன் நரசிம்மத்தின் சீற்றத்தைத் தணிக்கும் முயற்சியில் அமைக்கப்படவேண்டும். 8 கைகள் கொண்ட வடிவில், 2 கைகள் அவுணனது வயிற்றைப் பிளக்கும் நிலையிலும், 2 கைகள் அவனது குடலை மாலை போன்று பிடித்த நிலையிலும், ஏனைய 4 கைகளில் சங்கு, சக்கரம், தாமரை மற்றும் கதை ஆகியவற்றை உருவாக்க வேண்டும்;

கருடனின் தோள்கள் மீது அல்லது ஆதிசேடன் மீது உட்கார்ந்துள்ள வடிவம் யானக நரசிம்மம் என்று அழைக்கப்பெறும். 4 கைகள் கொண்ட இவன்றன் பின் இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, தலைமீது ஆதிசேடனின் தலைகள் குடைபோன்று காணப்படும்.

மலர் மங்கையைத் தன் மடிமீது வைத்துள்ள வடிவம் இலட்சுமி நரசிம்மர் எனப்பெறும். இறைவன் தாமரை இருக்கை மீது சுகாசனத்தில் உட்கார்ந்து இருக்க வேண்டும். மடிமீது அமர்ந்துள்ள மலர் மகளின் இரு கால்கள் தொங்கிய நிலையில் காணப்படும். 4 கைகள் கொண்ட இந்த வடிவின் பின்வலக்கையில் சக்கரமும், பின்இடக்கையில் சங்கும் காணப்பட, முன்வலக்கை அபய முத்திரையில் இருக்கும்; முன்இடக்கையால் தன் மடிமீது உள்ள செந்திருவை அணைத்துக்கொண்டிருக்க வேண்டும். திருமகள் தன் வலக்கையால் நரசிம்மத்தை அணைத்துக்கொண்டு, இடக்கையில் தாமரை மலரை ஏந்தியபடி இருக்கவேண்டும்.

வடநாட்டில் உத்திரப்பிரதேசம், பிகார், வங்காளம் ஆகிய மாநிலங்களில் இடக்காலைச் சற்றுத் தூக்கி நடனமாடும் நிலையில் நரசிம்மர் அமைந்துள்ளதாகத் தெரிகிறது.

பல்லவர்களின் குடைவரைக் கோயில்களில் சென்னையிலிருந்து செங்கல்பட்டு செல்லும் வழியில் உள்ள சிங்கப்பெருமாள் குடைவரைக் கோயிலில் இந்த வடிவம் மூலவராக உள்ளது, நரசிங்க விண்ணகரம் எனப்பெறும் அந்தக் கோயிலில் உள்ள மூலவர் சுதையாலானது. இது இதன் தொன்மையைச் சுட்டிக்காட்டுகிறது. வீராசனத்தில் அமர்ந்துள்ள இவனுடைய 4 கைகளில் பின்வலக்கையில் சக்கரமும் பின்இடக்கையில் சங்கும் உள்ளன, முன்வலக்கை வரதமுத்திரையிலும், முன்இடக்கை தொடைமீதும் காணப்படுகின்றன. உக்ர நரசிம்மர் என அழைக்கப் பெறினும், இவன் அருள்

வடிவினனாகக் காணப்படுகிறான். சுகாசனத்திற்குப் பதில் வீராசனத்தில் அமர்ந்திருப்பதும், இடக்கை கடக முத்திரையில் இல்லாது தொடை மீது இருப்பதும் ஆகமத்தில் உள்ளவற்றிற்கு வேறுபட்டு உள்ளன.

மதுரையினின்றும் மேலூர் செல்லும் பெருவழியில் உள்ள ஒத்தக்கடை என்ற சிற்றூரை அடுத்துள்ள ஆனைமலையில் நரசிம்மரை மூலவராகக் கொண்ட பாண்டியர்களது குடைவரைக் கோயில் உள்ளது. இவன் இங்கு 2 கைகளுடன் யோக நரசிம்மராக எழுந்தருளி உள்ளான். இங்குள்ள வடிவமும் சுதையாலானது என்பது குறிப்பிடத்தக்கது. மதுரையை அடுத்துள்ள திருப்பரங்குன்றத்திலுள்ள பாண்டியர்களது மற்றொரு குடைவரைக் கோயிலில் திருமாலின் கருவறையை ஒட்டிய பாறையில் உக்ர நரசிம்மர் வடிவம் புடை சிற்பமாகக் காணப்படுகிறது. 4 கைகள் கொண்ட இவனது மடியில் இரணியன் கிடத்தப்பட்டுள்ளான். பின் இரு கைகள் தூக்கிய நிலையில் காணப்பட, முன் இருகைகள் இரணியனது வயிற்றைப் பிளப்பது போன்று இவன் உருவாக்கப்பட்டுள்ளான்.

சேலம் மாவட்டத்தைச் சார்ந்த நாமக்கல் மலையில் மேல்புறமாக உள்ள அதியமான்களது குடைவரைக் கோயிலில் நரசிம்மர் மூலவராக 4 கைகளுடன் வீராசனத்தில் உட்கார்ந்த நிலையில் காணப்படுகிறான். இரணியனது உடலைப் பிளந்த கை என்பதற்கு ஏற்ப இங்குள்ள மூலவரது முன் வலக்கையில் சிவப்பு நிறம் உள்ளது. கையில் சிவப்பு நீரோட்டம் அமையும்படி இந்தத் திருவுருவினை உருவாக்கிய சிற்பியின் கைத்திறன் போற்றத் தக்கது. முன் இடக்கை தொடை மீது இருக்க, கத்திரிமுத்திரையில் உள்ள பின் இரு கைகளுக்கு மேல் சங்கும் சக்கரமும் காணப்படுகின்றன. படைக்கலங்களைக் கைகளில் ஏந்திய நிலையில் இல்லாது கைகளுக்குச் சற்று மேலே அமைந்துள்ளது இந்தக்

கோயிலின் தனிச்சிறப்பாகும். மூலவருக்கு இருபுறமும் சாமரங்களுடன் ஞாயிறும், திங்களும், வலப்புறத்தில் சிவனும் இடப்புறத்தில் பிரமனும் காணப்படுகின்றனர்; இத்தகைய அமைப்பு ஆகமங்களில் விதிக்கப்படவில்லை. மேலும இது வேறு எங்கும் இல்லாத மற்றுமோர் சிறப்பாகும் இலட்சுமி நரசிம்மர் வடிவில் நரசிம்மர் மடிமீது திருமகள் இருக்க வேண்டும். ஆனால் இங்குத் திருமகள் இறைவனது மடியில் இல்லை. அவனது மார்பில் அமைந்துள்ள மாலையில் திருமகள் உருவம் உள்ளது. இருப்பினும் இவன் இலட்சுமி நரசிம்மன் என்று அழைக்கப்பெறுகிறான். உட்கார்ந்துள்ள நிலை, கைகளின் நிலை ஆகியவற்றில் இங்குள்ள வடிவமும் நரசிங்க விண்ணகரத்தில் உள்ள வடிவமும் ஒன்று போல் உள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

கருவறைக்கு வலப்புறத்தில் உக்ர நரசிம்மர் வடிவம் புடைசிற்பமாகக் காணப்படுகிறது. இவனது 8 கைகளில் 4 கைகளில் சங்கு, சக்கரம், கத்தி மற்றும் வில் உருவாக்கப்பட்டுள்ளன. ஒரு கை அசுரனது முழங்காலையும், மற்றொரு கை அவனது ஒரு கையையும் பிடித்த நிலையில் உள்ளன. ஏனைய இருகைகள் அவனது மார்பைப் பிளக்கும் நிலையில் உள்ளன. உக்ர நரசிம்மர் வடிவம் பாண்டியர் மற்றும் அதியமான குடைவரைக் கோயில்களில் உள்ளது அன்றி பல்லவர்களது குடைவரைக் கோயில்களில். இல்லை இதை அடுத்துள்ள வைகுந்த நாராயணன் திருவுருவுடன் பால நரசிம்மர் வடிவம் காணப்படுகிறது, தன்னை அடைக்கலம் அடைந்த குமரர்களுக்குத்தான் எந்த வடிவில் இரணியனைக் கொல்லுவேன் என்று திருமால் முன் கூட்டியே கூறுவது போன்று இது உள்ளது

மலையின் கீழ்ப்புறமாக உள்ள குடைவரைக் கோயிலில் கருவறையை அடுத்து இடப்புறத்தில் பால நரசிம்மர் வடிவம் 4 கைகளுடன் புடை சிற்பமாகச்

செதுக்கப்பட்டுள்ளது. பின் இரு கைகளுக்கு மேல் சங்கும் சக்கரமும் தனியாக இருக்க, முன் இடக்கை கத்யவலம்பித முத்திரையில் உள்ளது. இங்குள்ள இரு குடைவரைக் கோயில்களில் உள்ள பால நரசிம்மரைப் போன்ற வடிவங்கள் வேறு எந்தக் குடைவரைக் கோயில் களிலும் இருப்பதாகத் தெரியவில்லை.

புதுக்கோட்டை மாவட்டம் மலையடிப்பட்டியில் உள்ள திருமாலுக்குரிய குடைவரைக் கோயிலில் கருவறைக்கு இடப்புறம் நரசிம்மர் புடைசிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். உத்குடி இருக்கையில் உட்கார்ந்துள்ள இவன்றன் பின்இரு கைகளில் சங்கும் சக்கரமும், முன் வலக்கை முழங்கால் மீதும், முன் இடக் கை தொடைமீதும் உள்ளன. இவன்மீது காணப்படும் வர்ணப்பூச்சுகள் சித்தன்னவாசல் குடைவரைக் கோயிலில் உள்ளது போன்று தமிழகத்தில் உள்ள வர்ணப் பூச்சுகளில் மிகவும் தொன்மை வாய்ந்தது என்று கருதப்படுகிறது.

வராகம் போலன்றி நரசிம்மரை மூலவராகக் கொண்ட குடைவரைக்கோயில்கள் பல்லவர்களால் மட்டு மின்றிப் பாண்டியர்கள், மற்றும் அதியமான்களாலும் உருவாக்கப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

குடைவரைக் கோயில்களைத் தொடர்ந்து கட்டப் பெற்ற கற்றளிகளிலும் இந்த வடிவம் இடம் பெற்று உள்ளது. காண்போரை வியப்பில் ஆழ்த்தும் கலைக் கருவூலமான காஞ்சிபுரம் கைலாயநாதர் கோயிலிலும், பல்லவ வரலாற்றினைக் குறிக்கும் சுதை வேலைப் பாட்டினைக் கொண்ட காஞ்சிபுரம் வைகுந்தப் பெருமாள் கோயிலிலும் நரசிம்மர், உக்ர நரசிம்மர் வடிவங்கள் காணப்பெறுகின்றன.

செங்கல்பட்டு மாவட்டத்தைச் சார்ந்த உத்திர மேரூரில் உள்ள அஷ்டாங்க விமானத்தை உடைய சுந்தர

வரதப் பெருமாள் கோயிலில் இரண்டாவது தளத்தில் மேற்கு நோக்கி யோக நரசிம்மர் வடிவம் காணப்படுகிறது. பஞ்சவரதத்தலம் என்று புகழ் பெற்ற இந்தக் கோயிலில் உள்ள 9 மூலவர் வடிவங்களில் இது ஒன்று. இவன் இரு கால்களை மடக்கி இருக்கை மீது குத்திட்டு உட்கார்ந்துள்ளான். அவனது 4 கைகளில் பின்இரு கைகளில் சங்கும் சக்கரமும் இருக்க, முன்இருகைகள் முழங்கால்மேல் நீட்டிய நிலையில் உள்ளன. இந்த அமைப்பு ஆகமத்தில் கூறியபடி உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

நரசிம்மரை மூலவராகக் கொண்ட கற்றளிகளில் வடஆற்காடு மாவட்டத்தைச் சார்ந்த சோளிங்கர் திருக்கோயில் புகழ் மிக்கது. அரக்கோணத்தை அடுத்து உள்ள இந்த ஊரினின்றும் சுமார் 2 கி. மீ. தொலைவில் இரு மலைகள் உள்ளன. பெரியமலையில் யோக நரசிம்மரும், அதற்கு எதிர்ப்புறமுள்ள சிறிய மலையில் யோக அநுமாரும் உள்ளனர். நரசிம்மரது திருக்கோயிலைக் கொண்ட மலை கடிகாசலம் என்று அழைக்கப்பெறுகிறது. இரணியனைச் சிங்கவேள் குன்றத்தில் கொன்றபின், நரசிம்மர் வானவீதியில் வரும் வழியில் இம்மலையில் 7 மாமுனிவர்களுக்கு ஒரு கடிகை நேரம் [கடிகை என்றால் நாழிகை என்று பொருள்] காட்சி அளித்த காரணத்தால் இது கடிகாசலம் எனப் பெற்றது.

சுமார் 1300 படிகளைக் கொண்ட பெரிய மலையின் உச்சியில் உள்ள திருக்கோயிலில் மூலவராக யோக நரசிம்மர் சிலாவடிவமாக உள்ளான். கிழக்கு நோக்கி இரு கால்களை இருக்கை மீது குத்திட்டு அதாவது உத்குடி இருக்கையில் உட்கார்ந்துள்ளான். அவன்றன் இருகால்களைச் சுற்றிலும் யோக பட்டை காணப்படுகிறது. அதில் திருமாலின் 10 தோற்றங்களும் அமைக்கப்பட்டுள்ளன. இது வேறு எங்கும் காணப்படாத தனிச்

சிறப்பாகும். இவனது காலடியில் திங்களும் ஞாயிறும் இருக்க, இவனது மார்பில் திருமகள் காணப்படுகிறாள். இவனது 4 கைகளில் பின் இருகைகளில் சங்கும் சக்கரமும் அமைக்கப்பட்டிருக்க, முன் இருகைகளையும் தன் முழங் கால்கள் மீது நீட்டிக்கொண்டிருக்கிறான். இந்தத் திருவுரு உத்திர மேரூரில் உள்ள வடிவம் போன்றும், ஆகமத்தில் கூறிய படியும் அமைந்து உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது. நாமக்கல் குடைவரைக் கோயிலில் உள்ள மூலவரின் மடியில் திருமகள் இல்லாது இருப்பினும் இலட்சுமி நரசிம்மர் என்று அழைக்கப்பெறுவது போன்று, இங்குள்ள வடிவமும் திருமகளைத் தன் மடியில் அன்றி மார்பில் கொண்டிருப்பதால் இலட்சுமி நரசிம்மர் என்ற பெயர் பெற்றுள்ளது. இரணியனைக் கொன்ற பின்னும் நரசிம்மத்தின் சீற்றம் தணியவில்லை. அதனால் அதைக் கண்ட வானவர்கள் அஞ்சி நடுங்கினார்கள்.

> ''நோக்கினார் நோக்கினார் முன்நோக்குறு முகமும் கையும்
> ஆக்கையும் தாளும் ஆகி எங்கணும் தானே ஆகி
> வாக்கினால் மனத்தி னால்மற்று அறிவினால் அளக்க வாரா
> மேக்குஉயர் சீயம் தன்னைக் கண்டனர் வெருவு கின்றார்'' [6-3-284]

என்பர் கம்பநாட்டாழ்வார் தமது இராமகாதையில், நரசிம்மம் பல முகங்களும், கைகளும், உடலும், கால்களும் உடைத்தாய் எங்கும் தானே நிறைந்து நின்றது. சொல்லாலும் கருத்தாலும் அறிவினாலும் அளக்க இயலா நரசிம்மத்தைக் கண்டு உம்பர்கள் அஞ்சினார்கள் என்பதாம் இத்தகைய அச்சத்தை அளிக்கும் வடிவத்தின் திருமுகத்தில் இங்கு அமைதி மட்டுமன்றி, அன்பர்கள் பாலதாம். கொண்டுள்ள அருளும்திகழ்ந்து விளங்குவதைக் காணலாம்.

''வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங்கடிகை
இளங்குமரன் நன் விண்ணகர்'' [மூன். திரு: 81]

எனப் பேயாழ்வாராலும்,

''மிக்கானை மறையால் விரிந்த விளக்கை என்னுள்
புக்கானைப் புகழ்சேர் பொலிகின்ற பொன்
மலையை
தக்கானைக் கடிகைத் தடங் குன்றின் மிசையிருந்த
அக்காரக் கனியை அடைந்து உய்ந்து போனேனே
[8-9-4]

என மங்கை மன்னனாலும் மங்களா சாசனம் செய்யப் பெற்றவன். மேலும் மங்கை மன்னன் எட்டாம் பத்து ஒன்பதாந் திருமொழி ஒன்பதாம் திருப்பா சுரத்திலும், 'சிறிய திருமடலிலும்' இந்தத் தலத்தைக் குறிப்பிட்டு உள்ளார். நாமக்கல்லில் நரசிம்மர் திருமுன் சுமார் 18 அடி உயரமுள்ள அநுமார் கூப்பிய கையினனாய் நின்ற நிலையில் காணப்படுகிறான். இங்கு மூலவர் திருமுன் அநுமன் யோகவடிவில் எதிரே உள்ள மலைமேல் மேற்கு நோக்கிக் காணப்படுகிறான். இவனது நான்கு கைகளில் பின் இருகைகளில் சங்கும் சக்கரமும் காணப்பட, முன் வலக்கையில் அக்கமாலையும், முன் இடக்கையில் குண்டிகையும் அமைக்கப்பட்டுள்ளன. இத்தகு அமைப்பு வேறு இடத்தில் காணப்படாத ஒன்றாம். மேலும் திருவீதி உலா நாயகருக்கு (உற்சவருக்கு) என்று தனியாக ஒரு திருக்கோயில் சோளிங்கரில் உள்ளது. மூலவருக்கு ஒரு திருக்கோயிலும், திருவீதி உலா நாயகருக்குத் தனியாக இன்னொரு கோயிலும் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

பசும் பொன் முத்து ராமலிங்க மாவட்டத்தின் தலை நகரமான சிவகங்கையினின்றும் திருப்பத்தூர்

செல்லும் வழியில் பெரியாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசைப்பிரான் மற்றும் மங்கை மன்னன் ஆகியோரால் மங்களா சாசனம் செய்யப்பெற்ற திருக்கோட்டியூர் உள்ளது. திருமாலின் மூன்று திருக் கோலங்களை உடைய மூன்று தளங்களையும், அஷ்டாங்க விமானத்தையும் கொண்டது இத்திருக் கோயில். உலகம் உய்ய இராமானுசரால் திருமந்திரம் வழங்கப்பட்ட திருத்தலம் இது. இந்தத் திருக்கோயிலின் திருச்சுற்றில் வடபுறம் உள்ள வாயிலுக்கு இருபுறமும் நரசிம்மத்தின் அச்சத்தை அளிக்கும் இரண்டு வடிவங்கள் உள்ளன. இவை இரண்டும் சுமார் 6 அடி உயரம் உள்ளன. வாயிலுக்கு வலப்புறத்தில் நரசிம்மரும் இரணியனும் சண்டையிடுவது உருவாக்கப்பட்டுள்ளது. நரசிம்மருக்கு 8 கைகள் காணப்படுகின்றன. இடப் புறத்தில் நரசிம்மர் தனது மடியில் இரணியனைக் கொல்வது உருவாக்கப்பட்டுள்ளது. 10 கைகள் கொண்ட நரசிம்மரின் இரு கைகள் இரணியனது வயிற்றினுள்ளும், இரு கைகளில் இரணியனது குடலை மாலை போன்று பிடித்த நிலையிலும் உள்ளன. அவனது வலக்கை ஒன்று இரணியனது காலைப்பிடித்துக்கொண்டு இருக்க, இடக்கைகளில் ஒன்று தலையையும், மற்றொன்று கையையும் பிடித்தவாறு காணப்படு கின்றன. நரசிம்மர் மற்றும் இரணியன் ஆகியோரின் சண்டையைச் சித்திரிக்கும் இந்த இரண்டு சிலாவடிவங் களும் போரின் கடுமையைத் தெளிவாக உணர்த்தும் வகையில் அமைந்துள்ளன.

யோக நரசிம்மர், இலட்சுமி நரசிம்மர் ஆகியோரைத் தான் திருக்கோயில்களில் மூலவராக எழுந்தருளிவித்து வழிபடுவது மரபு. உக்ர நரசிம்மர் வடிவம் புடை சிற்பமாகவோ அல்லது சிலா வடிவமாகவோதான் திருச்சுற்று ஆகியவற்றில் காணப்படும். இதற்கு மாறாக சிங்கிரி கோயில் என்ற தலத்தில் உக்ர நரசிம்மர்

மூலவராகக் காணப்படுகிறான். பாண்டிச்சேரியினின்றும் மருகரை வழியாக விழுப்புரம் செல்லும் வழியில் உள்ள அபிடேகபுரத்தை அடுத்து இந்தக் கோயில் உள்ளது.

இங்கு மூலவராக உள்ள உக்ர நரசிம்மருக்கு 16 கைகள் காணப்படுகின்றன. அவனுடைய வலக்கைகள் எட்டினுள் ஒன்று ஓங்கிய நிலையிலும், மூன்றில் சுடராழி, கத்தி மற்றும் அம்பும், ஒரு கை ஒரு அசுரன் மூக்கைப் பிடித்த நிலையிலும், ஒரு கை முட்டியால் ஒரு அசுரனைக் குத்தும் நிலையிலும், ஒரு கை இரணியனது வலக்காலைப் பிடித்த நிலையிலும், மீதியுள்ள கை அவனது வயிற்றினுள்ளும் உள்ளன. அவனுடைய இடக்கைகள் எட்டினுள் ஐந்தில் இரணியனது குடலாகிய மாலை, சங்கு, கேடயம், வில் மற்றும் கதையும், ஒருகை ஒரு அவுணன் தலையைப் பிடித்த நிலையிலும், ஒரு கை இரணியனது தலையைப் பிடித்த நிலையிலும், மீதியுள்ள கை இரணியனது வயிற்றினுள்ளும் காணப்படுகின்றன. வைகானச ஆகமத்தின்படி இங்குள்ள வடிவிற்கு 16 கைகள் அமைக்கப்பட்டுள்ளன. ஆகமத்தில் விதிக்கப்பட்டபடி உருவாக்கப்பட்ட இங்குள்ள வடிவின் வலக்கை ஒன்று அபயமுத்திரையில் இல்லை என்பது குறிப்பிடத்தக்க வேறுபாடாகும் நரசிம்மத்தின் மடியில் கிடத்தப் பட்டுள்ள இரணியன் அசுரர்தம் பெருமான் என்பதற்கு ஏற்ப அவனது தலையில் கிரீடம் உள்ளது. நரசிம்மருடன் போரிட அவனது வலக்கையில் வாளும் இடக்கையில் கேடயமும் ஆகமத்தின்படி அமைக்கப்பட்டுள்ளன. ஆகமத்தில் விதிக்கப்பட்டபடி நின்ற நிலையில் இல்லாது சுகாசனத்தில் உட்கார்ந்துள்ள இந்த வடிவின் தொங்கிய கால் அசுரன் ஒருவனைக் கீழே நசுக்கிய நிலையில் உருவாக்கப்பட்டுள்ளது. வலக்கை ஒன்றினால் மூக்கைப் பிடிக்கப் பட்ட அசுரனால் மற்றொரு அவுணன் நசுக்கப்படுகிறான். நரசிம்மரின் இடப்புறத்தில் அசுரகுல குரு சுக்ராச்சாரியரும், தலைக்கு மேல் இரு கைகளைக் கூப்பி

வணங்கிய நிலையில் இரணியனின் மனைவியான லீலாவதியும், வலப்புறத்தில் அன்பன் பிரகலாதாழ்வாரும் அமைக்கப்படுள்ளனர். இங்கு உக்ர நரசிம்மர் மூலவராக உள்ள காரணத்தால் இந்த வடிவின் முகத்தில் அச்சத்திற்குப்பதில் அமைதி தவழ்கிறது. உக்ர நரசிம்மரை மூலவராகக் கொண்ட திருக்கோயில் வேறு எங்கும் இருப்பதாகத் தெரியவில்லை.

# 12. "ஓங்கி உலகளந்த உத்தமன்" [ஆண்டாள்]

[திருவிக்ரமாவதாரம்]

சிவபெருமானின் பல்வேறு திருவுருவங்களில் முப்புரம் எரி செய்த வடிவம் போன்று பாற்கடலில் பள்ளி கொண்டோனின் பத்துத் தோற்றங்களில் இராமன் மற்றும் கண்ணனுக்கு அடுத்தபடி உலகளந்தான் திருவுரு திருவருட்செல்வர்களாலும் செந்நாப்புலவர்களாலும் பெரிதும் போற்றப்பட்டுள்ளது. மேலும் திருமாலின் 5வது தோற்றமான இது மனிதனின் முழுவளர்ச்சி கொண்ட முதல் தோற்றம் என்பதும் குறிப்பிடத்தக்கது.

திருமாலின் அன்பனான பிரகலாதனின் பேரனான "தொல்சீர் விறல் மாவலி" பிரமனிடம் பெருவரங்கள் பெற்று இந்திரப்பதவியைக் கைக்கொண்டான். மூவுலகில் அறநெறி பிறழாது குடிகள் இறை அன்புடன் வாழ நல்லாட்சி புரிந்து வந்தான். இந்திரன் தன் பதவியை மீண்டும் பெற, கடல் நிறவண்ணனாம் திருமால் காசிப முனிவனுக்கு அதிதியிடம் உபேந்திரன் என்ற பெயரில் தோன்றினான். இதைக் கம்ப நாட்டாழ்வார் தமது இராமகாதையில்,

"நீல நிறத்து நெடுந்தகை வந்து ஓர்
ஆல் அமர் வித்தின் அருங்குறள் ஆனான்"

[1-8-20]

என்பர். அதாவது பெரிய ஆலமரம் முழுதும் அடங்கி உள்ள சிறிய ஆலம் விதை போன்று, நீல நிறத்தை உடைய திருமால் மிகக் குறுகிய வடிவத்துடன் தோன்றினான் என்பதாம்.

அமரர்களாலும் செய்தற்கரிய மாபெரும் வேள்வியைச் செய்து கொண்டிருந்த மாவலி, தன்னிடம் உள்ள செல்வத்தை எல்லாம் அந்தணர்களுக்கு அளிக்க முடிவு செய்து, அதன்படி வழங்கிக் கொண்டிருந்தான். அவன் பால் திருமாலாகிய வாமனன் மாணி (பிரமச்சாரி) வடிவில் சென்றதை,

''முப்புரி நூலினன் ; முஞ்சியன் ; விஞ்சை
கற்பது ஓர் நாவன்; அனல்படுகையன் ;
அற்புதன்—அற்புதரே அறியும் தன்
சிற்பதம் ஒப்பது ஓர் மெய்க்கொடு சென்றான்''
[1-8-21]

எனக் கம்பநாட்டாழ்வார் தமது சொற்றிறத்தால் படிப்போர்கண் முன் சித்திரித்துக் காட்டுகிறார். அதாவது முப்புரி நூலினையும், முஞ்சிப் புல்லால் முறுக்கி உண்டாக்கப் பெற்ற அரைநாணையும் அணிந்து இருந்தான்; மறைகளை ஓதும் நாவினை உடையவன்; தீப்பொருந்திய கையைக் கொண்டவன்; ஞானிகள் மட்டும் அறியத் தக்க ஞான வடிவினை உடையவன்; இத்தன்மைத்தான திருமால் மாவலியின் வேள்விக்குச் சென்றான் என்பதாம்.

வாமனன் மாவலியிடம் தன் கால்களால் மூவடி மண்வேண்ட, அவன் தந்தேன் என்றான். அது சமயம் அவனது ஆசானான சுக்ராச்சாரியார் வந்திருப்பவன் திருமால் எனச்சுட்டிக்காட்டி, அவன் மூவடி நிலம் கொடுப்பதினின்றும் தடுக்க முயன்றான். ''தன் பெருமைக்கு ஏற்ற வகையில் அல்லாது, திருமால் என்கைக்குக் கீழே தன்கைதாழ இரப்பானாகில், அதைக் காட்டிலும் வேறு பேறு எனக்கு இல்லை'' என்று மாவலி கூறியதுடன் அமையாது கொடையின் சிறப்பையும் எடுத்துக் கூறினான். தன் ஆசான் தடுத்தும் அவன் மூவடி மண்ணை நீர் வார்த்து வழங்கினான். உடனே

திருமால் கண்டவர்கள் வியப்பும் அச்சமும் அடையும்படி பேருருக்கொண்டு [விசுவரூபம் எடுத்து] தன் சேவடிகளால் மண்ணையும் விண்ணையும் அளந்தான். இதைப் பொய்கை யாழ்வார்,

> ''பார் அளவும் ஓர் அடி வைத்து ஓரடியும்பார் உடுத்த
> நீரளவும் செல்ல நிமிர்ந்ததே'' [முதல். திரு-3]

என்றும், சூடிக்கொடுத்த நாச்சியார்,

> ''அம்பரம் ஊடறுத்து ஓங்கி உலகளந்த
> உம்பர்கோமானே'' [திருப்-17]

என்றும் போற்றியுள்ளனர். மூன்றாவது அடிக்கு இடம் இல்லாது போகவே, மாவலியின் விருப்பட்படி அவன் தலைமீது தன் திருவடியை வைத்தான். அதனால் ''பெரியனாய் மாற்றாது வீற்றிருந்த மாவலி'' பாதளத்தில் அழுந்த, மூவுலக ஆட்சியை இந்திரன் மீண்டும் அடைந்தான்.

அரவணையானிடம் ஆராக்காதல் கொண்ட ஆழ்வார்கள் அண்ணலின் இப்பேராற்றல் மிக்க செயலில் திளைத்துத் தம்மை மறந்து தமது திருப்பாசுரங்களில் பலவாறாகப் போற்றிப் பாராட்டிப் புகழ்ந்துள்ளனர். குலசேகரப்பெருமாள், தொண்டரடிப் பொடியாழ்வார், மற்றும் திருப்பாணாழ்வார் ஆகியோர் ஒவ்வோர் இடத்திலும், திருமழிசைப்பிரான் 9 இடங்களிலும், ஆண்டாளும் பொய்கை யாழ்வாரும் 13 இடங்களிலும், பூதத்தாழ்வார் 14 இடங்களிலும், பெரியாழ்வார் 15 இடங்களிலும், பேயாழ்வார் 18 இடங்களிலும், மங்கை மன்னன் 65 இடங்களிலும், நம்மாழ்வார் 80 இடங்களிலும் இதனைக் குறிப்பிட்டுள்ளனர். இதினின்றும் இச்செயலை நம்மாழ்வார் அதிக அளவில் போற்றியுள்ளார் என்பது தெரியவருகிறது. திருமாலின்

அளப்பற்ற ஆற்றலை ஆழ்வார்களில் தலை சிறந்த நம்மாழ்வார் பெரும் அளவில் போற்றியுள்ளது சாலப் பொருத்தமே.

திருமாலினது வாமனவடிவைக் "கோலக்குறளுருவாய்" என்றும் "பொல்லாக்குறளுருவாய்" என்றும் ஆண்டாளும், "பொங்கு இலங்குபுரி நூலும் தோலுந் தாழப்பொல்லாக் குறளுருவாய்" என மங்கைமன்னனும் குறிப்பிட, நம்மாழ்வார் "பொல்லாதத் திருக்குறளா" என அழகுபட அழைக்கிறார். இவ்வாறு ஆழ்வார்கள் குறளுருவை "பொல்லாது" என்று குறிப்பிடக்காரணம், அவன்தன் சிறிய காலால் மூவடிமண் இரந்து பேருருவில் மூன்று உலகங்களையும் அளந்ததுதான். இங்ஙனம் மாவலி வஞ்சிக்கப்பட்டதை,

"இரக்க மண் கொடுத்தவற்கு இரக்கம் ஒன்று
மின்றியே
பரக்க வைத்து அளந்து கொண்ட பற்ப பாதன்"
[திரு. 32]

எனத் திருமழிசைப்பிரானும்,

"கள்ளக் குறளாய் மாவலியை வஞ்சித்து உலகம்
கைப்படுத்து" [5-1-2]

எனமங்கை மன்னனும்,

"மின் கொண்ட சேர்புரி நூல் குறளாய் அகன்
ஞாலங் கொண்ட
வன் கள்வன்" [6 1-11]

என நம்மாழ்வாரும் தம் திருப்பாசுரங்களில் குறிப்பிட்டுள்ளனர். மாவலியின் மகனான நமுசி என்பான் திருமாலை நோக்கி, "நீ உன் சிறிய வடிவில் என் தந்தையை அணுகி உன் காலால் மூவடிநிலம் இரந்தாய்.

என் தந்தை அதை அளித்தபின், நீ பேருருவைக் கொண்டு இந்த மூவுலகையும் அளந்த இந்த வஞ்சகத்தை என் தந்தை அறிந்திலன். நீ எந்த வடிவில் மண்ணை இரந்தாயோ, அதே சிறிய உருவில் அளந்து கொள்'' என்றான். அவனைத் திருமால் தன் ஒரு கையால் பற்றி வானில் சுழற்றினான். இந்த நிகழ்ச்சியைப் பெரியாழ்வார்,

'' என்னிதுமாயம் என்னப்பன் அறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டு அளவாய் என்ன
மன்னு நமுசியை வானில் சுழற்றிய
மின்னுமுடியானே'' [1-8-8]

என அருளியுள்ளார். ஆழ்வார்கள் தம் திருவாக்கு களில் திருமால் மாவலியை வஞ்சித்ததை இகழ்ந்தது போன்று புகழ்ந்து உள்ளது உய்த்து உணரத்தக்கது. மூவுலகங்களையும் தன் தாமரைத் தாள்களால் அளந்த பின், அந்தக்களிப்பில் திருமால் நடனமாடினானாம. இதை;

''குடமாடி இம்மண்ணும் விண்ணும் குலுங்க
உலகளந்து
நடமாடிய பெருமானே'' [திரு: 38]

என்றார் நம்மாழ்வார்.

சங்ககால இலக்கியங்களிலும் ஏனையவற்றிலும் பெருமைமிகும் பேராற்றல் மிக்க இந்த வடிவினைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. எடுத்துக் காட்டாக 'முல்லைப் பாட்டு' என்ற சங்க காலநூலில் நப்பூதனார்,

''நீர் செல நிமிர்ந்த மாஅல்'' [வரி 3]

என்பர். அதாவது மாவலியால் மூவடிமண் வழங்கி யமைக்கு வார்த்துக் கொடுத்த நீர் தன் கையில் விழுந்தவுடன் பேருருக் கொண்ட திருமால் என்பதாம்.

'பெரும் பாணாற்றுப்படை' என்ற சங்கநூலில் கடியலூர் உருத்திரங்கண்ணனார்,

''இருநிலங்கடந்த திருமறுமார்பன்
முந்நீர் வண்ணன்'' [வரி 29-30]

என இப்பெருநிகழ்ச்சியை எடுத்து உரைக்கிறார். அதாவது பெரிய நிலத்தை அளந்த-திருமகளை மார்பில் கொண்டவனும் கடல் நிறக்கடவுளுமாகிய திருமால் என்பதாம். பரிபாடல்' என்ற சங்க கால நூலில் கடுவன் இளவெயினனார் திருமாலின் திருவடியினை,

''கீழேழுலகமும் உற்ற அடி'' [வரி 20]

எனக்குறிப்பிட்டுள்ளார். அதாவது திருமாலது ஒரு திருவடி கீழே உள்ள ஏழு உலகங்களையும் அளந்தது என்பதாம்.

ஐம்பெருங் காப்பியங்களில் இளங்கோவடிகள் தமது 'சிலப்பதிகாரத்திலும்', சாத்தனார் தமது 'மணிமேகலை' யிலும் 'நீணிலம் அளந்தோன்' என இப்பெருஞ் செயலினைக்குறிப்பிட்டுள்ளனர். மேலும் இளங்கோவடிகள் 'ஆய்ச்சியர்குரவை' யில்,

''திரண்டு அமரர் தொழுதேத்தும் திருமால்நின் செங்கமல
இரண்டடியால் மூவுலகும் இருள்தீர நடந்தனையே'' (1)

என்றும்,

''மூவுலகும் ஈரடியான் முறை நிரம்பா
வகை முடியத்தாவிய சேவடி'' (2)

என்றும் விரிவாக எடுத்து உரைக்கிறார்.

ஆகமத்தின்படி, இந்த வடிவம் இரண்டு பிரிவினைக் கொண்டது. முதல் பகுதியில் வாமனன் மாவலியால் மூவடி நிலம் இரப்பது, இரண்டாவது பகுதியில் நமாலை உலகளந்தானாகப் பேருருவில் அமைப்பது.

வாமனனை இரண்டு விதமாக உருவாக்க ஆகமங்களில் விதிகள் கூறப்பட்டுள்ளன. 2 கைகள் கொண்ட வாமனன் கைகளில் குடையும் கமண்டலத்தை யும் வைத்து இருப்பான். "சத்திரம் ஏந்தித்தனியொரு மாணியாய்" என்பர் பெரியாழ்வார். உச்சந்தலையில் குடுமியும் மார்பில் முப்புரிநூலும் காணப்பட, மான் தோலை ஆடையாக அணிந்து இருப்பான். அவனது மூன்றாவது விரலில் தர்ப்பையாலான மோதிரம் அமைக்கப்படவேண்டும். இவையாவும் அவன் மாணி என்பதைச் சுட்டிக் காட்டும். அவன் கையில் உள்ள புத்தகங்கள் அவன் வேதங்களைக் கற்கும் மாணவன் என்பதைக் குறிப்பிடும். அவனது முகத்தில் அறிவுக்களை ஒளிவிட்டுத் திகழவேண்டும். இதற்கு மாறுபட்ட முறையில் இந்த வடிவைக் கூன்விழுந்த முதுகும், பெருவயிறும் உடைய அழகற்றவனாகவும் உருவாக்கலாம்.

மூவுலகும் அளந்தானின் திருவுருவை இடக்காலை நீட்டிய நிலையை அடிப்படையாகக் கொண்டு மூன்று வகைகளாக வகுக்கப்பட்டுள்ளது. அவையாவன: 1) வலது முழங்காலுக்கு நேரே நீட்டி இருத்தல்; 2) முகத்தில் மூக்கிற்கு நேரே நீட்டி இருத்தல்; 3) தலையில் நெற்றிக்கு நேரே நீட்டி இருத்தல். வலது முழங்காலுக்கு நேரே இடக்கால் நீட்டி இருந்தால், அது மண்ணுலகத்தை அளப்பதையும், மூக்கிற்கு நேரே நீட்டியிருந்தால் அது மண்ணுக்கும் விண்ணுக்கும் இடைப் பட்ட உலகைக் கடப்பதையும் அதாவது விண்ணை அளப்பதற்காக மேல் நோக்கிச் செல்வதையும், நெற்றிக்கு நேரே நீட்டியிருந்தால், அது

அளப்பதைக் குறிப்பதாகவும் கொள்ளப்படுகிறது; இந்த வடிவிற்கு 4 அல்லது 8 கைகளை அமைக்கலாம்; 4 கைகள் கொண்ட வடிவில் வலக்கை ஒன்றில் சங்கும் இடக்கை ஒன்றில் சக்கரமும் காணப்பட, மற்றொரு வலக்கையை அபய அல்லது வரத முத்திரையில் அமைக்கலாம் அல்லது உள்ளங்கை மேலே நோக்கியபடி மேலே நீட்டியபடி உருவாக்கலாம். மற்றொரு இடக்கையை நீட்டிய காலை ஒட்டி நேராக நீட்டி இருக்கவேண்டும். 8 கைகள் கொண்ட வடிவில் 5 கைகளில் சங்கு, சக்கரம், கதை, சார்ங்கம் என்ற வில், மற்றும் கலப்பை ஆகியவை காணப்பட, ஏனைய மூன்று கைகளையும் 4 கைகள் கொண்ட வடிவில் உள்ளது போல் உருவாக்க வேண்டும். வலக்கால் நிலத்தில் ஊன்றி இருக்க, இடக்கால் மேலே தூக்கிய நிலையில் இருக்க வேண்டும். பல அணிகலன்களை அணிந்துள்ள அவனது தலைக்குமேல் இந்திரன் குடையைப் பிடித்துக்கொண்டு இருக்க, காற்றுக்கடவுளும் மழைக்கடவுளும் இருபுறமும் சாமரை வீசிக்கொண்டு இருக்க வேண்டும். இடப்புறம் திங்களும், வலப்புறம் ஞாயிறும் காணப்பட, சனகர், சனற்குமாரர் என்ற இரு முனிவர்கள் மூவடிமண் கொண்டானுக்கு அருகில் உருவாக்கப்படவேண்டும். திருமாலினது மேலே தூக்கிய நிலையில் உள்ள இடக் காலை பிரமா தன் கையில் தாங்கியபடி, தன் கமண்ட லத்தில் உள்ள நீரால் கழுவவேண்டும். சிவபெருமான் திருமாலின் முகத்திற்கு அருகிலும், மாவலியின் மகனான நமுசி காலுக்கு அருகில் வணங்கிய நிலையிலும் காட்டப் படவேண்டும். மாவலி மூவடிமண் கொடுப்பதைத் தடுக்க முயற்சி செய்த ஆசானான சுக்கிராச் சாரியாரைத் திருமாலின் ஊர்தியான கருடன் தன்கையில் பிடித்த நிலையில் இருக்கவேண்டும்; வலப்புறம் தன் கையில் குடையுடன் வாமனன் இருக்க, அவனுக்கு எதிரில் மாவலி தன் கையில் பொற்குடத்துடன் மூவடி நிலம் அளிக்கும் நிலையில்-உருவாக்கப்படவேண்டும். மாவலிக்குப்பின்னால்

அவனது வாழ்க்கைத் துணைவியும், அம்பரம் ஊடறுத்த அண்ணலின் தலைக்கு மேல் முரசு அறையும் நிலையில் சாம்பவானும் காட்டப்படவேண்டும். ''சில்பரத்தினம்'' என்ற நூலின்படி. மண்ணளந்தானின் இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் நீட்டி இருக்க வேண்டும். 'விஷ்ணு தர்மோத்திரம்' என்ற நூலின்படி, படைக்கலங்களைப் படைக்கலங்களாகக் காட்டாது மானிட உருவத்தில் உருவாக்கப்படவேண்டும்.

முற்காலத்தில் இந்த வடிவிற்கு 8 கைகள் அமைக்கப் பட்டன. நாளடைவில் 8 கைகளுக்குப்பதில் 4 கைகள் உருவாக்கும் மரபு ஏற்பட்டது.

சென்னையை அடுத்துள்ள மாமல்லபுரத்தில் உள்ள வராக மண்டபத்தில் இந்த வடிவம் காணப்படுகிறது; இந்தத் திருவுருவின் வலக்கால் ஊன்றி இருக்க, இடக்கால் முகத்திற்கு நேரே உயர்த்தி உருவாக்கப்பட்டு உள்ளது. 8 கைகள் கொண்ட இவனது 2 வலக்கைகளில் கத்தியும், சக்கரமும் காணப்பட, ஒரு கை மேலே நீட்டிய படி உள்ளது. இடக்கைகள் இரண்டில் சங்கும், கேடயமும் இருக்க, மற்றொரு கை நீட்டிய இடக்காலை ஒட்டிய நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. ஆகமத்தில் கூறப்பட்ட கதை, சார்ங்கம் மற்றும் கலப்பைக்குப் பதிலாக இங்குக்கத்தியும் கேடயமும் உருவாக்கப்பட்டு உள்ளன. இருபுறமும் இமையோர்கள் காணப்பட, இவனது தலைக்கு மேல் இசைக்கருவியுடன சாம்பவான் காணப்படுவது ஆகமத்தில் விதித்தபடி உள்ளது. இவன் அணிந்துள்ள கிரீட மகுடம் பொலிவுடன் உருவாக்கப் பட்டுள்ளது;

சேலம் மாவட்டம் நாமக்கல்லில் அதியமான் மன்னன் குணசீலன் என்பான் காலத்தில் அமைக்கப் பெற்ற இரு குடைவரைக் கோயில்கள் உள்ளன; மேற் புறமாக உள்ள குடைவரையில் கருவறைக்கு இடப்புறம்

திருமாலின் விண்ணுற நிவந்தானின் வடிவம் புடை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளது.

''அருமாநிலம் அன்று அளப்பான் குறளாய்
அவுணன் பெருவேள்வியில் சென்றிரந்த
பெருமான்'' [3-2-4]

என்ற மங்கை மன்னன் வாக்கிற்கு ஏற்ப மாவலியிடம் மூவடி நிலம் இரந்த வாமனனின் வடிவம் ஒரு பக்கம் காணப்படுகிறது. மற்றுமோர் புறத்தில் மாவலி மூவடி மண் வழங்குவதினின்றும் தடுக்கும் அவனது ஆசானான சுக்கிராச்சாரியைக் கருடன் அடிப்பது போன்று உருவாக்கப்பட்டுள்ளது. இன்னுமோர் புறத்தில் குதிரை புடைசிற்பமாக உள்ளது. வேள்வி நடக்கும் இடத்தில் இது நிகழ்வதைக் காட்டுகிறது.

''மாவலி வேள்வியில் மாணுருவாகிச்சென்று
மூவடி தாவென்று இரந்த இம்மண்ணை
ஓரடியிட்டு இரண்டாம் அடிதன்னிலே
தாவடியிட்டான் [2-10-7]

என்ற பெரியாழ்வார் திருவாக்கிற்கேற்ப, விண்ணை அளக்கும் திரிவிக்ரம வடிவம் கலையழகுடன் காணப்படுவது குறிப்பிடத்தக்க ஒன்றாம். தலையில் கிரீட மகுடம் இலங்க, 4 கைககள் கொண்ட இந்த வடிவின் பின் வலக்கையில் கத்தியும் பின் இடக்கையில் சங்கும் இருக்க, முன் இடக்கை கடி முத்திரையில் உள்ளது. முன்வலக்கை,

''என்னிதுமாயம் என்னப்பன் அறிந்திலன்
முன்னையே வண்ணமே கொண்டு அளவாய் என்ன
மன்னுநமுசியை வானில் சுழற்றிய
மின்னு முடியானே'' [1-8-8]

என்ற பெரியாழ்வாரின் அருள் வாக்கிற்கு இணங்க, நமுசியை வானில் சுழற்றுவது போன்று உருவாக்கப் பட்டுள்ளது. ஆகமங்கள் நமுசியை விண்ணளந்தானின் காலருகில் கூப்பிய கைகளுடன் காட்டவேண்டும் என்று விதித்துள்ளன என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது. நமுசிக்கு அருகில் சாம்பவன் உள்ளான். பின் இடக் கையில் சங்கும், பின் வலக்கையில் கத்தியும், முன் இடக்கை கடி முத்திரையிலும், முன் வலக்கை நீட்டியபடி அமைந்துள்ளதும் ஆகமங்களில் கூறப்பட்டதற்கு வேறு பட்டுக் காணப்படுகின்றன. 'சில்பரத்தினம்' என்ற நூலின்படி, இங்கு இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் மேலே தூக்கி உள்ளது. இது முகம் வரை உயர்த்திக் காட்டப்பட்டுள்ளது.

கீழ்ப்புறமாக உள்ள குடைவரைக் கோயிலில் கருவறையை ஒட்டி வாமனன் வடிவம் காணப்படுகிறது. 2 கைகள் கொண்ட இந்த வடிவின் ஒரு கையில் குடை இருக்க, மற்றொருகை மாவலியிடம் மூவடிமண் பெற நீட்டிய நிலையில் அமைக்கப்பட்டுள்ளது. இங்குள்ள வடிவம் மேற்புறமாக உள்ள குடைவரைக்கோயிலில் புடைசிற்பமாக உள்ள வாமனனைக் காட்டிலும் இளமை உடையவனாக உருவாக்கப்பட்டுள்ளது. இதை அடுத்துள்ள உலகளந்தானின் வடிவில் 'சில்பரத்தினம்' என்ற நூலின்படி இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் மேலே தூக்கிய நிலையில் காணப்படுகிறது. 4 கைகள் கொண்ட இந்த வடிவின் முன்வலக்கை நீட்டியும், முன்இடக்கை கடி முத்திரையிலும், பின்இடக்கையில் சங்கும் உள்ளன. இவையும் ஆகமத்தில் கூறப்பட்டதற்கு வேறுபட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாம். இந்தத் திருவுருக்குமேல் சாம்பவானும், கந்தர்வர்களும் காணப்படுகின்றனர்.

திருப்பரங்குன்றத்தில் உள்ள பாண்டியர்கள் உருவாக்கிய குடைவரைக் கோயிலில் உக்ர நரசிம்மரும்,

வராக வடிவமும் உள்ளன. மதுரையை அடுத்துள்ள ஆனைமலையில் உள்ள குடைவரைக் கோயில்கள் ஒன்றில் நரசிம்மர் யோக வடிவில் மூலவராக அமைக்கப் பட்டுள்ளான். ஆனால் பாண்டியர்களின் குடைவரைக் கோயில்களில் மண்ணளந்தான் வடிவம் இல்லை என்பது குறிப்பிடத்தக்கது. முத்தரையர்களின் குடைவரைக் கோயில்களிலும் இத்தகு வடிவம் இல்லை. மேலும் நரசிம்மரையும் வராகத்தையும் மூலவராகக் கொண்ட குடைவரைக் கோயில்கள் உள்ளனவே அன்றி, உலகளந்தானை மூலவராக உடைய குடைவரைக் கோயில்கள் இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாம்.

குடைவரைக் கோயில்களை அடுத்து அமைக்கப் பெற்ற கற்றளிகளில் காஞ்சிபுரத்தில் உள்ள கைலாய நாதர் கோயிலின் திருச்சுற்றில் தென்புறத்தில் ஒரு சிற்றாலயத்திலும், வடபுறத்தில் ஒரு சிற்றாலயத்திலும் இந்த வடிவம் காணப்படுகிறது. அதே நகரில் உள்ள வைகுண்டப் பெருமான் கோயிலில் மாவலியிடம் மூவடி மண் இரந்து பெறும் வாமனனின் வடிவமும், 8 கைகள் கொண்ட விண்ணளந்தான் வடிவமும் அமைக்கப் பட்டுள்ளன.

விண்ணுற விம்ம வளர்ந்த திருமாலினது திருவுருவம் மூலவராக உள்ள திருக்கோயில்களில் ஒன்று காஞ்சிபுரத் திலுள்ளது. சுமார் 30 அடி உயரமுள்ள இந்த வடிவத்தின் வலக்கால் ஊன்றி இருக்க, இடக்கால் மேலே தூக்கிய நிலையில் உள்ளது. வலக்காலுக்குக் கீழே மாவலி காணப்படுவது இங்குள்ள ஒரு சிறப்பாகும். இது திருமால் மூன்றாவது அடிக்காக மாவலியின் தலை மீது காலைவைத்துப் பாதாளத்தில் அழுத்துவதைச் சுட்டிக் காட்டுகிறது. மாமல்லபுரத்திலும், நாமக்கல்லி லும் கால்முகம்வரை உயர்த்தி காட்டப்பட்டிருக்க, இங்கு இடக்கால் நாபி வரை தான் தூக்கிய நிலையில் உள்ளது. 4 அல்லது 8 கைகள் அமைக்கப்படாமல் 2 கைகள்தாம்

இந்த வடிவிற்கு உள்ளது மற்றுமொரு சிறப்பாகும்; இரு கைகளும் நீட்டிய நிலையில் காணப்படுகின்றன; கைகளில் படைக்கலங்கள் ஏதும் அமைக்கப்படவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாம்.

உலகளந்தானை மூலவராகக் கொண்ட சிறப்புமிக்க கோயில் திருக்கோவிலூரில் உள்ளது: ஆழ்வார்களில் முதல் மூவர் என்று பரவப்பெறும் பொய்கையாழ்வார், பேயாழ்வார் மற்றும் பூதத்தாழ்வார் ஆகியோர் ஒன்றாகக் கூடிய தலம் இது. பொய்கையாழ்வார், "காமர் பூங்கோவல்" என்றும், பூதத்தாழ்வார், "கோவல்.......ஏவல்ல எந்தைக்கு இடம்" என்றும், மங்கைமன்னன் "செஞ்சாலிவிளை வயலுள் திகழ்ந்து தோன்றும் திருக்கோவலூர்" என்றும் மங்களாசனம் செய்த திருத்தலம் இது.

சுமார் 18 அடி உயரத்துடன் முகப்பொலிவுடன் திகழும் இங்குள்ள மூலவர் ஏனைய கோயில்களில் உள்ள மூலவரைப் போன்று கல்லாலோ அல்லது சுதையாலோ செய்யப்பட்டவன் அன்று. இது மரத்தாலான வடிவம். நாமக்கல் குடைவரைக் கோயில்களில் உள்ள வடிவங்கள் போன்று இங்கும் இடக்கால் ஊன்றி இருக்க, வலக்கால் தூக்கிய நிலையில் காணப்படுகிறது. காஞ்சிபுரத்தில் உள்ளது போன்று இங்கும் கால் நாபி வரைதான் தூக்கி அமைக்கப்பட்டுள்ளது. தூக்கிய திருவடியைப் பிரமா பூசிக்கும் நிலையில் காணப்படுகிறான். 4 கைகள் கொண்ட இந்த வடிவின் முன் வலக்கை தூக்கிய வலக்காலை ஒட்டி நீட்டியும், முன் இடக்கை கடி முத்திரையிலும், பின் வலக்கையில் சங்கும், பின்இடக் கையில் சக்கரமும் உள்ளன. முன்வலக்கையில் ஒரு விரலை நீட்டி உள்ளது மூன்றாவது அடிக்கு எங்கே காலை வைத்து அளப்பது என்று கேட்பதைக் குறிப்பிடு கிறது: இவனது காலுக்கு அருகில் ஆகமத்தில் விதித்த படி நமுசி கை கூப்பிய நிலையில் காணப்படுகிறான்.

முதல் மூன்று ஆழ்வார்களும், மார்க்கண்டேயரும், சுக்கிராச்சாரியார் ஆகியோரும் இங்கு உள்ளனர்.

திருமாலுக்கு ஆயிரம் பேர்கள் இருப்பினும், 24 பெயர்கள் தாம் சிறப்பு மிக்கனவாகக் கருதப்படுகின்றன. இந்தப் பெயர்களால் குறிக்கப்படும் வடிவங்கள் ஒன்று போன்று இருப்பினும், சங்கு, சக்கரம், கதை மற்றும் தாமரைப்பூ ஆகியவை எந்த எந்தக் கைகளில் உள்ளன என்ற அடிப்படையில் பெயர்கள் வேறுபடுகின்றன. 'ரூபமந்தனம்' என்ற நூலின்படி, கேசவன் மற்றும் வாசுதேவன் என்ற வடிவங்களுக்கும், 'பத்மபுராணம்' என்ற நூலின்படி கேசவன், பிரத்யுமன் மற்றும் அரி என்ற வடிவங்களுக்கும் வலக்கையில் சங்கும், இடக்கையில் சக்கரமும் அமைக்கலாம். இருப்பினும் திருமாலின் வடிவங்களில் பொதுவாக வலக்கையில் சக்கரமும், இடக்கையில் சங்கும் தான் காணப்படுகின்றன. ஆழ்வார்களும் தங்களது திருப்பாசுரங்களில் இடக்கையில் சங்கும், வலக்கையில் சக்கரமும் உள்ளதாகத்தான் மங்களாசாசனம் செய்துள்ளார்கள். எடுத்துக் காட்டாக,

"வலத்துறையும் சுடராழி" [பெரியாழ்வார். திரு. 2]

"வலனேந்தும் சக்கரத்தான்"

[மங்கை மன்னன் 8-4-6]

"வலந்தாங்கு சக்கரத்தண்ணல்"

[நம்மாழ்வார் 3-7-9]

"சங்கு இடக்கையிற் கொண்டவிமலன்"

[ஆண்டாள் 5-2]

"சங்கும் இடத்தான்" [குலசேகர ஆழ்வார் 4-1]

"இடங்கை வலம்புரி நின்று ஆர்ப்ப

[பூதத்தாழ்வார்: இர: திரு: 71]

ஆனால் இங்குச் சங்கும் சக்கரமும் கைகளில் மாறி உள்ளமைக்குக் காரணம் இமையோர்களின் துன்பத்தைத்

துடைக்க மாவலியின் பெருவலிமையை அடக்கிய மகிழ்ச்சி என்று தான் சொல்லப்படுகிறது.

> ''அடியால் படி கடந்த முத்தோ—அதன்றேல்
> முடியால் விசும்பு அளந்த முத்தோ—நெடியாய்
> செறிகழல் கொள் தாள் நிமிர்த்துச்சென்று
> உலகமெல்லாம்
> அறிகிலமால் நீ அளந்த அன்று'' [பெரிய திரு. 27]

என அறிதுயிலோனின் மனமகிழ்ச்சிக்குரிய காரணத்தை நம்மாழ்வார் கேட்கிறார். மண்ணுலகை அளந்தமையால் இந்த மகிழ்ச்சி உண்டானதா அல்லது விண்ணைத்தாவி அளந்ததால் ஏற்பட்டதா என்கிறார். எனவே மாவலியின் பெருவலியைத் தொலைத்தது திருமகள் கேள்வனின் மகிழ்ச்சிக்குக் காரணம் என்பது புலனாகிறது. இதனால் தான் இங்குச் சங்கும் சக்கரமும் இடம் மாறியுள்ளன என்று சொல்லப்படுகிறது. ஆகமத்தில் சங்கை வலக் கையிலும், சக்கரத்தை இடக்கையிலும் அமைக்க விதி இருப்பினும், பொதுவாக இருப்பது போலன்றி இங்குச் சங்கும் சக்கரமும் கைகளில் இடம் மாறி இருப்பது இதன் தனிச்சிறப்பாகும்.

முற்காலத்தில் வீரம் எவ்வாறு பெரிதும் போற்றப் பட்டது என்பதற்குச் சங்ககால இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. ஒவ்வொரு மன்னனும் தான் வீரம் மிக்கவன் என்பதைக் காட்ட அரியணை ஏறியவுடன் அண்டை நாடுகள்மீது படையெடுத்து வெல்வதை மரபாகப் பின்பற்றப்பட்டு வந்தது. உலகளந்தான் தன் பேராற்றலால் உலகைக் கைப்படுத்துவது போன்று தாங்களும் தங்கள் வீரத்தால் உலகைத் தம் ஆளுகைக்குக் கீழ்ப்படுத்துகிறோம் என்பதை உலகுக்கு உணர்த்த முற்கால மன்னர்கள் திரிவிக்ரம வடிவை ஆங்காங்கு அமைத்தனர்.

முற்றும்.

# பிற்சேர்க்கை—1

## ஆசனம்

உத்குடி ஆசனம் : ஒருகால் இருக்கை மீது குத்திட்டும், மற்றொரு கால் தொங்கிய நிலையிலும்.

சுகாசனம் : உடல் எப்பக்கமும் சாய்வின்றி, நேராக நிமிர்த்தி, ஒரு கால் பொது வாக இடக்கால் இருக்கை மீது படுக்கையாக இருக்க, மற்றொரு கால் தொங்கிய நிலையில் இருத்தல்.

வீராசனம் : ஒரு கால் தொங்க விட்டுக் கீழே ஊன்றி இருக்க, மற்றொரு காலை அதன் மீது படுக்கையாகவும், விறைப்பாகவும் நீட்டி இருத்தல்; உடல் சமநிலையில் நேராக இருத்தல்.

## முத்திரை

அபய முத்திரை : விரல்கள் மேல் நோக்கி நீட்டிய நிலையில், உள்ளங்கை எதிரில் இருப்பவர் பக்கம் திரும்பி இருக்க தன்னை அடைக்கலம் அடைந் தோரை ''அஞ்சேல்'' என்று கூறுமாப்போல் இருத்தல்.

கத்யவலம் பித முத்திரை : கை கீழே தொங்கிய நிலை.



**வரத முத்திரை :** இடக்கை உள்ளங்கை எதிரில் இருப்பவர் பக்கம் திரும்பி இருக்க, விரல்கள் கீழ் நோக்கி தாளினைச் சுட்டிக்காட்ட, தன் அடிகளை அடைந்தால், வேண்டிய வேண்டிய வாறு பெறலாம் எனக் கூறுமாப் போன்று இருத்தல்.

**கடக முத்திரை :** கடகம் என்றால் நண்டு, பெருவிரல் நீங்கலாக ஏனைய நான்கும் வளைந்து பெருவிரல் அருகில் காணப்படும். ஆனால் பெருவிரலைத் தொடாது, நண்டு போன்று தோற்றம் அளிக்கும்.

**கடிமுத்திரை :** கடி என்றால் இடுப்பு, கை இடுப்பில் ஊன்றிய நிலை.

**சத்திரிமுத்திரை :** மோதிர விரலும் பெருவிரலும் உள்ளங்கை நடுவில் ஒன்று சேர, சுண்டு விரல் சிறிது வளைய, மீதி யுள்ள ஆட்காட்டி விரலும் பெரு விரலும் ஆங்கில எழுத்து 'V' போன்று மேலே நோக்கி நீட்டி இருத்தல், உள்ளங்கை எதிரில் இருப்பவரை நோக்கி இருத்தல்.

**சூசிமுத்திரை :** ஆட்காட்டி விரல் மட்டும் நீட்டி, எதிரே இருக்கும் பொருளைச் சுட்டிக் காட்டுதல்—ஏனைய விரல்கள் மடங்கி இருத்தல்.

**விசுமயமுத்திரை :** முன்கை மேல் நோக்கி இருக்க, விரல்கள் நீட்டிய நிலையில், புறங்கை எதிரில் இருப்பவரை நோக்கி

இருத்தல் — இது வியப்பைக் காட்டும் முத்திரையாம்.

ஊருமுத்திரை : ஊரு என்றால் தொடை. கைகள் தொடை மீது ஊன்றிய நிலை; கால்களின் நிலை

சமபங்க நிலை : இரு கால்களும் நேராக நிற்பது

திரிபங்க நிலை : ஒருகால் நேராகவும், மற்றொரு கால் சற்று வளைந்தும் காணப்படும்.

## பிற்சேர்க்கை—2

### BOOKS CONSULTED


1. Elements of Hindu Iconography-Vol. I-IV—T. A. Gopinatha Rao.
2. Ancient India No. 6—Geographical and Chronological factors in Indian iconography—C. Sivaramamurthy
3. Early Chola Art—S. R. Balasubramanyam.
4. Early Chola Temples — S. R. Bala-Subramanyam.
5. Middle Chola Temples — S. R. Bala-Subramanyam.
6. Nataraja in Art. Thought & Culture—C. Sivaramamurthi.
7. Cave Temples of Pallavas—K. R. Srinivasan.
8. Ramanathapuram – An archaeological Guide—Dr. R. Nagaswami & N. S. Rama-swami.
9. திருவாசகம்—சித்தாந்த பண்டிதர் திரு. ப. இராமநாதபிள்ளை விளக்க உரை—கழக வெளியீடு.
10. திருத்தொண்டர் புராணம்—சிவக்கவிமணி திரு. C. K. சுப்பிரமணிய முதலியார் B.A., அவர்கள் உரை.
11. முருகன் அல்லது அழகு—திரு. வி. கலியாண சுந்தரனார்.

கிடைக்குமிடம் :

திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

தலைமை நிலையம் :

154, டி. டி. கே. சாலை,
ஆழ்வார்பேட்டை, சென்னை 18

கிளை நிலையங்கள் :

79, பிரகாசம் சாலை (பிராட்வே),
சென்னை-108.

திருநெல்வேலி-6. மதுரை-1.
கோயமுத்தூர்-1. கும்பகோணம்-1
திருச்சிராப்பள்ளி-2. சேலம் 1.

அப்பர் அச்சகம், சென்னை-108.